**முனைவர் இரா.சிவகுமார்**
உதவிப்பேராசிரியர்,
தமிழாய்வுத்துறை,
திரு கொளஞ்சியப்பர் அரசு கலைக் கல்லூரி(நிலை–1)
விருத்தாசலம் - 606 001.

# நெறியாளர் சான்றிதழ்

**‘சங்கப் புலவர்களின் புறப்பாடல்களில் பதிவும் பார்வையும்**’ என்னும் தலைப்பில் அமைந்த இவ்வாய்வேடு, திருவள்ளுவர் பல்கலைக் கழகத்திற்கு முனைவர் பட்டத்திற்காக அளிக்கப்படுகிறது. இந்த ஆய்வேடு எனது மேற்பார்வையில் ஆய்வாளர் ப.அருளமுதம் என்பவரால் தன்னியலாக உருவாக்கப் பெற்றதுஎனவும், இந்த ஆய்வேடு வேறு எந்தப் பட்டத்திற்காகவும் இதுவரைப் பயன்படுத்தப்படவில்லை எனவும் சான்றளிக்கப்படுகிறது..

இடம்: விருத்தாசலம் (இரா.சிவகுமார்)

நாள்: நெறியாளர்

**ப.அருளமுதம்,**
முனைவர்பட்டஆய்வாளர்.
தமிழாய்வுத்துறை,
திரு கொளஞ்சியப்பர் அரசு கலைக் கல்லூரி (நிலை–1)
விருத்தாசலம் - 606 001.

## ஆய்வாளர்உறுதிமொழி

**'சங்கப் புலவர்களின் புறப்பாடல்களில் பதிவும் பார்வையும்**' எனும் தலைப்பில் உருவாக்கப் பெற்ற இவ்வாய்வேடு, விருத்தாசலம், திரு கொளஞ்சியப்பர் அரசு கலைக் கல்லூரி (நிலை–1) தமிழாய்வுத் துறையில் முனைவர் பட்டத்திற்காக உருவாக்கப் பெற்றதாகும். என் சொந்த முயற்சியால் உருவான இந்த ஆய்வேடு இதற்கு முன்பு வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கும் அளிக்கப் பெறவில்லை என்று உறுதியளிக்கிறேன்.

இடம்: விருத்தாசலம் ப.அருளமுதம்
நாள்: ஆய்வாளர்

# நன்றியுரை

திருவள்ளுவர் பல்கலைக் கழகத்துடன் இணைவுப் பெற்றுள்ள விருத்தாசலம், திரு கொளஞ்சியப்பர் அரசு கலைக் கல்லூரியில் முனைவர் பட்ட வாய்ப்பு நல்கிய திருவள்ளுவர் பல்கலைக் கழகத் துணைவேந்தர், பதிவாளர், ஆட்சிக்குழுஉறுப்பினர்கள் ஆகியோருக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

முனைவர்பட்ட ஆய்வு நிகழ்த்த அனுமதி நல்கிய கல்லூரியின் மேனாள் முதல்வர் முனைவர். த.செந்தமிழ்ச்செல்வி அவர்களுக்கும், பேராசிரியர் அ.கலாவதி (கூ.பொ.மு), முதல்வர் முனைவர். குல.கோவிந்தன், முனைவர் இரா.இராசசேகரன், முதல்வர் முனைவர் சா.இந்துமதி, முதல்வர் முனைவர் க.வேலு ஆகியோருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்ப்பு செவ்வனே அமைய ஆக்க வழிகள் பல கூறி அமைதியுடன் அறிவு வழியில் நின்று நெறிப்படுத்திய எம் நெறியாளர் உதவிப் பேராசிரியர் முனைவர் இரா.சிவகுமார் அவர்களுக்கு என் நன்றி என்றும் உரியது.

இவ்வாய்விற்கு உகந்த கருத்துக்களைக் கூறி என்னை ஊக்கப்படுத்திய மேனாள் தமிழ்த்துறைத் தலைவர் பூ.முத்தழகன் அவர்களுக்கும், இப்போதுள்ள தமிழாய்வுத்துறைத் தலைவர் முனைவர் கி.சிவகுமார் அவர்களுக்கும் எனது நெஞ்சார்ந்த நன்றி.

ஆய்வேடு முழுமை பெற எனக்கு ஆலோசனைகளைக் கூறிய தமிழாய்வுத்துறை இணைப் பேராசிரியர்களான முனைவர் இரா.கருணாநிதி முனைவர் சி.புவனேஸ்வரி, முனைவர்வெ.ராணி ஆகியோருக்கும், உதவிப் பேராசிரியர்களான

சா.இராசசேகர், ம.இராதா, ம.துரைராசு, சா.சாலமன், முனைவர் வே.சண்முகம் ஆகியோருக்கும் மனம் கனிந்த நன்றியுடையேன்.

எனை ஈன்றெடுத்து வளர்த்து ஆளாக்கிய என் பெற்றோர்கள் திரு.ச.பழனிச்சாமி, திருமதிம.சாவித்திரி ஆகியோருக்கும், நான் முனைவர் பட்ட ஆய்வினை மேற்கொள்வதற்கு முழுக் காரணமாக இருந்த என்னுடைய கணவர் திரு. தி. முத்துராமன் அவர்களுக்கும் நான் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என்னை ஊக்கப்படுத்தியும், வழிநடத்தியும் சென்ற அன்புச் சகோதரர் முனைவர் G.தங்கையன் அவர்களுக்கு என்றென்றும் நன்றி கூற கடமைப்பட்டு உள்ளேன். மேலும் என் ஆய்விற்கு உறுதுணை புரிந்த அனைத்து அன்பு உள்ளங்களுக்கும், நண்பர்களுக்கும் மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இவ்வாய்வேட்டினைச் சிறந்த முறையில் செம்மையாக ஒளியச்சு செய்து கொடுத்த **ஜெயப்பிரியா** அச்சக உரிமையாளர் முனைவர் **எஸ்.ஜெயசுதா** அவர்களுக்கும் மிக்க நன்றி.

**(ப.அருளமுதம்)**

# சுருக்கக் குறியீட்டுவிளக்கம்

| | | |
|---|---|---|
| 1. அகம் | - | அகநானூறு |
| 2. அடி. | - | அடிகள் |
| 3. உ.வே.சா. | - | உ.வே.சாமிநாதஅய்யர் |
| 4. கலி. | - | கலித்தொகை |
| 5. குறள். | - | திருக்குறள் |
| 6. ச.வே.சு. | - | ச.வே.சுப்பிரமணியன் |
| 7. சிலம்பு. | - | சிலப்பதிகாரம் |
| 8. சிறு. | - | சிறுபாணாற்றுப்படை |
| 9. திரு.மு.க. | - | திருமுருகாற்றுப்படை |
| 10. தொல். | - | தொல்காப்பியம் |
| 11. நெ.வா. | - | நெடுநல்வாடை |
| 12. நூ. | - | நூற்பா |
| 13. ப. | - | பக்கம் |
| 14. பக் | - | பக்கங்கள் |
| 15. பரி. | - | பரிபாடல் |

| | | |
|---|---|---|
| 16. ப.பா. | - | பட்டினப்பாலை |
| 17. பதிற். | - | பதிற்றுப்பத்து |
| 18. பா. | - | பாடல் |
| 19. புறம். | - | புறநானூறு |
| 20. பெரும். | - | பெரும்பாணாற்றுப்படை |
| 21. பொருந. | - | பொருநராற்றுப்படை |
| 22. ம.கா. | - | மதுரைக்காஞ்சி |
| 23. மலைபடு. | - | மலைபடுகடாம் |
| 24. மு.வ. | - | மு.வரதராசனார் |
| 25. மேலது. | - | மேற்கண்ட நூல் |

# பொருளடக்கம்

# இயல்: ஒன்று

## சங்கப் புலவர்களின் புலமை நலம்

சங்கப்புலவர்கள் நுண்மாண் நுழைப்புலம் மிக்கவர்கள். பல்துறை அறிவுப் பெற்ற சான்றோர், வாழ்வின் கலங்கரை விளக்கமாகத் திகழ்ந்தனர். அரசு, மக்கள், ஆட்சி, நீதி, உறவுகள், நட்பு போன்ற வாழ்வியல் கூறுபாடுகளில் தெளிந்த கருத்துக்களைப் பதிவு செய்துள்ளனர். பாக்களில் பல்வேறு உத்திமுறைகளைக் கையாண்டுள்ளனர். கருத்தியல் வாதத்தில் முதன்மைப் பெற்றவர்களாகத் திகழ்கின்றனர். மாற்றார் எனினும், அவர் உள்ளத்திலும் திண்ணிய கருத்தைப் பதிவு செய்வதில் வல்லாண்மைப் பெற்றவர்கள். இவ்வாறான ஆளுமை முறைகளின் கருத்தைக் கொண்டே சங்கப் புலவர் விளங்கினர்.

மேலும், ‘‘சங்ககாலப் புலவர் இயற்கைப் பொருள்களை நுணுகி அறிந்தவர்; மலைகளையும் காடுகளையும் நாடுகளையும் ஊர்களையும் சுற்றியவர்; ஐவகை நிலங்களுக்குரிய முதல்-கரு-உரிப்பொருள்களை நன்கு உணர்ந்தவர்; இசை, நடனம், ஓவியம், சிற்பம், முதலிய கலைகளை அறிந்தவர்; சமுதாய அமைப்பையும் மக்கள் பழக்க வழக்கங்களையும் தெரிந்தவர்; அரசியல், பயிர்த்தொழில், கைத்தொழில் முதலியவற்றை நன்கறிந்தவர்; பேரரசர், சிற்றரசர் முதல் எளிய குடிமக்கள் ஈறாக அனைவருடனும் உளம் கலந்து பழகியவர்; அவர்கள் இத்தகைய நிறையறிவு பெற்றிருந்தமையால் சான்றோர் எனவும் சான்றோர் எனவும் போற்றப் பெற்றனர்’’.[1] ஆகவே அவர்களிடத்தில் புலப்பாட்டுத் திறன்கள் நிறைந்து காணப்பட்டன. ஆதலால் அவற்றை ஆராய்ந்துரைப்பதாக இநத இயல் அமைந்துள்ளது. இதனடிப்படையில்,

புலப்பாட்டுத் திறன், கற்பனை, உவமை, கருத்து, இயற்கைப் புனைவு, பெண்ணிய உணர்வுகள், பொதுநலக் கருத்துரைகள், அறிவியல் சிந்தனைகள், வரலாற்றியல் பதிவுகள், உளவியல் அணுகு முறைகள், மொழியியல் அமைப்பு முறைகள், அழகியல் சிந்தனைகள், இறைக் கோட்பாடுகள், ஆளுமைப் பண்புகள் ஆகிய தலைப்புகள் கொண்டு ஆராய்ந்துரைக்கப்பட்டுள்ளன.

## புலப்பாட்டுத்திறன்

புலவர் பட்டறிந்த அறிவை மற்றவருக்கு உணர்த்த விரும்புகிறான். அந்நிலையில், அவனுக்கு மொழி வடிவம் தேவைப்படுகிறது. இந்த மொழி வடிவம் கவிதை, கட்டுரை, கதை, நாவல், ஓவியம், சிற்பம் என நுண்கலை வடிவமாக மாற்றம் அடைகின்றன. படைக்கின்ற படைப்பாளன் அனைவரும் புலப்பாட்டுத்திறன் உடையவர் எனக் கொள்ள இயலாது. புலப்படுத்தல் என்பது படைப்பிற்கு ஒத்த நிலை பொருள் உடையதாகும்.

புலப்பாட்டு முறைகள் தொல்காப்பியத்தில் காணப்படுகின்றன. ‘‘தமிழ்ப் புலப்பாட்டு நெறி தொல்காப்பியரால் எழுதப்பட்டு விட்டது. கிரேக்க நாட்டு அரிஸ்டாட்டில் காலத்திற்குப் பல நூறு ஆண்டுகளுக்கு முன்பே தமிழகத்தில் இலக்கிய நெறிமுறைகள் வகுக்கப்பட்டும், பயிலப்பட்டும், பாடப்பட்டும் வந்தன என அறியலாம்’’[2] என்று சி.இலக்குவனார் கருத்தை மேற்கோள் காட்டுவார் இரா.குமரன் அவர்கள்.

‘‘கோரகீஸ் புலப்பாட்டு நெறியின் முதல்வர் என்றழைக்கப்படுகிறார் கிரேக்க நீதி மன்றங்களில் அவர் பேசிய பேச்சுக்களே புலப்பாட்டு நெறிக்குத் தோற்றுவாயாக அமைந்தன. அவருடைய விவாத முறையில் முன்னுரை, நிகழ்ச்சிக் கோவை முறை, விவாதம், முடிவுரை ஆகிய நான்கு பகுதிகள் இருந்தன. உடன்பாட்டு முறையிலும், மறுத்துக்கூறல் முறையிலும், விவாதத்தை அமைத்து வாதாடி வெற்றி பெற்றார். இவருக்குப் பிறகு பிளேட்டோ, அரிஸ்டாட்டில் காலத்தில் இந்நெறி புத்துயிர் பெற்று வளரத் தொடங்கியது’’[3]. கருத்துப் புலப்பாட்டில் கூறுநர், செய்தி, சூழல், ஊடகம், சங்கேதம், கேட்டுநர் என்பன முதன்மைக் காரணிகளாகும். உணர்வு, துலங்கல், சைகை, ஒலிக்குறிப்பு, குறி ஆகியன துணைக் காரணிகளாகும்.

சங்கப் புலவர்களின் பாடல்களில் இப்புலப்பாட்டுக் காரணிகள் நன்கு அமையப் பெற்றுள்ளன. இது அவர்களின் புலப்பாட்டுத் திறனுக்குச் சான்றாகும்.

“அளிய தாமே சிறுவெண் ஆம்பல்
இளைய மாகத் தழை ஆயினவே; இனியே,
பெருவளச் கொழுநன் மாய்ந்தென, பொழுதுமறுத்து
இன்னா வைகல் உண்ணும்
அல்லிப் படூஉம் புல்லா யினவே”[4]

எனப் பாடுவார் ஒக்கூர் மாசாத்தியார்.

தாபத நிலை துறைச் சார்ந்த பாடலாகும். கணவனை இழந்த மனைவி கைம்மை நோன்பு நிலையிலைச் சுட்டி உரைப்பதாகும். இது பொதுவியல் திணை சார்ந்ததாகும். எல்லாத் திணைகளுக்குப் பொதுவான செய்தியை உரைப்பதாகும்.

புலவர் மாசாத்தனார் புலப்பாட்டு நெறியில் ‘கூறுநர்’ நிலையில் கைம்மை நோன்பு இருக்கும் ஒரு பெண்ணின் மனநிலையை எடுத்தியம்புகிறார்.

“இரங்கத்தக்கன, சிறிய வெளிய ஆம்பல், அவைதாம், யாம் இணையோமாயிருக்க முற்காலத்துத் தழையாயுதவின் இக்காலத்துப் பெரிய செல்வத்தையுடைய தலைவன் இறந்தானாக உண்ணுங்காலை மாறி இன்னாத வைகும் பொழுதின் உண்ணும் தம் அல்லியிடத்துண்டாம் புல்லரிசியில் உதவின”[5] என்பர். மேலும் இதற்கு விளக்கம் அளிக்கும் உ.வே.சா.

“தாம் இன்புறுங்காலத்தும் துன்புறுங்காலத்தும் துணையாய் உதவினவாதலான், அளியவாயினவென ஆம்பலை நோக்கிக் கூறியவாறாயிற்று”[6] என்பர்.

புலவர் மாசாத்தனார் கைம்மைப் பெண்ணின் நிலையைப் பாட முற்படுகின்றார். அந்நிலையில் ஆம்பல் கொடியை மையப்படுத்திப் பெண் கைம்மை நிலையை உணர்த்தி கூறுகிறார்.

புலப்பாட்டு நெறியில் கூறுநர் நிலையில் கைம்பெண்ணை வைத்து கருத்தைப் புலப்படுத்துகிறார். எப்படியாயினும் பெண் தன் நிலையில் தெளிவாக உள்ளத்தைத் தெள்ளிதின் உரைக்கிறார்.

“கூறுநர் தெளிந்த சிந்தனையும், நாவன்மையும் உடையராக இருத்தல் வேண்டும். செய்தியின் மதிப்பறிந்து முறைப்படுத்திப் பேசுதல் இன்றியமையாதது. கேட்கும் விழைவைத் தூண்டுவதோடு, மனதில் பதியும் வண்ணம் சொல்ல வேண்டும்”[7] என்பார் இரா.குமரன். இவரின் கூற்று ஈண்டு நினையத்தகுந்ததாகும்.

“உலகம் உவப்ப வலன்ஏற்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடல்கண் டாஅங்கு,
ஓஅற இமைக்கும் சேண்விளங்கு அவிர்ஒளி,
உறுநர்த் தாங்கிய மதன்உடை நோன்தாள்
செறுநர்த் தேய்த்த செல்உறழ் தடக்கை
மறுகில் கற்பின் வாணுதல் கணவன்”[8]

எனப் பாடுவார் நக்கீரர்.

“தரவில் நல்விசை கருதிய இடந்தோர்க்கு
சூதர் ஏத்திய துயிலெடை நிலையில்
கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்
சென்று பயன் ஏதிரச் சொன்ன பக்கமும்”[9]

என்பது தொல்காப்பியம்.

ஆற்றுப்படை நூல்கள் புலப்பாட்டு நெறியின் சான்றுகளாகும். “முருகப்பெருமானுடைய திருவருட் செல்வம் நிரம்பப்பெற்று இம்மையிலேயே சீவன் முத்தத்தன்மை யெய்திய சான்றோன் ஒருவன், அத்தகைய பேற்றைப் பெறுந் தகுதியுடையனாய், அதனைப் பெறுதற்கு விரும்பித் தன் எதிர்ப்பட்ட ஒருவனை அளவளாவும், வாயிலாய் முருகப்பெருமானுடைய இறையியல் முதலியவற்றையும், அவ்விறைவன் அடையாளப் பூமாலையினையும் குறிக்கலாம்.

சூரமகளிர் அப்பெருமான் கீர்த்தியைப் பாடி ஆடுமாற்றையும், அப்பெருமானுடைய தெறற் சிறப்பையும் பிறவற்றையும் விரிந்தோதுகிறார்”[10] என்பர் பெருமழைப்புலவர் பொ.வே.சோமசுந்தனார்.

திருமுருகாற்றுப்படைத் தொடக்கத்தில் இவ்வாறு குறிப்புத் தருகிறார். புலப்பாட்டு நெறியில் கூறுநர் கேட்குநர் என்பவர் இரு காரணிகள் ஆவர். தொல்காப்பியர் ஆற்றுப்படை இலக்கணத்தை ‘பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு’ எனும் அடியைக் குறிப்பர். ஆற்றுப்படை இலக்கியங்கள் கருத்துப் புலப்பாட்டின் களங்கள் ஆகும்.

“கருத்துப் புலப்பாட்டில் கூறுநர் கேட்குநர் நிலைகள் எதிரெதிராக நின்று செயல்படுகின்றன. வெளியிடப் பெறும் கருத்து, அக்கருத்துச் சூழல்களோடு பொருந்தி உணர்த்தும் பொருள், அப்பொருள் கேட்கும் இடத்தில் ஏற்படத்தும் விளைவு ஆகியன கருத்துப் புலப்பாட்டைத் தொடர வழிவகுக்கின்றன”[11] என்பர்.

நக்கீரர் உணர்த்தும் காலத்துப் புலப்பாடு ஆவது, முருகப்பெருமான் உலக உயிர்கள் மகிழும் படி செய்வான். நெடுந்தொலைவில் மயில்மீது பேரொளிப் பிழம்பாக முருகன் அன்பர்களுக்குக் காட்சி தருகிறான். அறியாமையை தகர்த்தெறியும் தன்மை உடையன அவனின் கால்கள். பிறருக்குத் தீங்கு செய்பவர்களை அழிப்பதற்கே முருகனின் பக்கத்தில் தெய்வானை மனைவியாக நிற்கிறாள் என்கிறார்.

உலகத்தில் அறத்திற்கும், மறத்திற்கும் தொடர் போராட்டம் நடைபெற்றுக் கொண்டே இருக்கிறது. இவற்றை எதிர் கொள்ள இறைவனின் கருணை தேவை. புற இருளைப் போக்கக் கூடியவன் முருகன். மேலும் மெய்ப்பொருளைத் தெரிந்துணர்த்தும் அறிவுப் பேரொளியாகவே உள்ளான் என்பது நக்கீரர் கருத்தாகும்.

நக்கீரர் மறத்திற்கு மாறாக முருகப் பெருமான் இருக்கிறான் என்பதை ‘பலர்புகழ் ஞாயிறு கடல்கண் டாஅங்கு’ என்றும் “செறுநர்தத் தேய்த்த செல்உறழ் தடக்கை” என்றும் குறிப்பர். யாது கருத்து எனின், எல்லா சமயத்தாரும் போற்றும் ஞாயிறு போன்றவர் முருகக் கடவுள். பகைவரை அழிக்கும் வலிமையான வகைகளைக் கொண்டவனுமாகவும் உள்ளார்.

இங்கு இயற்கையே இறையாக உள்ளார் என்றும் கருத்தை உணர்ந்த நக்கீரன் புலவன் கையாண்டக் கருத்துப் புலப்பாட்டு உத்தி இங்கு நினைக்கத்தக்கதாகும்.

**கற்பனை**

படைப்பாளிக்கு இன்றியமையாதது கற்பனைத் திறனாகும். கற்பனை என்பது போலச்செய்தல் ஆகும். திறனாய்வாளர்கள் கற்பனை என்பது குறித்துப் பல்வேறு கருத்துக்களை வழங்கியுள்ளனர். மேலும் கற்பனை என்பது பற்றி அறுதியிட்டு வரையறுத்துக் கூற இயலாது என்பது அனைவரும் அறிந்த ஒன்றாகும். திறனாய்வாளர்கள் ஆங்கிலத்தில் வழங்கப் பெறும் இமாஜினேஷன் என்ற சொல்லிற்கு நேர் சொல்லாகக் கற்பனையைத் தமிழில் வழங்கி வருகின்றனர். கற்பனை என்னும் சொல் வடசொல்லாகும்.

“கற்பனை என்னும் சொல்லைச் சங்க இலக்கியத்துள்ளோ, சங்கம் மருவிய இலக்கியத்திற்குள்ளோ நாம் காண முடியவில்லை. இதனால் பண்டைத் தமிழ்ப் புலவருக்குக் கற்பனை ஆற்றல் இருந்ததில்லையா? அவர்களுடைய பாடல்கள் கற்பனை வளம் குறைந்தவையா போன்ற ஐயம் எழ வாய்ப்பு உண்டு.

தமிழ் மொழியின் வரலாற்றையும், இலக்கிய வரலாற்றையும் ஒரு முறை கூர்ந்து நோக்குவோமானால், உண்மை புலனாகும். ‘கற்பனை என்னும் சொல் தமிழ் மொழியில் வழங்கப் பெறுவதற்கு முன்னர், அச்சொல்லிற்குரிய பொருளில் ‘புனை’ என்னும் வேர்ச்சொல் அடியாகப் பிறந்த புனைவு, புனைதல் என்னும் சொற்கள் வழக்கில் இருந்தமையை அறியலாம். ‘புனை’ என்னும் வேர்ச்சொல்லே அடையாக அமைந்து ‘கற்பனை’ என்னும் பொருளை உணர்த்தியதைச் சங்க இலக்கியத்தில் காணப்பெறும் தொடர்மொழிகள் பலவற்றால் நாம் அறிகிறோம்”[12] என்பார் க.த.திருநாவுக்கரசு. இவரின் ஆய்வுரையில் கற்பனைக் குறித்த ஒரு பொருளை உணர்ந்து கொள்ள முடியும்.

இது குறித்து மேலைநாட்டுத் திறனாய்வாளர்கள் பல்வேறு வகைகளில் சுட்டிக்காட்டியுள்ளனர். வோர்ட்சுவர்த் ஆக்கக் கற்பனை, நினைவுக் கற்பனை என இரண்டைச் சுட்டுவர்.

கோல்ரிட்ஜ் முதல்நிலைக் கற்பனை, இரண்டாம்நிலை அல்லது சார்நிலைக் கற்பனை என இரண்டைக் குறிப்பர். சாண்ட் ஆக்கக் கற்பனை மறு ஆக்கக் கற்பனை, அழகியல் கற்பனை என மூன்றை உரைப்பர். ரங்கின் என்பவர் நுணுகி உள்நோக்குக் கற்பனை, சிந்தனைத் திறன் மிக்கக் கற்பனை, இயைபுக் கற்பனை என மூவகையில் பிரிப்பார். எலியட் காட்சிக் கற்பனை, கேள்விக் கற்பனை, என இரண்டாக வகுத்துள்ளார். வின்செஸ்டர் படைப்புக் கற்பனை, இயைபுக் கற்பனை, கருத்து விளக்கக் கற்பனை என மூன்று வகையாகப் பிரித்துள்ளார்.

‘‘தமிழ் இலக்கியத் திறனாய்வாளர்களான மு.வ, அ.ச.ஞானசம்பந்தன், இ.சுந்தரமூர்த்தி, க.த.திருநாவுக்கரசு, சு.பாலசந்திரன், தா.ஏ.ஞானமூர்த்தி, சு.மாயாண்டி ஆகியோர் வின்செஸ்டர் பிரிக்கும் கற்பனை வகைகளையே குறிக்கின்றனர் என்பது நோக்குதற்குரியதாகும். மேலும் சங்க இலக்கிய மேற்கோள்கள்’’[13] என்னும் நூலினை எழுதிய உரைவேற்றுமை பேராசிரியர் இரா.சாரங்கபாணி மற்றும் த.சாமிநாதன் ‘கற்பனை’ குறித்த மேற்கொள்கள் எதனையும் தம் நூலில் சுட்டிக்காட்டவில்லை என்பது எண்ணுதற்கு உரியதாகும்.

இருப்பினும், கருத்து விளக்கக் கற்பனை குறித்து ‘‘இலக்கியத்திறன்’’[14] என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார் மு.வ. கருத்து விளக்கக் கற்பனையாவது பொருள்கள், உணர்ச்சி, பயன் முதலியவற்றிடையே இழையோடிச் செல்லும் சிறந்த பயன் மதிப்புகளை உள்ளத்தால் உணர்ந்து அவற்றிற்கு கருத்து விளக்கம் தரும் நோக்கில் புனைந்துரைக்கும் மன ஆற்றலே ஆகும்.புறநானூற்றுப் புலவன் உறையூர் முதுக்கண்ணன் சாத்தனார் சோழன் நலங்கிள்ளியின் அறம், பொருள், இன்பம் என்னும் முப்பொருளின் சிறப்பினை உணர்த்துகிறார்.

‘‘தேய்தல் உண்மையும் பெருகல் உண்மையும்
மாய்தல் உண்மையும், பிறத்தல் உண்மையும்,
அறியா தோரையும் அறியக் காட்டி
திங்கள் புத்தேள் திரி தரும்’’[15]

என்பது பாடலாகும்.

உலக வாழ்வில் இறப்பு, பிறப்பு, கேடு, ஆதிக்கம் ஆகியன மாறி மாறி வருவதாகும். இந்த உண்மையை விளக்கக் கருதிய புலவன் வானத்தின் வட்ட நிலவின் இயல்பினைச் சுட்டுகிறார். அதாவது, புலவன் தம் கற்பனையை வட்ட நிலவினோடு வாழ்வின் இயல்பினையும் கற்பனையில் கவி புனைகிறார். உண்மையில் இது நிலவுக்குத் தெரியவும் தெரியாது. இருப்பினும் புலவன் வானத்தில் விளங்கும் நிலவுக்கு இதனைக் கற்பித்துக் கூறுகிறார்.

புறப்பாடல்களில் கற்பனை என்னும் சொல் நேரிடையாக இல்லையெனினும், புனைவு நோக்கில் பலநூறு சான்றுகள் உள்ளன என்பதைத் தெளிதல் நலம்.

**உவமை**

புலவனின் கவித்திறனுக்குச் செம்மாந்த நிலையினை உண்டாக்குவது உவமை நயம் ஆகும். புலவன் தரம் கொண்ட காட்சிகளை உணர்வுப் பூர்வமாகக் கவிதையாகப் படைப்பான். அவனுக்கு உவமை, உருவகம் துணையாக நிற்கும். தாம் எழுத நினைத்த கவிதையை அழகுபடுத்துவான். வெவ்வேறாக உள்ள பொருள்களை இயைபுபடுத்தி வாழ்க்கையின் அனுபவத்தை வெவ்வேறான வண்ணங்களால் தீட்டியும் காட்டுவான்.

இதனைத் தொல்காப்பியர்,

> ‘‘வினை பயன் மெய் உரு என்ற நான்கே
>
> வகைபெற வந்த உவமத் தோற்றம்’’[16]

என்பர்.

வினையாகிய தொழில், பயன், மெய்யாகிய வடிவம், உருவாகிய நிறம் ஆகிய நான்கு வகையாக உவமைகள் தோன்றும்.

வினை, பயன், மெய், உரு என்பன பற்றி உவமை கூறும்போது சிறப்பு, நலன், காதல், வழி இவற்றை நிலைக்களமாகக் கொண்டு அமைய வேண்டும் என்பது தொல்காப்பியரின் கூற்றாகும்.

"முரசுமுழங்கு தாளை, மூவரும் கூடி

அரசவை இருந்த தோற்றம் போல

பாடல் பற்றிய பயனுடை எழாஅல்"[17]

என்னும் பொருநராற்றுப்படை அடிகள் 'சிறப்பைப்' பற்றி உரைப்பதைக் காணலாம்.

"ஓவத்தன்ன வியனுடை வரைப்பின்"[18]

என்னும் புறநானூற்று அடி 'நலன்' பற்றிக் கூறுவதைக் காணலாம்.

"பாவை யன்ன பலராம் மாண்கவின்"[19]

என்னும் அகநானூற்றுப் பாடலடி 'காதல்' பற்றிக் கூறுவதைக் காணமுடிகிறது.

"அரிமா அன்ன அணங்குடைத் துப்பின்"[20]

என்னும் பட்டினப்பாலை அடி 'வலி' பற்றி உரைக்கிறது.

உவமை தோன்றியதற்குரிய எடுத்துக்காட்டுகளாக உரைப்பர் உரையாசிரியர்கள்.

சங்க இலக்கியப் புலவர்கள் "173"[21] உவமைகளைக் கையாண்டுள்ளனர் என்பார் இரா.சாரங்கபாணி. இவற்றில் 51 உவமைகளைப் புறப்புலவர்கள் பயன்படுத்தி உள்ளனர் என்பதும் அறியத் தக்கதாகும்.

"புலிபுறம் காக்கும் இருளை போல

மெலிவிரல் செங்கோல் நீபுறம் காப்ப"[22]

என்பர் இடைக்காடனார்.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் நாட்டையும், மக்களையும் எப்படிக் காக்கிறான் என்பதைக் கூற வந்த புலவர் புலியால் காக்கப்படும் குட்டிகளைப் போல, நீ செங்கோல் ஆட்சி செய்கிறாய்.

என்று உவமை நயத்துடன் குறிப்பிடுகிறார். இவற்றில் ‘போல’ என்னும் உவம உருபு மறைந்துள்ளதைக் காண முடிகிறது.

அதியமான் நெடுமான் அஞ்சியைப் பற்றி ஔவையார் பாடும் போது,

“அதியமான், பரிசில் பெறூஉம் காலம்
நீட்டினும், நீட்டாது ஆயினும், களிறுதன்
கோட்டிடை வைத்த கவளம் போலக்
கையகத் ததுஅது பொய்யா காதே”[23]

எனப் பாடுவர். அதியமானிடம் பரிசில் பெறும் காலம் நீண்டாலும், நீளாவிடினும் யானை தன் கொம்புகளிடையே கொண்ட கவளம் வாய்க்குள் போவது போலப் பரிசில் பெறுவது உறுதி என்கிறார்.

இதே நிலையில் பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு பின்வரும் பாடலில்,

“பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட்டு ஈமம்
நுமக்குஅரி தாகுக தில்ல! எமக்குஎம்
பெருந்தோட் கணவன் மாய்ந்தென, அரும்புஅற
வள்இதழ் அவிந்த தாமரை
நள்இரும் பொய்கையும் தீயும்ஓ ரற்றே!”[24]

என்று பாடியுள்ளார்.

சுடுகாட்டில் அமைக்கப் பெற்ற கட்டையால் ஆகிய பிணப்படுக்கை உங்களுக்குத் தாங்க மாட்டாதது. ஆனால், எனக்கு என் பெரிய தோளை உடைய கணவன் இறந்தான். அவனை எரிக்கும் அந்தத் தீயும் பெரிய தாமரைப் பொய்கையும் எனக்கு ஒன்றாகும் என்கிறாள்.

சங்கப் புலவர்கள் உவமையைப் பயன்படுத்துவதில் பல்லாற்றானும் திறனுடையவராய்த் திகழ்கிறார்கள் என்பதைப் பரவலாகக் காணமுடிகிறது. புலவர்கள் தாம் மேற்கொண்ட கருத்திற்கு ஏற்ப உவமைகளைக் கையாண்ட முறை எண்ணுதற்குரியதாகும். உவமைநலம் புலவனின் திறமையை எடுத்துரைக்கும் சான்றாகும்.

**கருத்து**

கலை கலைக்காகவா? கலை வாழ்க்கைக்காகவா? என்னும் கருத்துப் போர் இலக்கிய உலகில் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருக்கும் ஒரு நிகழ்வாகும். கருத்து இயலுக்கு நடப்பியல், குறிக்கோள் என்னும் இருபெரும் காரணிகள் உண்டு.

வாழ்க்கை முறையை உள்ளவாறு இலக்கியத்தில் படைத்துக் காட்டுவது நடப்பியல் ஆகும்.

சமுதாயம் எப்படி இருக்க வேண்டும் என்று எடுத்துக்காட்டுவது குறிக்கோளாகும்.

“தொன்மைக் காலந்தொட்டு அண்மைக் காலம் வரை அறக்கருத்துக்களையும் ஒழுக்கநெறி உண்மைகளையும் உணர்ச்சியோடு உணர்த்தவல்ல இலக்கியங்களே உயர்தர இலக்கியங்களாக மதிக்கப்பட்டு வந்துள்ளன”[25] என்பார் தா.ஏ.ஞானமூர்த்தி.

கற்பனை, உணர்ச்சி, வடிவம் இவற்றுடன் கருத்தும் சிறப்பிடம் பெறுகிறது என்பது உணரத்தக்கது. தமிழ் அற இலக்கியங்கள் உலகம் முழுமைக்கும் ஏற்றுக் கொள்ளப்பட்டிருப்பது கருத்தில் கொள்வது நலம். குறிப்பாகத் திருக்குறளும், நாலடியாரும் கருத்துச் செறிவிற்காகவே பல மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டு வருகின்றன என்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கது. கருத்தின் தரத்தை ஒட்டிய இலக்கியத்தின் தரமும் மதிப்பிடப்படுகிறது. உண்மை வாழ்வினைப் படைத்துக் காட்டும் நடப்பிலும், உயர்ந்த வாழ்வினைப் படம் பிடித்துக் காட்டும் குறிக்கோள் நிலையும் புறப்பாடல்களில் தெள்ளிதின் அமையப் பெற்றிருக்கிறது.

வெள்ளைக்குடி நாகனார் கிள்ளிவளவனிடம் அரசு நிலை எவ்வாறு இருக்கவேண்டும் என்பதை,

> “கண்பொர விளங்குநின் விண்பொரு வியன்குடை
> வெயில் மறைக் கொண்டன்றோ? அன்றே; வருந்திய
> குடி மறைப் பதுவே; கூர்வேல் வளவ”[26]

எனக் பாடுவர்.

கதிரவனை மேலே கொண்ட கரு மேகங்கள் வானில் நின்று நடுவே, வெயிலை மறைத்தாற் போலக் கருத்திரண்டு விளங்கும் வெண்கொற்றக் குடையானது வெயிலை மறைக்கப் பிடிக்கப் பெற்றது அன்று. வருந்தும் குடிமக்களின் வருத்தம் ஒழிக்கப் பிடிக்கப்பட்டதாகும். ஓர் அரசு செயல்படும் முறையைத் தெள்ளிதின் உணர்த்துவர். இந்த அரசு நடப்பியல் இயல்பாக அமையாத நிலையில் அரசும், மன்னரும் கீழ்நிலைக்கு உரியவர் ஆவார். நடப்பியலைச் சமூகத்திற்குளடுத்துரைப்பது புலவரின் கடமையாகும்.

கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி,

“உண்டால் அம்ம இவ்வுலகம் இந்திரர்
அமிழ்தம் இயைவது ஆயினும்; இனிது எனத்
தமியர் உண்டலும் இலரே; முனிவுஇலர்;
துஞ்சலும் இலர்; பிறர் அஞ்சுவது அஞ்சிப்
புகழ்எனின், உயிரும் கொடுக்குவர்; பழிஎனின்
உலகுடன் பெறினும், கொள்ளலர்; அயர்விலர்;
அன்னமாட்சி அனையர் ஆகித்
தமக்குஎன முயலா நோன்தாள்
பிறர்க்குஎன முயலுநர் உண்மையானே”[27]

எனப் பாடுவார்.

இந்திரனுக்கு உணவாகும் அமிழ்தமே கிடைப்பதாயினும், இனிது என்று அதனைத் தனியராய் உண்ணார்; யாரோடும் வெறுப்பிலர்; பிறர் அஞ்சுகின்ற துன்பங்களுக்குத் தாமும் அஞ்சியவை தீரும் வரை சோம்பியிரார்; அவற்றைத் தீர்க்க முயலுவார் என்பது பொருளாகும். புகழ் என்றால் உயிரையும் கொடுப்பர், பழி வருமெனின் உலகம் முழுவதையும் பெறுவதாயினும் ஏற்றுக் கொள்ளார். மனச் சோர்விலர்; அத்தகு மாட்சிமை பெற்ற இயல்பினராகி, தமக்கென்று முயலாத வலிய முயற்சியுடையராய் பிறர்க்கென்று முயல்கின்ற பெரியவர்கள் உள்ளனர் என்பது பொருளாகும்.

சமுதாயத்தில் உள்ள மக்கள், சான்றோர், எப்படி வாழ வேண்டும் என்ற நோக்கத்தைப் பாடலாக வடித்துள்ளார் இளம்பெருவழுதி. இலக்கியம் வரையறுக்கப்படாத சட்ட நூல் என்றே இலக்கியச் சான்றோர் மொழிவர். உயர்ந்த குறிக்கோளை அனைவரும் ஏற்றுக்கொள்ளும் நிலையில்; புலவர் ஒருவரால் மட்டுமே இனிதாய் கூற முடியும் என்பதும் நோக்குதற்குரியதே.

### இயற்கைப் புனைவு

"புனைதல் என்னும் சொல்லிற்குச் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதி பன்னிரண்டு பொருள்களை வரையறுத்துக் கூறுகிறது. அவை, செய்தல், செய்யுள் அமைத்தல், கற்பித்தல், சிறப்பித்துக் கூறுதல், ஒழுங்காக அமைத்தல், சூடுதல், கட்டுதல், முடைதல், சித்திரமெழுதுதல், சித்தஞ்செய்தல், அலங்கரித்தல், தரித்தல்"[28] என்பதை மேற்கோள் காட்டுவார் க.த.திருநாவுக்கரசு.

மேலும், புனைதல் குறித்த ஆய்வுரையில் சங்க இலக்கியப் பக்திப் பனுவல்களின் அடிகளை மேற்கோள் காட்டிப் புனைதல் என்பதற்குப் பொருள் நெறியை உண்டாக்குகிறார்.

"நாவிற் புனைந்த நன்கவிதை" (பரி-6:8)

எனப் பரிபாடலையும்,

"புனைந்து பேசி" (தேவாரம் -1224,3)

எனத் தேவாரத்தையும்

"புனையினும் புல்லென்னும் நட்பு" (குறள்: 790)

எனத் திருக்குறளையும்

"பூநுதல் யானையொடு புனைதேர் பண்ணவும்"

(புறம்:12;2)

எனப் புறநானூற்றையும் சான்று காட்டுவர்.

கவிப்பொருளின் மாட்சியைச் சிறப்புப் படுத்திக் காட்டப் புலவன் புனைவைக் கையாள்கிறான் என்பது புலனாகிறது. புனைதலை அழகுசெய்தல், அலங்கரித்தல், சித்திரம் எழுதுதல் என்பதாகும்.

நெடுநல்வாடையில் நக்கீரர் பாண்டிமாதேவி கணவருடைய பிரிவால் வாடுகிறாள் என்பதைப்,

"புனையா ஓவியம் உடுப்ப"[30]

எனப்புனைந்து உரைக்கிறார். இந்த அடியைப் பொருளாகக் கொண்டே வேங்கடராம செட்டியா 'புனையா ஓவியம்' என்னும் நூலினை எழுதி உள்ளார் என்பதும் இங்கு நினைக்கத் தக்கதாகும்.

"கைபுனைந்து இயற்றாக் கவின்பெறு வனப்பு"[31]

என்கிறார் நக்கீரர். சூரமகனின் அழகினை ஒருவருடைய கைபுனைந்து பிறப்பறியாத அழகை இயற்கையாகப் பெற்ற அழகுடையவர் எனப் புனைகிறார்.

பெரும்பாணாற்றுப்படையில் கடியலூர் உருத்திரங்கண்ணனார் தொண்டைமான் இளந்திரையனின் தொண்டை நாட்டை,

"வெயில் நுழைவு அறியாக் குயில் நுழை பொதும்பர்"[32]

எனக் குறிப்பிடுகிறார்.

பரிசில் பெற்ற புலவன் பரிசில் பெறாத புலவனை ஆற்றுப்படுத்தும் நிலையில் தொண்டைமானின் நாடு எவ்வாறு வளமாகத் திகழ்கிறது என்பது ஞாயிற்றின் கதிர்கள் ஊடுருவ இயலாத மற்றும் குயில்கள் பறக்க இயலாமையால் நுழைந்து செல்லும் பூஞ்சோலை அங்கு உள்ளது என்கிறார். இப்புனைவு இளந்திரையனின் நாட்டு வனப்பைப் புரிந்து கொள்ள ஏதுவாக அமைகிறது.

சிறுபாணாற்றுப்படையில் இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் ஓய்மா நாட்டு நல்லியக் கோடனிடம் மாவிலங்கை நகரச் சிறப்பையும், கிடங்கில் மாநகருக்குச் செல்லும் வழி, அதனை ஒட்டிய நெய்தல் நில வருணனை, எயிற்பட்டினச் சிறப்பு, அங்கிருந்து வேலூர் போகும் வழியில் முல்லைநில வருணனை ஆகிய சோலையை,

> ''பைந்நனை அவரை பவழம் கோப்பவும்
> கருநனைக் காலாக் கணமயில் அவிழவும்
> கொழுங்கொடி முசுண்டை கொட்டம் கொள்ளவும்
> செழுங்குலைக் காத்தல் கைவிரல் பூப்பவும்
> கொல்லை நெடுவழிக் கோபம் ஊரவும்
> முல்லை சான்ற முல்லையம் புறவின்''[33]

எனப் புனைந்து பாடுகிறார்.

முல்லை நிலக் காட்சியினை வருணிக்கும் நத்தத்தனார், சோலையைப் பசிய அரும்புகளை உடைய அவரைப் பூ பவழம் கோத்தாற் போலப் பூக்கள் திகழ்ந்ததாம், கரிய அரும்பினையுடைய காயாமலர் மயிலின் கழுத்துப் போலப் பூத்ததாம். செழிந்த கொடியை உடைய முசுண்டை, கொட்டம் போன்ற பூக்களைக் கொண்டிருந்ததாம். செழித்த குலைகளையுடைய காந்தள் கைவிரல் போன்று பூக்கள் விரித்திருந்ததாம். முல்லை நெடிய தூரம் உடையதாக இருந்ததாம். இவ்வழிகளில் இந்திர கோபப் பூச்சி ஊர்ந்ததாம். இவ்வாறாக முல்லைக் காடு திகழ்ந்தது எனக் குறிப்பிடுகிறார்.

## பெண்ணிய உணர்வுகள்

பெண்மை பேணப்பட வேண்டும், பெண்மைப் போற்றப்பட வேண்டும் என்பது திரு.வி.கவின் கொள்கை. ச.வே.சுப்பிரமணியன் ''தமிழ் மொழியின் வயது நாற்பதாயிரம் ஆண்டுகள் வரை இருக்கலாம்; தமிழ் இலக்கியங்களின் வயது பத்தாயிரம் ஆண்டுகளாவது இருத்தல் வேண்டும்''[34] என்கிறார். இக்குறிப்பு தமிழ் மொழியின் தன்மையை உணர வாய்ப்பாக இருக்கிறது.

இந்த நீண்ட நெடிய வரலாற்றில் தமிழ்ப் புலவர்களின் அதனினும் பெண்பாற் புலவர்களின் கருத்து பெண்ணிய உணர்வுகளை வெளிப்படுத்துவனவாகத் திகழ்கிறது. சங்க காலப் பெண்பாற் புலவர்களின் எண்ணிக்கைக் குறித்த ஆய்வுரையில் ச.வே.சுப்பிரமணியன் கூறும்போது,“30 பேர்பெண்டிர். உ.வே.சா.வும், பின்னத்தூராரும் 38, இராகவ ஐயங்கார் 31, அபிதான சிந்தாமணியும் பூரணலிங்கனாரும் 26, ஔவை துரைசாமிப்பிள்ளை 34, வையாபுரிப்பிள்ளை துடிசை கிழாரும் 32, பலவர் கா.கோவிந்தன் 27, ஔவை நடராசன் 41 என்ற வரையறை செய்து உள்ளனர்.”[35] என்கிறார். மேலும் ந.சஞ்சீவி அவர்களின் ஆய்வு நெறியில் ச.வே.சு 30 பேர் எனப் பொருள் கொள்கிறார்.

இந்த 30 பேரில், காவற்பெண்டு (புறம்:86), குறமகள் இளவெயினி (புறம்:157), நாயங்கண்ணியார் (புறம்:250), பாரி மகளிர் (புறம்:12), பூதபாண்டியன் தேவி பெருங்கோப் பெண்டு (புறம்:246), பேய்மகள் இளவெயினி (புறம்:11), மாற்பித்தியார் (புறம்:251,252) வெண்ணிக் குயத்தியார் (புறம்:66) ஆகிய எட்டுப் புலவர்கள் ஒன்பது பாடல்களைப் புறத்தில் பாடி உள்ளனர் என்கிறார் ந. சஞ்சீவி.

காவற்பெண்டு எனும் புலவர்,

> ................................... ஓடும்
> புலிசேர்ந்து போகிய கல்அளை போல
> ஈன்ற வயிறோ இதுவே;
> தோன்றுவன் மாதோ, போர்களத் தானே”[36]

எனப் பாடுவர்.

வீரத்தை உயிராகப் போற்றிய பண்பினைக் காணலாம். வீரமங்கை ஒருத்தி தன் மகன் எங்கே எனக் கேட்டதற்கு வீரத்தாய் புலி கிடந்து பின் வெளியே போன மலைக்குகை போல, அவனைப் பெற்ற வயிற்றினை இதோ பார்! அவன் போர்க்களத்திலே வந்து தோன்றுவான். அவனை அங்கே போய்க் காண்பாயாக என உரைக்கிறாள்.

குறமகள் இளவெயினி, ஏறைக்கோனின் நாட்டுச் சிறப்பைப் பாடும் நிலையில்,

> "மடமாண் நாகுபிணை பயிரின், விடர்முழை
> இரும்புலிப் புசர்ப் போத்து ஓர்க்கும்
> பெங்கல் நாடன் - எம் ஏறைக்குத் தகுமே"[37]

எனப் பாடுவார்.

கலைமாண் பிணையை அழைக்கும் குரலைப் புதருள் கிடக்கும் ஆண்புலியும் செவிதாழ்த்துக் கேட்கும் தன்மையும் உடைய மலைநாட்டுத் தலைவன் ஏறைக்கோன் என்கிறார்.

சங்ககாலப் பெண்களின் உணர்வு, வீரத்தையும் இரக்கத்தையும் ஒரு சேர எண்ணிய இருப்பது ஈண்டு அறியத் தகுந்ததாகும்.

"பண்டைத் தமிழ்நாட்டில் பெண்ணுரிமையும், அவ்வுரிமைக்குரிய கல்வியும், பிறவும் இருந்தமையால், அந்நாளையப் பெண்மக்கள் வீரத் தாய்மார்களாகவும்,பல அறச்செயல்களை நிகழ்த்தும் ஆற்றல் வாய்ந்தவர்களாகவும் இருந்தார்கள். பழந்தமிழ்நாட்டுப் பெண்மக்களின் வீரச் செயல்களும் பிறவும் போற்றுதற்குரியன"[38] என்பார் திரு.வி.க. இக்கூற்று இங்கு ஒப்பு நோக்கத்தக்கதாகும்.

## பொதுநலக் கருத்துரைகள்

"மனிதன் தான் படைக்கும் இலக்கியத்தை எதன் சார்பும் இல்லாமல் படைத்துவிட முடியாது. தான் வாழும் சமூகம், வாழ்க்கை முறை ஆகியவற்றை ஏதேனும் ஒரு வகையில் படைப்பாளன் பதிவு செய்து விடுகிறான். அவனால் சமூகத்தை விட்டுப் பிரிந்து நின்று செயலாற்ற முடியாது. அதனால் தான் மனிதகுல சமுதாயத்தின் ஓர் அங்கமாய் அதனோடு இணைந்தும், முரண்பட்டும், மோதியும், இசைந்தும் குறிப்பிட்ட சூழலில் வாழ்கிறவன் மனிதன். மனித குலத்தில் தானும் ஒருவனாய் வாழும் அவன் வாழ்க்கை நடைமுறைகளின் காரணமாக அமையும் உணர்வு நிலையில் ஒரு வெளிப்பாடாக இலக்கியத்தைத் தோற்றுவிக்கிறான்"[39] என்பார் தி.சு.நடராசன்.

புறப்பாடல் பாடிய புலவர்கள் நாட்டின் நன்மைக்கும், வளமைக்கும் உயர்வுக்கும் பல கருத்துக்களைத் தம் பாக்களில் வடித்து உள்ளனர் அவர்களின் நோக்கம் சமுதாயம் நல்லறக் கோவிலாக விளங்க வேண்டும் என்பதாக உள்ளது. தன்னலமற்றவர்களாக, பொதுச் சிந்தனைகள் அதிகம் உடையவராக இயல்பாகவே அமையப் பெற்று உள்ளனர் என்பதும் அவர்களின் பாடல்கள் வழி அறியலாகிறது.

‘‘உயர்ந்த கருத்துக்களை எடுத்துரைக்கும் இலக்கியங்கள் தீயவற்றை ஒதுக்கி நல்லனவற்றை உணர்த்துவதில் முன் நிற்கின்றன. நல்ல கருத்துக்களைச் சமுதாயத்திற்கு எடுத்துக்கூறி நெறிப்படுத்தியதன் காரணமாகப் புலவர்கள் சொல்லேர் உழவர், புலனேறு உழவர் எனச் சிறப்பிக்கப் பெற்றனர்’’[40] என்பர். இவர்தம் கூற்று சங்கப் புலவர்களின் பொதுநலக் கருத்துக்களை அறிவதற்குத் துணையாக நிற்கிறது.

வறுமையின் கொடுமையைப் பெருங்குன்றூர்கிழார், சோழன் உருவப்ப.்.றேர் இளஞ்சேட் சென்னியிடம் எடுத்துரைக்கிறார்.

‘‘சான்றோர் இருந்த அவையத்து உற்றோன்
ஆசாகு என்னும் பூசல் போல
வல்லே களைமதி’’[41]

எனவரும் பாடலில்,பெருங்குன்றூர்கிழார் வறுமையில் மிகவும் துயரமுடன் இருக்கிறார். மன்னனிடம் தம் சூழ்நிலையை விளக்கி வறுமையிலிருந்து விடுதலை அடைய நினைக்கிறார். அந்தச்சூழலில் பெரியவர்கள் கூடிய அவையத்துச் சென்றவன் எனக்குத் துணையாகுக என்று கேட்க அவர் உதவுவது போல நீயும் விரைந்து என் துயர் துடைப்பாயாக என்கிறார். அதாவது, சான்றோர் என்பவர் எதையும் கருதாமல் உடன் உதவி செய்வோர் என்னும் பொதுநலக் கருத்தை முன்வைக்கிறார்.

‘‘உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு’’[42]

என்னும் குறளுக்கு, “அற்றம் காத்தற்கண் கை தன் மனத்தினும் முற்படுதலின் அவ்விரைவு இடுக்கண் களைவுழியும் அதற்கு ஒத்த தொழில் உவமையிலும் விடுவிக்க, உடையவன் தொழில் நட்பின் மேல் ஏற்றப்பட்டது”[43] என உரை வகுப்பார் பரிமேலழகர். இடுக்கண் களைவதில் மனத்தைவிட கை விரைவாகச் செயல்படுகிறது எனும் கருத்தை முன்வைக்கிறார். இந்நெறி சான்றோருக்கு உரியது என்று புலவன் சுட்டிக்காட்டி உள்ளது இங்குக் கருதத்தக்கது.

ஆலந்தூர்கிழார் என்னும் புலவர் குறிக்கோள் இல்லாதவன் நிலையைச் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனிடம் பாணாற்றுப்படையில்,

“பூட்பகை இல்லோன் யாக்கைப் போல

பெரும்புல் லென்ற இரும்பேர் ஒக்கலை”[44]

என்ற பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

குறிக்கோள் இல்லாதவன் சோம்பியிருந்தால் அவனது உடம்ப பொலிவிழந்து காணப்பட்டது. அங்ஙனம், பொலிவற்ற உடம்பினராய் பெரிய சுற்றத்தினரை உடையவன் பாணன் என்று புலவர் நல்ல உவமையுடன் தம் கருத்தைப் புலப்படுத்தியுள்ளார்.

“வேரொடு நனைந்து போற்றுஇழை நுழைந்த

துன்னற் சிதாஅர் துவர நீக்கி”[45]

ஏனப் பாடுவார் முடத்தாமக்கண்ணியார்.

இவரின் கருத்து இங்கு ஒப்பு நோக்கத்தக்கதாகும். இரவலனின் வறுமை நிலையினைப் பிறர் அறியச் செய்வதும், செல்வம் உடையவரிடம் இருந்து தன்னைப் பெரிதும் வேறுபடுத்திக் காட்டுவதும் கந்தலாடைகளே என்று குறிப்பிட்டுள்ளதைக் காண முடிகிறது.

குறிக்கோள் இல்லாதவன் சமுதாயத்தில் எந்நிலையை அடைகிறான் என்பதைப் புலவர்களின் பாடல்களின் வழி அறிந்து கொள்ள இயலுகிறது.

**திணை, துறை சார் கூறுபாடுகள்**

தொல்காப்பியரின் புறத்திணைக் கோட்பாடுகள் புறப்பாடல்களில் பொருந்திக் காணப்படுகின்றன. சில இடங்களில் சில குறிப்புரைகள் இவற்றில் பிழன்று இருக்கலாம். மறுப்பதற்கு இல்லை எனினும், இதற்குக் காரணம் நெடிய வரலாறே எனச் சொன்னால் அது மிகையாகாது.

புறம் என்பது பாலுணர்வோடு தொடர்பு இல்லாத உள்ளத்தின் உணர்வுகளை மையமிட்டு அமையப் பெற்றனவாகும். அகத்திணை ஏழும் புறத்திணை ஏழும் பொருந்துவது முதல், கரு, உரிப்பொருள்களின் அடிப்படையிலேயாகும். புறத்திணையில் காணும் திணை வைப்புமுறை, சமுதாயத்தைப் போர் வெறியிலிருந்து அறநெறிக்கு மாற்றி அமைக்க முனையும் முனைப்பாகும். பகைமை உணர்வு, மண்ணாசை, பெண்ணாசை, தன் வீரத்தை மாற்றானுக்கு வெளிப்படுத்த வேண்டும் என்ற உணர்வு போன்றவை புறத்திணைக்கு அடிப்படையாகும். புகழ் முக்கியக் காரணமாக இருப்பதைத் தொல்காப்பியர் வழி உணரலாம். விரிச்சி, காந்தள், உன்னநிலை, பூவைநிலை, நடுகல் முதலியன பழங்குடி மக்களின் நம்பிக்கைகளின் வெளிப்பாடாகும். வஞ்சித்திணையும், தும்பைத் திணையும் மன்னர்களின் அறமற்ற செயல்களை உணர்த்தி நிற்கின்றன. இதனைத் தடுக்கும் மன்னர்கள் அறம் மிக்கவர்களாகத் திகழ்கின்றனர். தொல்காப்பியரின் புறத்திணையியலில் இடம்பெற்றுள்ள திணை வரையறைகள் அனைத்தும் ஒரு திறத்தார் செயல்களாகவே உள்ளன.

> ‘‘வெட்சிதானே குறிஞ்சியது புறனே’’[46]
>
> ‘‘வஞ்சிதானே முல்லையது புறனே’’[47]
>
> ‘‘உழிஞதானே மருதத்துப் புறனே’’[48]
>
> ‘‘தும்பைதானே நெய்தலது புறனே’’[49]
>
> ‘‘வாகைதானே பாலையது புறனே’’[50]
>
> ‘‘காஞ்சிதானே பெருந்திணைப் புறனே’’[51]
>
> ‘‘பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே’’[52]

எனச் சுட்டுவார் தொல்காப்பியர்.

புறநானூற்றில் கரந்தை, காஞ்சி, கைக்கிளை, தும்பை, நொச்சி, பாடாண், பெருந்திணை, பொதுவியல், வஞ்சி, வாகை, வெட்சி ஆகிய பதினொரு திணைகள் மட்டுமே பாடப்பட்டுள்ளன. ‘உழிஞைத் திணை’ புறநானூற்றில் பாடப்படவில்லை’. மேலும் அரசவாகை முதலாக வேத்தியல் ஈறாக அறுபத்து ஐந்து துறைகள் பாடப்பட்டுள்ளன.

புறத்திணைகளின் பண்பியல்புகளை ஆராய்ந்த க.வெள்ளைவாரணார் ‘‘பாலை, பெருந்திணை, கைக்கிளை என்னும் அகத்திணைகளுக்குத் தமக்கென நிலமில்லாதது போலவே அவற்றின் புறத்தவாகிய வாகை, காஞ்சி, பாடாண் என்னும் திணைகளுக்கும் தமக்கென நிலமில்லை என்பதாம்’’ என்றும்,

‘‘நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்’’ விவரித்துப் பாடப் பெற்று வரும் அகத்திணை ஒழுகலாற்றை விளக்கும் முறையில் அகத்திணைக்குரிய துறைப் பகுதிகளை எல்லாம் தலைவன், தலைவி, தோழி முதலிய அகத்திணை மாந்தர்க்குரிய கூற்றுகளில் வைத்து விரித்துக் கூறிய தொல்காப்பியர், தாம் எடுத்துக் கூறிய கூற்றுக்களேயன்றி அவை போன்று பரந்துபட்டு வரும் கூற்றுக்களையெல்லாம் பின்வருவோர் ஒரு நெறிப்படத் தொகுத்துப் பல்வேறு துறைகளாக வகை பெற அமைத்துக் கொள்ளும்படி செய்யுளுக்கு இன்றியமையாத உறுப்புகளுள் துறை என்பதனையும் ஒரு உறுப்பாகச் செய்யுளியலில் குறித்துள்ளார். இவ்வாறு அகத்திணைக்குரிய துறைகளைப் பலபட விரித்துக் கூறிய ஆசிரியர், புறத்திணைக்குரிய துறைகளைப் பரந்துபடக் கூறாது அவற்றையெல்லாம் தொகுத்துக் கூறும் வகையில் இலக்கணத் செய்துள்ளார். ஆயினும், அகத்திணை ஒழுகலாறுகளைப் போலவே புறத்திணை ஒழுகலாறுகளும் பல்வேறு துறைகளாகப் பரந்துபட்டு விரியும் பொருட்பகுதியினை உடையன என்பதனை உணர்த்துவதற்குப் புறத்திணைப் பகுதிகட்குத் துறை என்பதனைப் பெயராகக் கொடுத்துள்ளார்.

அகப் பாடல்களில் அகத்திணைப் பொருட்பகுதிகள் பலவாயினும் ஒரு செய்யுளுள் பல பொருட்கூறுகள் கலந்து வரினும் அவை தனித் தனித் துறைகளாகவும், பல துறைகளும் விரவிய ஒரு துறையாகவும் அமைத்தும் துறைப்படுத்திப் பொருள் கொள்ளுமாறு புறப்பாடல்களிலும் புறத்திணைப் பொருட்பகுதிகள் பலவாகத் தனித்தனித் துறைகளாகவும் பலதுறைகளும் விரவிய ஒரு துறையாகவும் கொண்டு துறைப்படுத்திப் பொருள் கொள்ளுதல் வேண்டும் என்பது மேற்குறித்த உரைப் பகுதியால் இனிது புலனாகும்''[54] என்கிறார். இவரின் ஆய்வுரை புறத்திணை, துறைகளின் பண்புகளை அறிய ஏதுவாக அமைகிறது. மேலும், புறம் பாடும் புலவர்களின் புலமை நலனை தெள்ளிதின் விளக்கி நிற்கிறது. மரபுகளைப் போற்றிய மதி நுட்பமுடையவர்களாகப் புலவர்கள் திகழ்வது போற்றுதற்குரியதாகும்.

உ.வே.சா அவர்கள் ‘‘புறம் 244, 267, 268, 282, 289, 323, 324, 325, 355, 356, 357, 358, 359, 360, 361 ஆகிய பாடல்கள் திணையிறந்து போன பாடல்கள் என்றும், 244, 245, 247, 268, 282, 285, 323, 324, 325, 355, 356, 357, 361 ஆகிய பாடல்கள் துறையிறந்து போனது என்றும், 289-வது பாடல் திணையும் துறையும் இல்லாத பாட்டுக்கு என்றும்''[55] உரைக்கிறார். திணையும் துறையும் பாடல்களுக்கு அணி சேர்ப்பன என்பது புலனாம்.

## அறிவியல் சிந்தனைகள்

இலக்கியம் பட்டறிவின் வெளிப்பாடு எனில் அறிவியல் உண்மையின் வெளிப்பாடு. அறிவியலும் இலக்கியமும் தம்முள் நெருங்கிய உறவு கொண்டவையாகும். அறிவியலில் தற்காலத்தில் பல துறைகளில் உருவாகியுள்ளன. தொடக்கத்தில் உயிரியல், வானியல், தாவரவியல், பறவைகள், உடலியல், மருத்துவம், குறித்த அறிவியல் கருத்துக்களை தம் பாடல்களில் புலவர்கள் படைத்து உள்ளனர். குறிப்பாக, வானியல் திறன் மிக்கவர்களாகத் திகழ்கிறார்கள். பருவங்கள், விண்மீன்கள், கோள்கள் இவற்றைப் பற்றிய நுட்பமான செய்திகளைத் தெள்ளிதின் உரைத்துள்ளனர்.

"இருவகைப் பிரிவும் நிலைபெறத் தோன்றி னுஞ்

உரியதாகும் என்மனார் புலவர்"[56]

எனப் பெரும்பொழுதையும், சிறுபொழுதையும் சுட்டுவர் தொல்காப்பியர்.

இதேபோல, ஆண்டினையும் கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என ஆறாகவும், ஒரு நாளினை வைகறை, காலை, நண்பகல், எற்பாடு, மாலை, யாமம் என ஆறு கூறாகவும் சுட்டுவர் தொல்காப்பியர்.

கோவூர்கிழார், சோழன் நலங்கிள்ளியை இயன்மொழியில் பாடும் நிலையில்,

"மாக விசும்பின்வெண்திங்கள்

மூவைந்தான் முறை முற்றக்"[57]

என்று பாடுவர்.

வானில் விளங்கும் பிறைமதி பதினைந்தாம் நாள் முழுமை பெற அதனை நீ கடலின் நடுவே காண்பது போல எனக் குறிக்கிறார்.

தாமே ஒளிர்வன நாண்மீன்கள் கடன் பெற்றொளிர்வன கோண்மீன்கள், திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, ஞாயிறு, இராகு, கேது என்பன கோள்களாகும். திங்களாகிய கோண்மீன் ஒவ்வொரு நாளும் நிற்கும் நிலையிலேயே நாண்மீன். அது ஞாயிற்றோடு சேர்வதும், பிரிந்து எதிர்ப்பக்கம் சேர்வதும் நிகழ்கையில் அதன் ஒளி நாளும் வளர்ந்து முழுமையாகும். இந்த வானியல் செய்தியினைச் சோழன் நலங்கிள்ளியின் வல்லாண்மையை உணர்ந்து பாடி இருப்பது புலவரின் அறிவியல் சிந்தனைக்குச் சான்றாகும்.

திங்களின் வளர்ச்சியினையும், தேய்வினையும் புறம் பாடிய புலவர்கள்,

"உலவுமதி உருவின் ஓங்கல் வெண்குடை"[58]

என இரும்பிடத் தலையாரும்,

"ஏணைநாள் திங்கள் அனைய கொடுங் கரைத்த"[59]

எனக் கபிலரும்,

"உவத் தலைவந்த பெருநாள் அமையத்து
இடுசுடர் தம்முள் நோக்கி, ஒரு சுடர்
புன்கண் மாலை மலைமறைந் தாங்கு"[60]

எனக் கழாஅத் தலையாரும் பாடுவர்.

ஒளி பொருந்திய முழு நிலவை உவாமதி எனவும் உவவுமதி எனவும் குறிப்பார் இரும்பிடத்தலையார். பதினைந்து கலைகளாக வளர்வதும் அவ்வாறே பதினைந்து கலைகளாகத் தேய்வதும் திங்களின் இயல்பு. இவற்றைக் குளத்தின் வடிவத்திற்கு எட்டாம் நாள் பிறை நிலவை உவமையாக உரைப்பார் கபிலர். முழுமதி நாளில் சூரியனும், சந்திரனும் எதிரெதிராகத் தோன்றும் என்றும், திங்களின் தோற்றமும் ஞாயிற்றின் மறைவும் ஒருங்கே நிகழ்வதை எடுத்தியம்புவர் கழாஅத் தலையார். இப்பாடல்களின் வாயிலாகப் புலவர்கள் வானியல் திறன் மிக்கவர்கள் என்பதை அறியலாம். மேலும்,

"வெள்ளி தோன்றப் புள்ளக் குரல் இயம்ப"[61]

எனக் கல்லாடனாரும்,

"மதிநிலாக் கரப்ப வெள்ளி ஏர்தர"[62]

எனத் திருத்தாமனார் பாடுவது இங்கு ஒப்பு நோக்கத் தக்கதாகும். மழை பெய்வதையும் தீ நிமித்தங்கள் போன்ற குறிப்பினை,

"கைம்மீன் புகையினும் தூமம் தோன்றினும்
தென்திசை மருங்கின் வெள்ளி ஓடினும்"[63]

எனக் கபிலர் பாடுவார்.

"அலங்குதிர் களை நால்வயின் தோன்றினும்
இலங்கு கதிர் வெள்ளி தென்புலம் படரினும்"[64]

என ஞாயிறு வேறுபடத் தோன்றுவனைச் சுட்டுவார் வெள்ளைக்குடி நாகனார்.

"திசைக்கு நான்கும் உற்கம் உற்கவும்"[65]

எனும் பாடலடியில் எரிகொள்ளி எரிந்து வீழ்வதைச் சுட்டுவார் கோவூர்கிழார்.

## வரலாற்றியல் பதிவுகள்

இலக்கியத்திற்குப் புனைவு முக்கியம். வரலாற்றிற்கு உண்மை முக்கியம். உண்மையே வரலாறாக நிற்கும். இலக்கியம் இன்பமுடையது எனின், வரலாறு உண்மையுடையது எனில் ஒக்கும். வரலாறும் இலக்கியமும் தம்முள் இணக்கமான உறவு பூண்டவை. ஒன்றில் ஒன்று காட்சிகள் ஆகும். வரலாற்று ஆய்வாளர்கள் இலக்கியத்தைச் சான்றாகக் கொள்வதைக் காணல் நலம் பயக்கும். சங்கப் பாக்களான புறநானூறும், பதிற்றுப்பத்தும் வரலாற்று ஆவணங்கள் ஆகும்.

"சங்கத்துச் சான்றோர் இயற்றியுள்ள தொகை நூல்களுள் பதிற்றுப்பத்தும் புறநானூறும் தனிச் சிறப்புடையனவாகும். அவை பண்டைக்காலத்தில் நம் தமிழகத்தில் நிலவிய முடியுடைய தமிழ் வேந்தர், குறுநில மன்னர், பிற தலைவர்கள், புலவர் பெருமக்கள், நல்லிசைப்புலமை நங்கையர் முதலானோரின் அரிய வரலாறுகளையும், தமிழருடைய பழைய நாகரீக நிலையினையும் மற்றும் பல உண்மைகளையும் நமக்கு அறிவுறுத்தும் பெரும் கருவூலங்கள் எனலாம். சுருங்கச் சொல்லுமிடத்து அவை தமிழ்நாட்டின் பழைய வரலாற்று நூல்கள் என்று கூறுவது எல்லாவற்றானும் பொருந்தும்"[66]என்பர் வரலாற்றியல் ஆய்வறிஞர் சதாசிவப் பண்டாரத்தார்.

பதிற்றுப்பத்து முழுவதும் வரலாறே என்பதற்குச் சான்றாக,"தொகுத்தவர் ஒவ்வொரு பத்தின் இறுதியிலும் தாம் ஒவ்வொரு பதிகம் இயற்றிச் சேர்த்திருத்தலை நோக்குங்கால் அவர் சிறந்த புலவராயிருத்தல் வேண்டும் என்பது தெளிவாகும். ஒவ்வொரு பதிகத்திலும் அப்பத்தின் பாட்டுடைத் தலைவன் இன்ன வேந்தன் என்பதும் அவன் அருஞ்செயல்கள் என்ன என்பதும் அவனைப் பத்துப்பாடல்களில் பாடிய புலவர் இன்னார் என்பதும் அப்பாடல்களின் பெயர்கள் இவை என்பதும் சொல்லப்பட்டுள்ளன.

பதிகத்தைச் சார்ந்த உரைநடைப் பகுதியில் அப்பத்தினைப் பாடிய புலவர் பெற்ற பரிசிலும், வேந்தன் ஆட்சி புரிந்த ஆண்டின் விவரமும் கூறப்பட்டிருக்கின்றன. ஆகவே, ஒவ்வொரு பத்தின் இறுதியிலுள்ள பதிகமும் உரைநடைப் பகுதியும் வரலாற்று ஆராய்ச்சிக்குப் பெரிதும் பயன்படும் என்பது கருத்து''[62] என மேலும் ஒரு முடிவு கூறுவர்.

''மன்னிய பெரும்புகழ் மறுவில் வாய்மொழி
இன்னிசை முரசின் உதியஞ் சேரற்கு
வெளியன் வேண்மாள் நல்லிணி யீன்றமகன்
அவைவர வருவி யிமையம் விற்பொறித்
திமிழ்கடல் வேலித் தமிழகம் விளங்கத்
தன்கோ னிறீஇத் தகைசால் சிறப்பொடு
பேரிசை மரபி னாரியர் வணக்கி
நெய்தலைப் பெய்து கைபிற் கொளீஇ
அருவிலை நன்கலம் வயிரமொடு கொண்டு
பெருவிறன் மூதூர்த் தந்துபிறர்க் குதவி
அமையார்த் தேய்த்த அணங்குடை நோன்றாள்
இமைய வரம்பன் நெடுஞ்சேர லாதனைக்
குமட்டூர்க் கண்ணனார் பாடினார் பத்துப்பாட்டு''[68]

என்பது பதிற்றுப்பத்தின் முதல் பதிகம் ஆகும்.

பாட்டுடைத் தலைவன், இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைப் பாடிய புலவர் குமட்டூர் கண்ணனார் ஆவார். இற்றல் 'புண்ணுமிழ்குருவி' முதலாக 'அட்டுமலர் மார்பன்' ஈறாக பத்துப் பதிகங்களைக் கொண்டது.. இந்நூலைப் பாடியப் புலவருக்கு உம்பற்காட்டு ஐந்நூறு பிரமதாயம் கொடுத்து முப்பத்தெட்டு ஆண்டு தென்னாட்டுள் வருவதற்கு உரிமை கொடுத்தான் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன். இவன், ஐம்பத்தெட்டாண்டு அரசனாக வீற்றிருந்தான் என்று வரலாற்றுச் செய்திகளை உரைக்கின்றன.

பதிற்றுப்பத்து வழி சேரர்கள் இரு மரபினராக இருந்தனர் என்பது புலனாகிறது. உதியன் மரபினர், இரும்பொறை மரபினர் என்பது அம்மரபுகளின் பெயர்களாகும்.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், பல்யானைச் செல்கெழுகுட்டுவன், களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல், கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன், ஆடுகொட்பாட்டுச் சேரலாதன் ஆகியோர் உதியன் மரபினராவர்.

செல்வக்கடுங்கோ வாழியாதன், தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறை, இளஞ்சேரலிரும்பொறை ஆகிய மூவரும் இரும்பொறை மரபினர் ஆவர்.

‘‘சேர மன்னர்களின் செயல்கள் வெறும் புனைந்துரைச் செய்திகள் அல்ல என்பதும், அவை வரலாற்று உண்மைகளேயாம் என்பதும் சேரநாட்டில் கிடைக்கும் சான்றுகள் எனத் தெள்ளிதிற் புலனாகின்றது’’[68] என்னும் வரலாற்றறிஞர் சதாசிவப் பண்டாரத்தாரின் கூற்று இங்கு குறிப்பிடத்தக்கதாகும்.

கோவூர்கிழார், சோழன் நலங்கிள்ளியின் பாணாற்றுத் தன்மையை வேறொரு புலவருக்கு உரைக்கும் நிலையில்,

‘‘உட்பகை ஒருதிறம் பட்டெனப், புட்பகைக்கு
ஏவான் ஆகலின், சாவே யாம்’’[69]

எனப் பாடுவர்.

‘‘தலைவன், தன் படையில் ஒரு பகுதிக்கண் உட்பகை தோன்றியதெனின் அது குறித்து செய்வன செய்தற்கு மேற்செலவை நிறுத்தி விடுவான்; அது போல வேந்தன் புட்பகை கேவானாதல் கண்டு,‘புட்பகை யொருதிறம் பட்டென’ என்றார். புட்பகை, சாரி, செம்போத்து முதலிய பறவைகள் குறுகிட் டோடித் தீநிமித்தம் செய்தல்’’[70] என உரை வகுப்பார் ஒளவை சு.துரைசாமிப்பிள்ளை.

“புட்பகை என்பது இவனுக்கு ஒரு பெயர்”[71] என்று சோழன் நலங்கிள்ளியைப் பற்றி கோவூர்கிழார் கூறியுள்ளதைக் உ.வே.சா இங்குக் குறிப்பிட்டுள்ளார். மேலும் இது வரலாற்றுச் செய்தி என்றும் உ.வே.சா.குறிப்பு சிந்தனைக்குரியதாகும்.

## உளவியல் அணுகுமுறைகள்

“புறத்தில் உள்ளவை அகத்தின் எதிரொளியே. அகத்தில் இல்லாதவை புறத்தில் இல்லை. அகத்திற்கேற்பப் புறமும் புறத்திற்கேற்ப அகமும் மாறுவன. அனைத்துப் பிரச்சனைகளின் பிறப்பிடமும் அவற்றுக்கான தீர்வுகள் இருக்குமிடமும் ஒன்றே. அதுதான் உள்ளம்”[72] என உள்ளத்திற்கு உளவியல் வரையறை வழங்குவர் தி.கு.இரவிச்சந்திரன்.

“மனிதன் சிந்திக்கும் திறன் உள்ள பிராணி என்று புகழ் பெற்ற தத்துவ ஞானி அரிஸ்டாட்டில் கூறினார். சிந்திக்கும் திறன் மனிதனுக்கே உண்டு. மற்ற உயிரினங்களுக்கு இல்லை. இதுதான் மனிதனுக்குள்ள தனிச்சிறப்பாகும். சிந்திப்பதற்கு மனிதனுக்கு ‘மனம்’ என்ற மகாசக்தி வாய்ந்த ஒன்று இருக்கிறது”[73] என்பர் மில்டன் ப.சார்லஸ்.

எண்சாண் உடம்பிற்குத் தலையே பிரதானம் என்றவாறு, மனிதன் எனில் மனம் என ஒக்கும். சிக்மண்ட் பிராய்டு. படைப்பாளர்கள் மனத்தின் உணர்வுகளை வெளிக் காட்டும் நுண்ணோக்கி கருவி என்கிறார். உளவியல் என்னும் துறை சிக்மண்ட் பிராய்டு (1856 – 1939) காலத்திற்குப் பின்பு வளர்ச்சி பெற்று இருப்பினும் உளவியல் சார்ந்த சிந்தனைக்கும் தொல்காப்பியர் வித்திட்டார் எனக் கூறலாம்.

“கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்

முற்படக் கிளந்த எழுதிணை என்ப”[74]

எனத் தொல்காப்பியர்அகத்திணையின் முதல் சூத்திரத்தை உரைப்பார். அகத்திற்கு அடிப்படை மனம். அந்த மனத்தின் இயல்புகளை எழுதிணைகளாக உரைப்பது நோக்குதற்குரியதாகும்.

இந்த எழுதிணையின் உரிப்பொருள்கள் மனத்தின் உள்ளுணர்வு பிறழ்ச்சிகள் ஆகும்.

"புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்
ஊடல் இவற்றின் நிமித்தன்"[75]

என அன்புடைக் காமத்தையும்,

"காமஞ் சாலா இளமையோன்வயின்"[76]

என ஒருவர் மாட்டுக் காதலையும்,

"ஏறிய மடல்திறம் இளமை தீர்திறம்
தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறன்
மிக்க காமத்து மிடலொடு தொகைஇச்
செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே"[77]

எனப் பொருந்தாக் காதலையும் குறிப்பர்.

பெருங்கோழி நாய்கன் மகள் நக்கண்ணையார் புறநானூற்றில் கைக்கிளைத் திணையில்83, 84, 85 ஆகிய மூன்று பாடல்களைப் பாடியுள்ளார். இப்பாடல்கள் சோழன் போர்வைக் கோப் பெருநற்கிள்ளி மீது பாடப்பட்டது ஆகும். கைக்கிளைப் பழிச்சுதல் துறைச் சார்ந்ததாகும்.

"தொடிகழித் திடுதல்யான் யாய்அஞ் சுவலே"[78]

என்றும்,

"யாமே புறஞ்சிறை இருந்தும் பென்னன் அம்மே"[79]

என்றும்,

"முழாஅரைப் போந்தை பொருந்தி நின்று"[80]

எனத் தன்னுடைய ஒருதலைக் காதலை உணர்த்துவர். பெருநற்கிள்ளி மேல் காமக் காதல் கொண்டு உள்ளாள் நக்கண்ணையார். அவனை அடிக்கடி காணுகிறாள். ஆயினும், அவனைத் திருமணம் செய்வதற்கு வாய்ப்புக் கிட்டவில்லை. அவன்மேல் மேலும், மேலும் காதல் உணர்வு உண்டாகிறது.

காதலால் மகளிர் பசலை பாய்தல் இயல்பாகும். அந்தப் பசலை நோயால் துன்புறுகிறாள். அவனின் வெற்றிச் சிறப்பை நினைத்து பனையில் பொருந்தி நின்ற என்னுடைய வளையும் தலைவனிடம் தோற்றது என்கிறாள். இது ஒருதலைக் காதலின் உச்சநிலை ஆகும்.

"வேட்கைகளின் ஒரே நோக்கம் தன்னிறைவு ஆகும். அகநிலையைத் தம் வசமாக்கி நிறைவு காண முனையும், இதில் தாமதமோ அல்லது இயலாமையோ ஏற்பட்டால் உள்ளத்தில் இறுக்கத்தை ஏற்படுத்தித் துன்பத்தைத் தந்துவிடும். இக்கட்டத்தில் உள்ளம் தனது வேட்கைகளைத் தீர்த்துக் கொள்ளப் புறநிலையின் துணையை நாடும்"[81] என்னும் சிக்மண்ட் பிராய்டின் உளப்பகுப்பாய்வுக் கருத்தினை அறிய முடியும்.

## மொழியியல் அமைப்பு முறைகள்

மொழியே மனிதனைப் பிரித்துக் காணும் அடையாளம். மொழியும் இனமும் பிரிக்க இயலாதன. மொழி அழியும் எனில் அந்த மொழியின் இனமும் அழிந்து விடும். இப்படி இன்று பல்வேறு இன மொழிகளும், இனக் குழுக்களும் தம் அடையாளத்தை விட்டு விட்டன. மொழியியலாளர்கள் மொழியின் வன்மை மென்மைகளை ஆராய்ந்து விளக்கும் நிலையில் தமிழ் மொழியைச் செம்மொழி எனக் குறிப்பிட்டுள்ளனர்.

தமிழின் தொன்மையை மொழி அறிஞர் ச.அகத்தியலிங்கம் கூறும்போது,"உலக மொழிகளில் காணப்படும் கிரீக், லத்தீன், ஹீப்ரு, சமஸ்கிருதம் ஆகிய பழமை வாய்ந்த மொழிகளில் இதுவும் ஒன்று. கி.மு.மூன்றாவது நூற்றாண்டு முதலே இதன் கண் மிகச் சிறந்த இலக்கணங்களும் இலக்கியங்களும் தோன்றி இடையறாத வாழ்வையும் வளத்தையும் பெற்றுள்ளது இது. இம்மொழியில்கிடைப்பனவற்றுள் முதல் நூல் என்று கருதப்படும் தொல்காப்பியம் உலக இலக்கணங்களில் காணப்படும் சிறந்த ஒன்றாகக் கருதப்படுவது. சிறந்த பல ஒருங்கிணைந்த கொள்கைகள் அடிப்படையாக வைத்துச் செம்மையாக ஆக்கப்பட்ட இலக்கணம் இது"[82] என உரைப்பர்.

“குமரிக் கண்டத்தில் முதல் முதலில் மக்கள் இருந்தனர் என்றும் அவர்கள் பேசிய மொழியே உலக முதல் மொழி என்னும் கொண்டால், பழந்தமிழரே முதலில் தோன்றிய மக்கள் என்றும் உலகில் ஆங்கிலேயர் முதலான ஐரோப்பியரும் மற்ற இனத்தவர்களும் பழந்தமிழரின் வழித் தோன்றியவர்களே என்றும் மொஹெஞ்சதாரோவில் வளர்ந்த பழந்தமிழ் நாகரிகமே மத்திய தரைக்கடலை அடுத்த பகுதிகளில் எகிப்து நாகரிகம் பாபிலோனியா நாகரிகம், போனிய நாகரிகம், கிரேக்க நாகரிகம் முதலியன வளரக் காரணமாக இருந்தது என்றும் கருத இடம் உள்ளது”[83] என்று வி.ஆர்.ஆர்.திங்கிதார் எழுதிய தென்னிந்திய வரலாறு என்னும் நூலின் கருத்தை மேற்கோள் காட்டுவார் மு.வ.

மேலும்,“வரலாற்றைப் போற்றிக் குறித்துரைக்கும் வழக்கம் இந்த நாட்டில் இருந்ததில்லை உள்ள சிறு குறிப்புகளும் அயல் நாட்டிலிருந்து இங்கு வந்தவர்கள் இந்த நாட்டைப் பற்றி எழுதி வைத்துள்ள ‘பெரிப்ளஸ்’ முதலிய குறிப்புகளே, கிரேக்க ஆசிரியர் ‘தாலமி, மெகஸ்தனிஸ், பிளைனி, சீனாவிலிருந்து வந்து சுற்றிப்பார்த்த ஹுயூன் சியாங்’ ஆகியோரின் குறிப்புகள் உள்ள அளவிற்குத் தமிழ் நாட்டில் தமிழர் ஒன்றும் குறித்து வைக்கவில்லை. தமிழர் வேந்தரைப் பற்றி இலங்கை நாட்டு வரலாறாகிய மகாவம்சம் என்றும் பழைய நூல் குறித்துள்ள அந்த அளவிற்கும் தமிழ் நாட்டில் வரலாற்று நூல் இல்லை. பழந்தமிழ் நாட்டைப் பற்றி அறிவிக்கும் சான்றுகளாக உள்ளன எல்லாம் புறநானூறு முதலிய இலக்கிய நூல்களே ஆகும்.”[84] என்பார்.

மொழி வரலாற்றிற்கும் இன வரலாற்றிற்கும் நாகரீக பண்பாட்டிற்கு ‘புறநானூறு களஞ்சியமாகத் திகழ்கிறது’ என்பது அறியற்பாலதாகும். புறப்புலவர்களின் பணி அளவிடற்கரியதாகும்.

“ஒரே நேரத்தில் மொழியானது ‘இரட்டைச் செயல்’ செய்கிற கருவியாகப் பயன்படுகிறது; அதாவது முதற்கண் மனிதர்களின் அல்லது படைப்பாளிகளின் கலை பூர்வமான சிந்தனைக்கு மொழி தான் ‘உருவம்’ கொடுக்கிறது. இரண்டாவதாக, அவ்வாறு உருவம் கொடுத்த பின்னர், மேலும், மேலும் அதனைப் படைப்பாளியிடமோ வாசகரிடமோ தூண்டுகிற ஒரு சக்தியாகவும் விளங்குகிறது.

எனவே, இலக்கியக் கல்வி என்பது மொழியியல் சார்ந்தது என்பது உறுதியாகிறது''[85] என்றும்,‘‘எந்த ஒரு படைப்பாளியும் பொதுவான மொழியிலிருந்து விலகித் தனக்கேயான ஒரு மொழிநடையைக் கண்டுபிடித்துக் கொள்ளத் தவறினால் அவரது இலக்கியப் படைப்பு வெற்றி பெறுவது என்பதே அரிது தான்''[86] என்பர் திறனாய்வாளர் பஞ்சாங்கம்.

மொழியியலும் இலக்கியமும் இணைந்ததே என்பது நன்கு புலனாகும். புறப்பாடல்களில் பஞ்சாங்கம் அவர்களின் திறனாய்வுக் கருத்துப் பொருந்தி இருப்பது உணரத்தக்கது. மேலும் மு.வை.அரவிந்தன் ‘‘நூல்கள் தோன்றிய காலத்தில் அவை எல்லோருக்கும் விளங்கும் நிலையில் இருந்தன. உரையும் விளக்கமும் இல்லாத மூல நூல்களே படித்து உணரக்கூடிய வகையில் இருந்தன''[87] எனத் தம் உரையாசிரியர்கள் என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார். புறநானூறும் ஆற்றுப்படை நூல்களும் உரை இல்லாமலேயே படித்து உணரப்பட்டது என்பது புலனாகும். புறப்பாடல்கள் சமூக மொழியியலை ஏழு நிலைகளில் பிரித்து உரைக்கிறார் க.பஞ்சாங்கம். அதாவது,‘‘1.வட்டாரத்திற்குத் தகுந்தவாறு 2. சாதி வேறுபாட்டிற்குத் தகுந்தவாறு 3. மத வேறுபாட்டிற்குத் தகுந்தவாறு 4. தொழில் வேறுபாட்டிற்குத் தகுந்தவாறு 5. கல்வி அறிவிற்குத் தகுந்தவாறு 6. வர்க்க வேறுபாட்டிற்குத் தகுந்தவாறு 7. தான் சேர்ந்த இயக்கத்திற்குத் தகுந்தவாறு''[88] எனப் பிரிப்பர்.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனை, குமட்டூர் கண்ணனார்,

> ‘‘தொல்பசி உழந்த பழங்கண் வீழ
> எ∴கு போழ்ந்து அறுத்த வால்நிணக் கொழுங்குறை
> மைஊன் பெய்த வெண்ணெய் வெண்சோறு
> நனவுஅமை கள்ளின் தேறலொடு மாந்தி
> நீர்ப்படு பருந்தின் இருஞ்சிறை அன்ன
> நிலம்நின் இதாஅர் களைந்த பின்றை''[89]

எனப் பாடுவார்.

நெடுநாட்களாகப் பசியால் வருந்திய வருத்தம் கெடவும், அரிவாளால் பிளந்து அறுக்கப்பட்ட வெள்ளிதாகிய ஊனினிது கொழுவி இறைச்சியும், கூட்டிறைச்சி பெய்து சமைத்த வெண்ணெல்லின் வெண்மையான சோறும் அளித்தீர். மேலும் தேறலொடு மலரரும்பு பெய்து பக்குவம் செய்யப்பட்ட உணவினையே உண்ணச் செய்தாய். மண்படிந்த மாசேறியக் கந்தையாகிய உடையை நீக்கிப் பின் உணவு வழங்கினாய். உன் சுற்றத்தையும், செல்வத்தையும் கேட்கும் நிலையில் இனிதாக இருக்கிறது என்கிறார்.

''மைஊன் மொசித்த ஒக்கலொடு''[90]

என ஔவை பாடுவதும்,

''நெய் குய்யவான் நவின்ற
பல் சோற்றான், இன், சுவைய''[91]

எனக் கோவூர்கிழாரும்,

''கூதிர்ப் பருந்தின் இருஞ் சிறகு வுன்னா
பாறிய சிதாரேன்''[92]

எனப் பரணர் பாடுவதும் இங்கு ஒப்புநோக்கத் தக்கதாகும்.

மொழியியல் திறனாய்வில் வகுத்த வகைப்பாட்டில் ''தான் சேர்ந்த இயக்கத்திற்குத் தகுந்தவாறு'' என்னும் வகைமையில் மன்னனுக்குரிய உயரிய நெறியில் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் திகழ்கிறான்.

## அழகியல் சிந்தனைகள்

திறனாய்வுக் கலை வரலாற்றில் அழகியல் திறனாய்வு இலக்கியத்தின் எல்லா அழகுகளையும் ஒருங்கே காண்பிக்கும் கண்ணாடி ஆகும். புலவரின் உயரிய அக அழகுகளை இன்னது எனச் சுட்ட வாசகனும், திறனாய்வு அறிஞரும் ஒருங்கே இத்தளத்தில் பயணம் செய்கின்றனர்.

வாசகனை ஒரு திறனாய்வாளர் நிலைக்கு உணர்த்தும் தகுதி பெற்றதாக இத்திறனாய்வு திகழ்கிறது. அழகு என்பது காணும் பொருளில் இல்லை, காணும் கண்களில் இருக்கிறது என திரு.வி.க அழகின் பொருண்மையைச் சுட்டுவார். அழகியல்வாதம் மேலைநாட்டுத் திறனாய்வாளர்களால் வளர்க்கப்பட்ட கலை என்று இவர் கருதுவார். ஆயினும், கம்பராமாயணமும், சிலப்பதிகாரமும் அழகியல் திறனாய்வுக்குக் களங்கள் என க.பஞ்சாங்கம் கூறுகிறார். தொல்காப்பியர் எண்வகை மெய்ப்பாட்டில் உணர்த்துவது அழகியல் கலையே ஆகும். அழகியல் என்பது முருகியல் இன்பமாகும்.

அழகியல் திறனாய்வின் தந்தையாக வ.வே.சு.ஐயர் திகழ்கிறார். வ.வே.சு. ஐயர் ‘‘யதார்த்தம் என்ற பெயரில் உள்ளதை உள்ளபடியே வர்ணிப்பது, இயற்கைக் காட்சிகளைப் போட்டோ பிடிப்பது போல சித்தரிப்பது எல்லாம் போதாது எனக் குறிப்பிடுகிறார். இதயத்தில் பேருணர்ச்சி எழுப்ப இவைகள் போதாது என்பது அவரது முடிவாக இருக்கிறது’’[95] என வ.வே.சு.ஐயரின் அழகியல் வாதக் கோட்பாட்டை மேற்கோள் காட்டுவார் க.பஞ்சாங்கம். அழகியல் திறனாய்வு இந்திய மரபிற்கு உரியது என்பதை ‘‘வ.வே.சு.ஐயர் வலியுறுத்தும் சுவை தொல்காப்பியர், பரதமுனிவர் ஆகியோரால் வலியுறுத்தப்பட்ட ஒன்றுதான். அது போலவே பேருணர்ச்சி, பேரானந்தம் எல்லாம் இந்திய மரபிற்குள் உட்பட்டவையாகும்’’[96] என்பார் க.பஞ்சாங்கம்.

ஆற்றுப்படை நூல்களில் மலைபடுகடாமிற்குச் சிறப்பிடம் உண்டு. எப்படியெனின் ‘‘தொல்காப்பியனார் தம் நூலினுள் செய்யுளியலில் செய்யுட்குரிய அம்பை முதலிய எண்வகை வனப்பினை வகுத்தோரிடத்து,‘‘இழுமென மொழியான் விழுமியது நுவலினும் பரந்த மொழியான் அடிநிமிர் தொழுகினும் தோலென மொழிப தொன்மொழிப் புலவர், எனத் தோலென்னும் வனப்பிற்கு இலக்கணம் கூறிப் போந்தார். இவ்விலக்கணத்தின் பரந்த மொழியான் அடி நிமிர்ந்தொழுகியதற்கு மலைபடு கடாத்தையே உரையாசிரியர் இளம்பூரணர் எடுத்துக் காட்டுவாராயினார்’’[95] எனக் குறிப்பர் பொ.வே. சோமசுந்தரனார்.

நச்சினார்க்கினியர் மலைபடுகடாமிற்கு “மலைக்கு யானையை உவமித்து அதன்கண் பிறந்த ஓசையைக் கடாமெனச் சிறப்பித்ததனால், இப்பாட்டு மலைபடுகடாம் என்று பெயர் பெற்றதென்பர்”[96] என்று விளக்கம் கூறுவார் சோமசுந்தரனார்.

முருகியல் உணர்ச்சிக்கும், உவமைக்கும், உள்ளுறைக்கும் மலைபடுகடாம் களம் என்பது ஒருதலையாகும்.

“திருமழை தலைஇய இருள்நிற விசும்பின்
விண்அதிர் இமிழ்இசை எடுப்ப, பண் அமைந்து
திண்வார் விசித்த முழவொடு, ஆகுளி
நுண் உருக்கு உற்ற விளங்கு அடர்ப் பாண்டில்
மீன் இரும்பீலி அணித்தழைக் கோட்டொடு”[97]

என நன்னன் வேண்மான் ஆட்சிசெய்த பல்குன்றக் கோட்டத்தை இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர் பெருங்கௌசிகனார் இவ்வாறு பாடியுள்ளார்.

புலவர் தொடக்கத்தில் இயற்கை அழகியலைப் பாடியுள்ளதைக் காண முடிகிறது. இறைவன் இயற்கையானவன், அழிவில்லாதவன் இயற்கையும் மாறுபாடு இல்லாதது. இதை உணர்ந்து கொள்ளுதல் முருகியல் இன்பமாகும்.

திருமழை என்னும் மங்கலச் சொல்லாலே இந்நூல் தொடங்குகிறது. திருமழை என்பது திருவினை உண்டாக்கும் மழை ஆகும். திருமழை என்பதற்கு உலகத்திற்கு உறுதியாகிய அறம், பொருள், இன்பங்களுக்கு உறுதியாக உள்ளது எனப் பொருள் கொள்ளலாம். கூத்தர்கள் ஏந்திச் செல்லும் பல்வேறு இசைக் கருவிகளும் சுட்டப்பட்டுள்ளது. எல்லா இசைக் கருவிகளுக்கும் மத்தளம் அடிப்படை என்பது புலனாகிறது. அதற்காகவே அதனை முதலில் குறித்தனர் புலவர்கள். மத்தளத்தின் ஒலிக்கு மேகத்தின் அதிர்வு உவமிக்கப்பட்டுள்ளது.

## இறைக்கோட்பாடுகள்

சங்கப் புறப்பாடல்கள் பாடிய புலவர்கள் கடவுள் வாழ்த்து நிலையிலேயே இறைத்தன்மையைப் போற்றினார்கள் என்பது புலனாகும். தொல்காப்பியர் தொடங்கி இறைவனுக்கு அழுத்தமானப் பொருளை உணர்த்தி வந்திருக்கிறார்கள். தொல்காப்பியரின் இறைக் கோட்பாடு என்னும் தத்துவம் உருவாகிற நிலையில் இறைவனை முதன்மைப் பொருளாக உணர்த்துவதே தமிழ் மரபு ஆகும். தொல்காப்பியர் தம் நூலுள் பல இடங்களில் தமிழரின் தெய்வக் கொள்கையை விளக்கும் வகையில் பல நூற்பாக்களை அமைத்துள்ளார்.

''மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என
சொல்லிய முறையால் சொல்லவும் படுமே''[98]

என்பர்.

முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்னும் இந்நான்கும் உலகை விரும்பி வாழும் தெய்வங்களாக மாயோன், சேயோன், வேந்தன், வருணன் என்போரைக் குறிப்பர். தொல்காப்பியம் முறையே, திருமால், முருகன், இந்திரன், வருணன் (கடல் தெய்வம்) எனும் தெய்வங்களை உணர்த்துகிறார். இவற்றில் பாலை நிலத்திற்குரிய தெய்வத்தைக் குறிப்பிடவில்லை எனினும் புறத்திணையில்,

''மறம் கடைக்கூடிய துடிநிலை சிறந்த
கொற்றவை நிலையும் அகத்திணைப் புறனே''[99]

என்னும் நூற்பாவில் பாலை நிலத்திற்கு உரிய தெய்வமாகக் கொற்றவையைக் குறிக்கிறார். பாலைத் திணையை நடுவுநிலைத் திணையாகக் குறிப்பிடினும், புறத்திணையில் பாலைக்குத் தெய்வத்தைச் சுட்டி உணர்த்தியது இறைக் கோட்பாட்டின் சமநிலைத் தன்மை ஆகும்.

புறநானூற்றில் இந்திரன் கோயில், சிவாலயம், முருகன் கோயில் ஆகிய கோயில்களும்; கள்ளி நீழல் கடவுள், கூளி, நடுகல் தெய்வம், பேய், பேய்ப் பெண்டிர், பேய்மகள், பேயாயம் ஆகிய சிறு தெய்வங்களும் சுட்டப்பட்டுள்ளதாக உ.வே.சா தம் ஆய்வுரையில் குறித்துள்ளார்.

“ஆற்றுப்படை ஐந்தனுள்ளும் முன்னர்த் திருமுருகாற்றுப்படையை நிறுத்தியற்குரிய காரணம் வெளிப்படை நூல் தொடக்கத்திலேயே இறைவன்பால் ஆற்றுப்படுத்தும் முகமாக இறைவணக்கம். அஃதாவது கடவுள் வாழ்த்தாகவும் இப்பேரிலக்கியத்திற்குத் திருமுருகாற்றுப்படை அமைந்துள்ளது. அங்ஙனமே, மலைபடுகடாத்தை நூலின் இறுதியில் நிறுத்த எண்ணியதற்கும் ஒரு காரணம் வேண்டும். அக்காரணம் இவ்வாற்றுப்படையில் பொருநராற்றுப்படை முதல் ஏனைய மூன்று ஆற்றுப்படை நூல்களைக் காட்டினும் சிறந்ததென்னும் கருத்துண்மையும், நூலின் இறுதிவரை இனிமை தோன்ற வேண்டுமாயின் மலைபடுகடாத்தையே இறுதியினிறுத்தல் வேண்டும் என்று எண்ணிய எண்ணமுமேயாதல் வேண்டும் என்பது எம் கருத்து”[100] என்பார் பொ.வே.சோமசுந்தரனார். ஆற்றுப்படை நூல்கள் வைப்புமுறைக் குறித்த இவரின் ஆய்வுரை இறைக்கோட்பாட்டின் மையக் கருத்தை விளக்குவதாக அமையப் பெற்றுள்ளது. இவரின் நோக்கம் ‘எல்லா உயிர்க்கும் இன்பம்’ ஆகும். அவ்வின்பத்தை அளிக்கக் கூடியதாக மலைபடுகடாம் இறுதியில் அமையப் பெற்றுள்ளன எனச் சோமசுந்தரனார் இறைத்தன்மை குறித்துக் கூறியுள்ளதைக் காண முடிகின்றது.

திருமுருகாற்றுப்படை முருகப் பெருமானின் சிறப்புகளை எல்லாம் ஒருங்கே வழங்கும் நூல் ஆகும். ஒரு பெரும் இலக்கியப் படைப்புக்கு முருகப் பெருமான் பாட்டுடைத் தலைவனாக வைத்துப் போற்றும் புறப்புலவர்களின் படைப்பு நோக்கத்தைக் காணும் நிலையில் இறைத்தன்மைக்கு முதலிடம் வழங்கினர் என்பதை அறியலாம்.

“மாஇருள் ஞாலம் மறுஇன்றி விளங்க
பல்கதிர் விரிந்தன்று, ஒருமுகம், ஒருமுகம்
ஆர்வலர் ஏத்த, அமர்ந்து இனிது ஒழுகி
காதலின் உவந்துவரம் கொடுத்தன்றே; ஒருமுகம்
மந்திர விதியின் மரபுளி வழாஅ
அந்தணர் வேள்கி ஓர்க்குமே; ஒருமுகம்
எஞ்சிய பொருள்களை ஏமுற நாடி,
திங்கள் போலத்திசை விளக்கும்மே; ஒருமுகம்
செறுநர்த் தேய்த்துச் செல்சமம் முருக்கி
களவுகொள் நெஞ்சமொடு களம் வேட்டன்றே ஒருமுகம்
குறவர் மகள் கொடிமேல் நுசுப்பின்
மடவரல், வள்ளியொடு நகைஅமர்ந் தன்றே;
ஆங்கு, அம்மூஇரு முகனும் முறைநவின்று
ஒழுகலான்”[101]

என முருகப் பெருமானின் ஆறு முகங்களும் ஆறு நிலைகளில் பக்தர்களுக்கு நன்மையைச் செய்கின்றன என்பதை இவ்வாறு பாடியுள்ளார் நக்கீரர்.

மேலும், மாயை இருளைப் போக்கும் ஒருமுகம் அடியவருக்கு அவர் நிலையில் அருளுகின்றது ஒருமுகம். அந்தணர் வேள்விக்கு உதவி செய்கிறது ஒரு முகம். காட்டாதவை எல்லாம் காட்டுகின்ற நிலையில், முனிவர்களுக்கு இன்பம் செய்யும் ஒருமுகம். அசுரரை அழிக்கும் முகம் ஒன்று, குறவர் குறமகள் வள்ளியுடன் மகிழ்வோடு பொருந்தி நகைபுரியும் ஒருமுகம் என இந்தப் புனைவு திரை இசைப் பாடலாகவே புனையப்பட்டுள்ளது என்பதையும் அறிய முடிகின்றது.

## ஆளுமைப் பண்புகள்

'ஆளுமை' என்னும் சொல் நுண்ணிய பொருள் உடையதாகும். ஆளுமை குறித்து உளவியல் அறிஞர்கள் சிக்மண்ட் பிராய்டு தொடங்கி பல்வேறு வரையறைகளை வழங்கி உள்ளனர். அவற்றின் எல்லை மிக நீண்டதாகும்.

"ஆளுமையை ஆள்+தன்மை – அதாவது ஆளும் தன்மை என்றும் ஆள்+உண்மை – ஆளுமை என்றும் அப்பதத்தைப் பிரித்துப் பொருள் காண்பர். உளவியலில் மிக அதிகமாகப் பயன்படுத்தப்பட்ட இப்பதத்திற்கு மிக எளிதான, தெளிவான விளக்கம் தருவது சிறிது கடினமாகும்"[102] என்கிறார் அ.அல்போன்ஸ்.

உளவியல் அகராதி "நன்றாகவும் அழகாகவும் திடமிக்கவராகவும் இயல்பு, நேர்மை, நாட்டுணர்வு, அன்பு, பொறாமை, ஊக்கம், அச்சம், இரக்கம்ஈ நன்றியுணர்வு, தந்திரம் போன்ற பண்புகளைக் கொண்ட இயல்பும் நடத்தையும் நேர்ந்த மொத்தக் கலவை"[103]என்கிறது. ஆளுமைக் குறித்த பொருளை உணர்ந்து கொள்ள உளவியல் அகராதி வழங்கும் விளக்கம் பொருத்தமுடையதாகும்.

தமிழின் முதல் நூலாகக் கருதப்படும் தொல்காப்பியம் ஆளுமை குறித்துப் பேசுகிறது.

"பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டோடு
உருவு நிறுத்த காம வாயில்
நிறையே அருளே உணர்வொடு திருவென
முறையிறக் கிளந்த ஒப்பினது வகையே"[104]

என்பர்.

தலைவன், தலைவியின் தெளிந்த மனநிலையில் இருவருக்கும் ஒத்த பிறப்பும், ஒத்த ஒழுக்கமும், ஒத்த ஆண்மையும், ஒத்த ஆண்டும், ஒத்த அழகும், ஒத்த அன்பும், ஒத்த நிறையும், ஒத்த அருளும், ஒத்த அறிவும், ஒத்த செல்வமும் வேண்டுமென உரைக்கிறார்.

மேலும் தலைவனின் ஆளுமைப் பண்பினை,

“பெருமையும் உரனும் ஆடூஉ மேன”[105]

என்பதும் பொருத்தமுடையதாகும். பழி பாவங்களைக் கண்டு அஞ்சுபவன் ஆறறிவுடையவனாக இருத்தல் வேண்டும் என்பதாகும். உளவியலார் குறிக்கும் ஆளுமைப் பண்புகளைத் தொல்காப்பியர் ‘பெருமை’,‘உரன்’ என்னும் இரண்டு நிலைகளில் சுட்டுவது நோக்குவதற்குரியதாகும்.

மாறோக்கத்து நப்பசலையார் மலையமான திருமுடிக் காரியை பாடாண் திணைப் பரிசில் துறையில்.

“புலன் அழுக்கு அற்ற அந்த ணாளன்”[106]

எனப் பாடுவார்.

புறம் 126-ஆம் பாடலில் 23 அடிகளில் திருமுடிக்காரியின் மரபு வழிப் பெருமை, கொடைத்திறன், பகைவரை வெல்லும் போர்த்திறன், சேரனின் கடலாளுமைக் குறித்த வரலாற்றினை பதிவு செய்துள்ளார். ‘அந்தணாளன்’ என்னும் சொல்லாடலில் திருமுடிக்காரியின் பல்வேறு ஆளுமையைச் சுட்டிக் காட்டுவது பொருத்தப்பாடுடையதாகும். மேலும், மலையமான் சோழிய வேணாதி திருக்கண்ணனார் பாடும் நிலையில்,

“மல்லல் நன்னாட்டு அல்லல் தீரப்

பொய்யா நாவிற் கபிலன் பாடிய”[107]

எனப் போற்றுவார்.

மலையமான் சோழி வேணாதி திருக்கண்ணனார் மலையமான் திருமுடிக்காரியின் மகன் என கருதுவர் ஆய்வாளர்கள்.

நப்பசலையார் நின் தந்தையின் ஆளுமையை கபிலர் பாடியுள்ளார். அறம் காத்த பெருவலிமையுடையவனாய் இருந்து இறந்தான் உன் தந்தை. அவனைப் போன்றே நாற்புறமும் இருப்பார் வந்து சூழக் கவலையுற்ற மனவருத்தம் தீருமாறு நீ வந்து தோன்றினாய். அவன் தந்தையைப் போன்று மகனும் மக்களைக் காத்தல் ஆளுமை முறையில் சிறந்தவனாக இருந்தான் என்பார்.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் காஞ்சித்திணையில் வஞ்சினத் துறையில்,

“ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் தலைவன் ஆக
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்
புலவர் பாடாது வரைகஎன் நிலவரை”[108]

எனப் பாடுகிறார்.

புலவர்களின் வாக்குத்திறன் மீது மன்னர்களும், மன்னர்களின் ஆட்சித்திறன் மீது புலவர்களும் உறுதியான நம்பிக்கைக் கொண்ட காலமாகும் சங்ககாலம். என்னைச் சிறியவன் எனக் கருதி போரிட வந்தவர்களைச் சிதறடிப்பேன். அப்படிச் செய்யேன் ஆயின், மாங்குடி மருதன் முதலாகப் போற்றும் பெரும் புலவர் பலரும் என்னைப் பாடாது என் நாட்டை விட்டு நீங்குக என வஞ்சினம் உரைக்கிறான். இக்கூற்று அவனின் படை ஆட்சி ஆளுமையையும் நாட்டின் மீது அவன் கொண்ட பற்றினையும் விளக்கி நிற்கிறது.

இவ்வாறே, புலவர்களும் தம் படைப்பாற்றல் மீது அதிக நம்பிக்கை வைத்திருந்தனர் என்பதற்கு ஔவையார் பாடல் சான்றாகிறது.

“கடுமான் தோன்றல் நெடுமான் அஞ்சி
தன்னறி யலன்கொல்? என்னறி யலன்கொல்?
அறிவும் புகழும் உடையோர் மாய்ந்ததென
வறுந்தலை உலகமும் அன்றே”[109]

பாடாண் திணையில் பரிசில் துறையில் பாடப்பட்ட பாடலாகும். ஔவையார் கிளந்து பேசுகிறார். அதாவது நெடுமான் அஞ்சி தன் தரமறியானோ? ஆன்றி எம் தரமும் அறியானோ? அறிவும் புகழும் உடையவர் இறந்தார் எனும் வறுமையுற்ற உலகம் அன்று இது எனக் கம்பீரத்துடன் பொங்கி எழுகிறார்.

## முடிவுகள்

சங்கப்புலவர்கள் பல்துறை அறிவுப் படைத்தவர்கள். இயற்கையும்,வாழ்வையும் ஒன்றான நிலையில் வாழ முற்பட்டவர்கள். புலப்பாட்டு நெறியில் யாவரும் உணரும் நெறியில் கருத்துக்களைப் பதிவு செய்வதில் புலவருக்கு நிகர் புலவர் என்ற நிலையே காணப்படுகிறது. புலப்பாட்டு நெறிகளில் பல்வேறு உத்தி முறைகளை நன்கு கையாண்டு உள்ளனர். உணர்ச்சி, உருவம் இவற்றிற்குத் தக்க நிலையினைத் தம் பாடல்களில் பரவலாக பதிவு செய்து உள்ளனர்.

கற்பனை குறித்த சொல்லாடல்கள் சங்க இலக்கியத்தில் காணப்பெறவில்லை. இருப்பினும், புனைவு நோக்கில் பல்வேறு கற்பனை நயங்களைப் புலவர்கள் கையாண்டு உள்ளனர். கற்பனை குறித்த தமிழ் ஆய்வு நீண்ட பரப்பை உடையதாகத் திகழ்கிறது. தமிழறிஞர்கள் மேனாட்டுத் திறனாய்வாளர்களின் கற்பனைக் கோட்பாட்டை ஏற்றுக் கொள்கிறார்கள்.

புலவர்கள் கருத்து நலனில் முக்கிய கவனம் செலுத்தி இருக்கிறார்கள். கருத்து வளமே இலக்கியம் நிலைபெறுவதற்கு அடிப்படை கூறுபாடு என்பதை நன்கு புறப்பாடல்கள் உணர்த்தி நிற்கின்றன. ஆய்வறிஞர்கள் புறப்பாடல்களை கருத்துக் களஞ்சியம் என உரைக்கிறார்கள். இயற்கைப் புனைவில் தனக்கென முத்திரைப் பதித்துள்ளார்கள். சங்கப் புறப்புலவர்கள் கற்பனையைப் புனைவு நோக்கில் பாடியிருப்பதை அறிய முடிகிறது. பெண்மையை உயர்வாகக் கருதிப் போற்றி உள்ளனர். ஆணும், பெண்ணும் பன்நோக்கு நிலையில் தகுதி பெற்றவர்களாக இருப்பதைப் புறப்பாடல்கள் நிலை நிறுத்துகின்றன. பெண்மையைத் தெய்வ நிலையில் ஒப்பக் கருதியிருப்பதும் பொருளாகும்.

சமுதாயமும் பொது நலனும் ஒன்றாகவே கருதப்பட்டு வந்தன. பிறருக்குத் துன்பம் எனில் எந்தவிதமான முன்னோக்கம் இல்லாமல் உதவி செய்து உள்ளனர். புறப்புலவர்கள் தொல்காப்பியப் புறத்திணைக் கோட்பாடுகளை நன்கு உள்வாங்கிப் பாடல்களைப் புனைந்து உள்ளனர்.

புறத்திணை அளவில் சிறிதெனினும், அகத்திணைக்கு நேர் ஒப்ப படைக்கப்பட்டிருப்பதைக் காணமுடிகிறது. அறிவியல் நிலையில், குறிப்பாக வானவியல் தனித்திறன் படைத்தவர்களாகவும் அறிவியல் அறிஞர்களாகவும் புறப் புலவர்கள் திகழ்கிறார்கள்.

புறநானூறு ஒரு வரலாற்று ஆவணம் என்பதைப் பல்லாற்றானும் புலவர்கள் உணர்த்தி நிற்பதைக் காணலாம். உளவியல் கூறுபாடுகளை மனதில் பதியும் வண்ணம் புறப்பாடல்களில் பாடி இருப்பது புலவர்களின் உளவியல் புலமைக்குச் சான்றாகும். சமூக மொழியியலை நன்கு உணர்த்தி இருக்கிறார்கள் புலவர்கள். மொழியும் சமூகமும் ஒன்றே என்பது அவர்களின் கோட்பாடாகும்.

திறனாய்வுக் கலையில் அழகியல் பல்வேறு திறனாய்வு வகைகளின் சாரமாக உள்ளது. அழகியல் உணர்வுகளே சங்கப் புறப்பாடல்களை நூற்றாண்டுகளாக செழுமிய நிலையில் வைத்துள்ளது. இறைத்தன்மையை நிலக்கோட்பாட்டு அடிப்படையில் பாடி இருப்பதை அறிய முடிகிறது. மனிதர்களின் நோக்கம் இறையை நுகர்வதே என்பது புறப்புலவர்களின் கருத்தாகும். புறப்பாடல்கள் ஆளுமைப் பண்புகளில் முழுமைப் பெற்றவர்களாக உள்ளனர். பல்வேறு ஆளுமைக் கூறுபாடுகளில் தம் பாக்களைப் புனைந்திருப்பதை நன்கு அறிய முடிகிறது.

## சான்றெண் விளக்கம்


1. மா.இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப.648.
2. இரா.குமரன், சங்க இலக்கிய அகப்பாடல்களில் கருத்துப் புலப்பாட்டு உத்திகள், ப.43.
3. மேலது, ப.11.
4. புறம், பா.248.
5. உ.வே.சாமிநாதையர், புறநானூறு மூலமும் பழைய உரையும், ப.422.
6. மேலது, ப.422.
7. இரா.குமரன், சங்க இலக்கிய அகப்பாடல்களில் கருத்துப் புலப்பாட்டு உத்திகள், ப.17.
8. நக்கீரனார், திருமுருகாற்றுப்படை,பா.அடி. 1-6.
9. ச.வே.சுப்பிரமணியன், தொல்காப்பியம் தெளிவுரை, ப.400.
10. பொ.வே.சோமசுந்தரனார், பத்துப்பாட்டு, திருமுருகாற்றுப்படை, ப.19.
11. இரா.குமரன், சங்க இலக்கிய அகப்பாடல்களில் கருத்துப் புலப்பாட்டு உத்திகள், ப.34.
12. க.ந.திருநாவுக்கரசு, திருக்குறளில் கற்பனைத் திறனும் நாடக நலனும், ப.12.
13. இரா.சாரங்கபாணி மற்றும் த.சாமிநாதன், சங்க இலக்கிய மேற்கோள்கள், மேற்கோள் வரிசை, பக்.3-5.
14. மு.வரதராசனார், இலக்கியத்திறன்,ப.58.
15. புறம், பா.அடி. 27, 10-14.
16. ச.வே.சுப்பிரமணியன், தொல்காப்பியம் தெளிவுரை, ப.498.
17. பொருநராற்றுப்படை,பா.அடி. 54-56.
18. புறம்,பா.அடி. 251, 6.
19. அகம்,பா.அடி. 98, 12.
20. பட்டினப்பாலை, 298.
21. இரா.சாரங்கபாணி மற்றும் த.சாமிநாதன், ப.4.
22. புறம். பா.அடி. 42, 10-12.
23. மேலது, பா.அடி. 101, 5-8.
24. மேலது, பா.அடி. 41, 11-15.
25. தா.ஏ.ஞானமூர்த்தி, இலக்கியத் திறனாய்வியல். ப.213.

26. புறம். பா.அடி. 35, 19-21.
27. மேலது, பா.அடி. 182,
28. க.த.திருநாவுக்கரசு, திருக்குறளில் கற்பனைத் திறனும் நாடக நலனும், பக்.12,13.
29. மேலது, ப.13.
30. நெடுநல்வாடை,பா.அடி. 147.
31. திருமுருகாற்றுப்படை,பா.அடி. 17.
32. பெரும்பாணாற்றுப்படை,பா.அடி. 374.
33. சிறுபாணாற்றுப்படை, 164-169.
34. ச.வே.சுப்பிரமணியன், சங்க காலப் பெண்பாற்புலவர்கள், ப.5.
35. மேலது, ப.12.
36. புறம்,பா.அடி. பா.86, 3-6.
37. மேலது, பா.அடி. 157, 11-13.
38. திரு.வி.கலியாணசுந்தரனார், பெண்ணின் பெருமை, ப.50.
39. தி.சு.நடராசன், திறனாய்வுக்கலை, ப.50.
40. ஆர்.அனுராதா, சங்க இலக்கியத்தில் அறக்கருத்துகள், ப.82.
41. புறம், பா..அடி. 266, 8-10.
42. குறள், 788.
43. பரிமேலழகர், திருக்குறள் உரை, ப.336.
44. புறம், பா.பா.அடி. 69, 5-6.
45. பொருநராற்றுப்படை,பா.அடி. 80-81.
46. ச.வே.சுப்பிரமணியன், தொல்காப்பியம் தெளிவுரை, ப.376.
47. மேலது, ப.380.
48. மேலது, ப.380.
49. மேலது, ப.384.
50. மேலது, ப.386.
51. மேலது, ப.390.
52. மேலது, ப.394.
53. க.வெள்ளைவாரணன், தொல்காப்பியம், புறத்திணையியல் உரைவளம், ப.8.
54. மேலது, 8-9.
55. உ.வே.சாமிநாதய்யர், புறநானூறு மூலமும் உரையும், ப.82.
56. ச.வே.சுப்பிரமணியன், தொல்காப்பியம் தெளிவுரை, ப.356.

57. புறம், பா.அடி 400, 1-12.
58. மேலது, பா.அடி 3,1.
59. மேலது, பா.அடி 118,2.
60. மேலது, பா.அடி 65, 6-8.
61. மேலது, பா.அடி 385,1.
62. மேலது, பா.அடி 398,1.
63. மேலது, பா.அடி 117, 1-2.
64. மேலது, பா.அடி 35, 6-7.
65. மேலது, பா.41, 4.
66. ஔவை.துரைசாமிப்பிள்ளை, பதிற்றுப்பத்து மூலமும் உரையும், ப.46.
67. மேலது, ப.45.
68. ஔவை.துரைசாமிப்பிள்ளை, பதிற்றுப்பத்து மூலமும் உரையும், ப.49.
69. புறம், பா.68, 11-12.
70. ஔவை.துரைசாமிப்பிள்ளை, புறநானூறு – பகுதி - 1, மூலமும் உரையும், ப.97.
71. உ.வே.சாமிநாதையர், புறநாறூறு மூலமும் உரையும், ப.97.
72. தி.கு.இரவிச்சந்திரன், சிக்மண்ட் பிராய்டு, ப.17.
73. மில்டன்.வி.சார்லஸ், மனிதனும் மனமும்,ப.1.
74. ச.வே.சுப்பிரமணியன், தொல்காப்பியம் தெளிவுரை, ப.354.
75. மேலது, ப.358.
76. மேலது, ப.372.
77. மேலது, ப.372.
78. புறம், பா.அடி 83,2.
79. மேலது, பா.அடி 84,2.
80. மேலது, பா.அடி 85,7.
81. தி.கு.இரவிச்சந்திரன், சிக்மண்ட் பிராய்டு, பக்.282, 283.
82. ச.அகத்தியலிங்கம், தமிழ்மொழி அமைப்பியல், ப.17.
83. மு.வரதராசன், மொழி வரலாறு, ப.319.
84. மேலது, ப.322.
85. க.பஞ்சாங்கம், இலக்கியமும் திறனாய்வுக் கோட்பாடுகளும், ப.64.
86. மேலது, ப.63.

87. மு.வை.அரவிந்தன், உரையாசிரியர்கள், ப.62.
88. க.பஞ்சாங்கம், இலக்கியமும் திறனாய்வுக் கோட்பாடுகளும், பக்.72,73.
89. பதிற், இரண்டாம் பத்து, மறம் வீங்கு பல்புகழ், 15-19.
90. புறம்,பா.அடி 96,அடி. 7.
91. மேலது, பா.382,அடி.8-9.
92. மேலது, பா.150, அடி. 1-3.
93. க.பஞ்சாங்கம், தமிழ் இலக்கியத் திறனாய்வு வரலாறு, ப.95.
94. மேலது, ப.96.
95. பொ.வே.சோமசுந்தரனார், பத்துப்பாட்டு, தொகுதி-2, ப.13.
96. மேலது, ப.13.
97. மலைபடுகடாம்,பா.அடி. 1-5.
98. ச.வே.சுப்பிரமணியன், தொல்காப்பியம் தெளிவுரை, ப.356.
99. மேலது, ப.376.
100. பொ.வே.சோமசுந்தரனார், பத்துப்பாட்டு, தொகுதி-2, ப.12.
101. முருகு, திருச்சீரலைவாய்,பா.அடி. 91-103.
102. அ.அல்போன்ஸ்,உருவாகும்நான,(personality of Development)பக்.10,11.
103. A DICTIONARY of Psycology(personality of Development) P.208.
104. ச.வே.சுப்பிரமணியன், தொல்காப்பியம் தெளிவுரை, ப.492.
105. மேலது, ப.404.
106. புறம், பா.அடி.126,11.
107. மேலது, பா.அடி.174, 9-10.
108. மேலது, பா.அடி.72, 13-16.
109. மேலது, பா.அடி.206, 6-9.

# இயல் - இரண்டு

## சங்கப் புலவர்தம் பண்பியலும் வாழ்வியலும்

சங்க கால சமுதாய வாழ்வு நெறி சிறப்புற்றிருந்தது. அதற்குக் காரணமாகச் சங்கப்புலவர் விளங்கினர். அப்புலவர்தம் தொண்டு உலகளாவியிருந்தது. அதனாலேயே அவர்கள் பெற்ற உலகியல் அனுபவங்களை உணர்த்தும் தன்மையராயினர். அப்போது மன்னர்களும் மக்களும் அவர்களைப் போற்றினர். ஆகையால், புலவர் பண்பிலும் வாழ்விலும் சிறந்து காணப்பட்டனர். அவர்களின் பண்பும் வாழ்வும் சமுதாயத்திற்கு நலம் பயக்கும் என்பதால் அவற்றை இந்த இயல் ஆராய்ந்துரைக்கின்றது.

இவ்வியலில் புலவர்தம் புலமை, ஒற்றுமை, குலப்பெருமை, அறிவுரைக்கூறல், உலக நிலையாமை, நட்பு, இயல்பு, விருந்தோம்பல், கொடை, வீடுபேறு ஆகிய தலைப்புக்களில் ஆராய்ந்துரைக்கப்பட்டுள்ளன.

### புலமை

சங்கப்புலவர் கல்விப் புலமையுடையோர் என்பதை அறிய அவர்களின் பெயர் அடைமொழி, தன்னடக்கம், அறமுடைமை, வானவியல் அறிவு, கற்றலின் மேன்மை, அழிவின்மை ஆகிய நிலைகளில் கல்வியறிவு நெறிகள் அவர்களிடத்தில் காணக்கிடக்கின்றன.

### பெயரடை

சங்கப் புலவர்கள் இருபாலரும் கல்விப்புலமை மிக்க சான்றோர்களாக விளங்கியுள்ளனர். அதை அவர்களின் பெயர்கள் அடை நெடுங்கல்வியார் மதுரைக்கணக்காயனார், மதுரை வேளாசான், மதுரைத் தமிழ்க் கூத்தனார் முதலானவர்கள் விளங்குகின்றனர். அவர்களின் பெயர்களில் அடைநெடுங்கல்வி, கணக்காயனார், ஆசான், தமிழ்க்கூத்தன் ஆகிய சொற்றொடர்கள் அடைமொழிகளாக உள்ளமையால் அவர்கள் கல்விப்புலமையர் என்பது தெளிவடைகின்றது.

## தன்னடக்கம்

நப்பச்சலையார் என்னும் புலவர், தம் கல்விப் புலமையை வெளிப்படுத்துகின்றபோது,

> ‘‘வல்லேம் அல்லேமட் ஆயினும், வல்லே
> நின் வயின் கிளக்குவம் ஆயின்.....’’[1]

என்று குறிப்பிட்டுள்ளார். அதாவது, கபிலரைப் போல் புலமையில்லை என்னும் குறிப்பைச் சுட்டித் தம் புலமையின் அடக்கத்தைக் கூறி உள்ளார். அதனால், நப்பசலையாரின் கல்வி குறித்த தன்னடக்கம் வெளிப்படுகின்றது.

## அறமுடைமை

புலவர் அறிவாற்றல் மிக்கவர் என்பதற்குச் சான்றாகக் கபிலர் உள்ளார். அவர் மன்னன் மலையமான் திருமுடிக் காரியிடம் அறமுடைமைச் செயலைச் செய்தல் வேண்டும் என்று குறிப்பிடுகின்றார். அப்போது,

> ‘‘ஒருதிசை ஒருவனை, உள்ளி, கால்திசைப்
> பலரும் வருவர்; பரிசில் மாக்கள்;
> வரிசை அறிதலோ அரிதே; பெரிதும்
> ஈதல் எளிதே; யாவண் தோன்றல்!
> அது நன்கு அறிந்தனை ஆயின்;
> பொது நோக்கு ஒழுகுமதி, புலவர் மாட்டே!’’[2]

என்று குறிப்பிட்டுள்ளார். அதில் ‘வள்ளல் யாரென்று அறிந்தே புலவர் பலரும் வருவர்’, என ஆற்றுப்படுத்தப்படுதலும் உண்டு. அவர்களோடு அறிவுடை மக்களும், அறிவில்லாத ஏனையோரும் வருவர். அவர்களின் தகுதிகளை அறிதல் மிகவும் அரிது, புலமைமிக்கவரைப் புலமை அறிதல் மிக்கவர்க்கே அறிய இயலும், என்றாலும் வரிசை அறிவது அரிதாகும்.

அதனால் புலமை சோதித்துப் பொருள் தருதலை ஒழித்து, புலவரிடத்து வரிசை கருதாது பரிசு வழங்கல் வேண்டும் என்னும் அறத்தை எடுத்துரைக்கின்றார். ஆதலால் கபிலரின் நுண்ணறிவுத் திறம் பாராட்டத்தக்கதாகும்.

## வானவியல் அறிவு

புலவர் முதுக்கண்ணன் சாத்தனார் என்பவர் புலவர்களின் அறிவுத்திறத்தைக் குறிப்பிடுகின்றார். அப்போது,

> "செஞ்ஞாயிற்றுச் செலவும்
> எஞ்ஞாயிற்றுப் பதிப்பும்
> பதிப்புச் சூழ்ந்த மண்டிலமும்
> வளி திரிதரு திசையும்
> வறிது நிலைஇய காயமும், என்று இவை
> சென்று அளந்து அறிந்தோர்….."[3]

என்கிறார். அதாவது ஞாயிற்றின் பாதை, அதன் இயக்கம், அது செல்லும் இடப்பரப்பு ஆகியவற்றையும், காற்றுப் பரவி நிற்கும் திசைகளையும், ஆகாயத்தின் தன்மையைக் கருத்து அளவால் நுட்பமுடன் அறிந்து கூறுவாரும் உளர் என்பதைக் கூறுகின்றார். ஆகையால், புலவர்கள் வானவியல் இயல்புகளை உணர்த்துகின்ற அளவிற்கு நுண்ணறிவு ஆற்றல் கொண்டு விளக்குகின்றனர் எனத் தெளிவாகின்றது.

## கல்வியின் மேன்மை

மாவேந்தனாகவும் பாவேந்தனாகவும் விளங்கிய ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் என்பவர் கல்வியின் மேன்மையைத் தம் அறிவுக் கூர்மையால் தெளிவுபடுத்துகின்றபோது,

> "உற்றுழி உதவியும், உறுபொருள் கொடுத்தும்
> பிற்றைநிலை முனியாது, கற்றல் நன்றே"[4]

என்று கல்வி கற்றலின் சிறப்பைக் குறிப்பிடுகின்றார்.

ஆசிரியரிடம் கல்வி கற்கின் நேரங்களில் கற்பிக்கின்ற ஆசிரியர் கூறும் துன்பங்களைத் தக்கபடிக் களைந்து அவருக்கு உதவியும் ஏற்ற மிகுந்த பொருள்களை அறிந்தும், வழிபாட்டு நிலை வெறுக்காதும் பின்பற்றி ஒழுகிக் கற்றல் நன்றாகும் என்பதைத் தெளிவுபடுத்தியுள்ளார்.

அதோடல்லாமல் கல்விக் கற்க விரும்புபவன் இல்லாத ஒருவன், இருப்பவனிடம் ஏக்கம் உற்று நிற்பதைப் போன்று விளங்கிக் கற்க வேண்டுவதை உடையார் முன் இல்லார் போல் ஏக்கற்றும் கற்றார் என்பர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

அதனைத் தொடர்ந்து, அத்தகையக் கல்வியைக் கற்றுச் சிறந்து விளங்கும் ஒருவனைச் சிறப்பிக்கின்றபோது,

‘‘ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக என்னாது அவருள்
அறிவுடையோர் ஆறு அரசம் செல்லும்’’[5]

என்கிறார். அப்போது ஒரு குடும்பத்தில் பலருள்ளும் முதலில் ‘பிறந்த மூத்தோன்’ என்று அழைக்காது, கல்வி கற்றுச் சிறந்தவனையே மூத்தோன் என்று அக்குடும்பத்திலுள்ளோர் கல்வி அறிவில் சிறப்புடையவனை அரசும் விரும்பும் என்பதனையும், கீழ்ப்பிரிவினராய் இருக்கும் ஒருவர், கல்வி கற்றுச் சிறந்து இருப்பின் அவர் மேல் பிரிவினராகக் கருதப்படுவர் என்பதை,

‘‘வேற்றுமை தெரிந்த நூற்பாலுள்ளும்
கீழ்ப்பால் ஒருவன் கற்பின்
மேற்பால் ஒருவனும் அவன்கண் படுமே’’[6]

என்று குறிப்பிட்டுள்ளமையும் கருதத்தக்கது.

## அழிவின்மை

கல்வி அறிவால் புகழ்கொண்ட யாவரும் உலகில் அழிந்தது இல்லை. அதை,

"அறிவும் புகழும் உடையோர் மாய்ந்தன்ன"[7]

என்றும் குறிப்பிடுவர் அன்றி, அத்தகையவர் பிறர் வாழவும் வழி செய்வர் என்பதை,

"உளரென்னும் யாத்திரைய ரல்லார் பயவாக்

களரனையார் கல்லாத வர்"[8]

என்றும் கூறுவர்.

ஆகவே, சங்கப் புலவர்கள் கல்வி அறிவும், படைப்பாற்றல் திறனும் பெற்றுப் புலமையுடையோராய்த் திகழ்ந்தனர். அவர்களின் செய்யுள், இன்றைய காலத்தவராலும் எளிதில் புரிந்து கொள்ளத்தக்கதாய் விளங்குகின்றது. செய்யுளில் ஓரங்க நாடகத் தன்மை விளங்கிய படமாகத் தரும் ஆற்றல் தென்படும். அத்தகையப் புலமையையுடையப் புலவர் சமூக அடுக்குகளில் எல்லாப் பிரிவுகளிலிருந்தும் தோன்றியிருந்தனர் எனக் கொள்ளத்தக்கது.

## ஒற்றுமை

சங்க காலத்தில் மக்களிடையே ஒற்றுமை நிலவியது. அந்த ஒற்றுமை மேன்மையடையப் புலவர்கள் தங்கள் கருத்துக்களை வழங்கி உள்ளனர். அப்போது நாட்டுப்பற்று, தீமை செய்யாமை, நரையின்மை, உலகம் வாழ்தல் ஆகிய சிந்தனைகளைக் கூறியுள்ளனர். அப்போது, கணியன் பூங்குன்றனார்,'யாதும் ஊரே; யாவரும் கேளீர்!' என்று கூறி ஒற்றுமை உணர்வு வளர வழிவகுத்தார். அதனால், பண்டைய மக்களிடம் ஒற்றுமை காணப்பட்டது எனக் கொள்ளத்தகும்.

## நாட்டுப்பற்று

மக்களாய் பிறந்த ஒவ்வொருவருக்கும் தனக்கெனச் சில கடமைகள் உண்டு. அதனைப் பொன்முடியார் பாடும்போது,

"ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே
சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே
...களிறு எறிந்து பெயர்த்தல் காளைக்குக் கடனே"[9]

என்பார்.

குழந்தையை ஈனுதல் தாயின் கடமை என்றும், சான்றோன் ஆக்குதல் தந்தையின் கடமை என்றும், மக்களைக் காத்தல் அரசனின் கடமை என்றும், கொல்லனுக்கு ஆயுதத்தைக் கூர்மையாகத் தருதல் கடமையாகும். ஆயினும், இளைஞர்களின் கடமையாகக் கூறும்போது பகைவரின் நாட்டையழித்துத் தன் நாடு காத்தலே முதலாகிய கடன் என்று நாட்டுப்பற்றோடு பாடியுள்ளமை அறியத்தக்கது.

## தீமை செய்யாமை

உலகத்தில் நன்மை செய்பவர்; தீமை செய்பவர் என இரு நிலையுண்டு. இதில் இரண்டாமவரே நாட்டில் மிகுதி. உலகம் உய்வதற்கும், நலம் பயப்பதற்கும் பிறருக்கு நாம் தீமை செய்யாது இருத்தலே நயம் பயக்கும் என்பார் நரிவெரூஉத்தலையார். அது,

"நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும்
அல்லது செய்தல் ஓம்புமின்! அதுதான்
எல்லாரும் உவப்பது; அன்றியும்
நல் ஆற்றுப்படூஉம் நெறியுமார் அதுவே"[10]

என்று பாடியுள்ளார். ஆகவே, ஒவ்வொரு மனிதனும் நல்லறம் புரியாவிடினும் தீயவற்றையாவது செய்யாது ஒழுகுவது; சமூகத்திற்கு நல்வழிப்படுத்தும் நல்லறமாகும் எனக் கூறியுள்ளமை எனத் தெளிவடைகின்றது.

## நரையின்மை

மனித வாழ்க்கையானது வீட்டையும் நாட்டையும் சார்ந்தது. வீட்டிலும், நாட்டிலும் உள்ளவர்கள் நல்லவர்களாக இருத்தல் வேண்டும். அவ்வாறு இருத்தலே நாடும் வீடும் புகழ்பெறும் என்பார். இதனை எளிய கூற்று கொண்டு விளக்குவார் பிசிராந்தையார். அதனை,

"யாண்டு பலவாகி நரைஇல ஆகுதல்
யாங்கு ஆகியார்? ஏன வினவுதின் ஆயின்
மாண்ட என் மனைவியொடு, மக்களும் நிரம்பினர்
யான்கண்ட னையர்என் இளையரும், வேந்தனும்
அல்லவை செய்யான்; காக்கும் அதன் தலை
ஆன்று அவிந்து அடங்கிய கொள்கைச்
சான்றோர் பலர்; யான் வாழும் ஊரே"[11]

என்பார்.

மூப்பு கண்டும் நரையில்லாமல் உள்ளீரே என்று கேட்குமிடத்து அதற்கு அவர் என் மனைவியும் மக்கள் இருவரும் பண்புடையவர்கள், ஒழுக்கநெறி பேணும் அறிவாற்றல் உடையவர்கள். நான் எண்ணிய வண்ணம் பணிகளைச் செய்து முடிக்கும் திறம் கொண்டவர்கள். என் நாட்டு மன்னன் தீமையே அறியாதவன். அதனால், என் நாடு செழிப்புற்று உள்ளது. வீடும், நாடும் வளம்பெற்ற காரணத்தினால் எனக்கு மனத்தில் எக்கவலையுமில்லை. ஆதலால், எனக்கு மூப்பு இருப்பினும் நரையில்லை என்று பிசிராந்தையார் கூறியுள்ளமைக் கருதத்தக்கது.

## உலகம் வாழ்தல்

பழங்கால மக்கள் அறிவுடையோரை மதித்தனர். புலம் என்றால் அறிவு; புலவர் என்றால் அறிவுடையோர் என்று பொருள் கொள்வர். அக்காலப் புலவர்கள் பேரறிவுடையவர்கள். அதனால்தான் புறநானூற்றுக் கொளுவில் அவனை அவர் பாடியது எனக் குறிப்பிடுவர். அதாவது அரசனை ஒருமையிலும் புலவனைப் பன்மையிலும் குறிப்பிடுவர். மக்கள் போற்றுதல் நிலையிலேயே புலவர் தம் வாழ்க்கையை நடத்தினர்.

இதனை இளம்பெரும்வழுதி கூறும் போது,

"உண்டால் அம்ம, இவ்வுலகம் - இந்திரன்
அமிழ்தம் இயைவது ஆயினும் இனிது எனத்
தமியர் உண்டலும் இலரே; முனிவு இலர்;
துஞ்சலும் இலர்; பிறர் அஞ்சுவது அஞ்சி
புகழ் எனில் உயிரும் கொடுக்குவர்; பழிஎனில்
உலகுடன் பெறினும் கொள்ளலர்; அயர்விலர்
தமக்கு என முயலா நோன் தான்
பிறர்க்கு என முயலுநர் உண்மை யானே!"[12]

என்பார். தமக்கென வாழாது பிறருக்கென வாழும் தன்மையுடையோரால் இவ்வுலகம் வாழ்கிறது. அக்காலப் புலவர்கள் வறுமையிலும் தன்நிலை குன்றாது வாழ்ந்தனர். தான் பெற்ற பொருளைப் பிறருக்கு அளித்து அவர் மகிழ்ச்சி கண்டு மகிழ்ந்தனர். பிறர் வாழ தானும் வாழ்ந்தனர். மேலும் பெருமிதம் உடையவர்களாக வாழ்ந்தனர் என விளங்குகின்றது. இதனைப் பரிசில்விடைத் துறைக்கொண்டு பெருஞ்சித்திரனார் விளக்குவார். அதாவது,

"இரவலர்க்கும் புரவலர் நீயும் அல்லை;
புரவலர் இரவலர்க்கு இல்லையும் அல்லர்;
இரவலர் உண்மையும் காண்; இனி இரவலர்க்கு
ஈயோர் உண்மையும் காண்; இனிநின் ஊர்க்
கடிமரம் வருந்தத் தந்துயாம் பிணித்த
நெடுநல் யானை எம் பரிசில்
கடுமான் தோன்றல்! செல்வல் யானே!"[13]

என்பார். பரிசில் பெற வந்த புலவன், அம்மன்னனுக்கே பரிசில் தந்ததாகக் கூறப்படுகிறது. இது புலவர்களின் தன்மான உணர்வினை வெளிப்படுத்துவதாகிறது. ஆகவே, மக்கள் தீமையின்றி முதுமையிலும் நரைதிரையின்றி உலகம் வாழ நாட்டுப்பற்றுடன் விளங்குகின்றனர் என அறியத்தக்கது.

## குடிச்சிறப்பு ஓம்புதல்

நல்குடி மக்கள் தன்குடிச் சிறப்புகளை எந்நிலையிலும் காத்து நிற்பர். குடியின் சிறப்பாலே குலமானது போற்றுதலுக்கு ஏற்புடையதாகிறது. இதனை, புலவர் ஒருசிறைப் பெரியனார் என்பவர் நாஞ்சில் வள்ளுவனை வாழ்த்தும் போது,

"செவ்விரைப் படப்பை நாஞ்சில் பொருந
சிறு வெள் அருவிப் பெருங்கல் நாடனை!
நீ வாழியர்! நின் தந்தை
தாய் வாழியர் நிற்பயந் திசினோரே!"[14]

என்பார். செங்கோல் தவறாது அரசாளும் தன்மையைக் கொண்ட அரசே! உன்னை ஈன்ற பெற்றோர் பெருதவஞ் செய்தவராவர். உனது 'குடி' மிகவும் சிறப்புடையது. அக்காரணத்தாலே உனது புகழ் மேலோங்கி நிற்கிறது என்பார். மேலும் மருதனிளநாகனார் இவனது மரபினைப் போற்றுங்கால்,

"ஓடாப் பூட்கை உரவோன் மருக"[15]

என்பார். போரில் புறங்கொடாத நிலையினையுடைய குடியில் பிறந்தவன் என்றும், குறிக்கோள் உடைய வாழ்க்கையைப் பேணும் குலமரபினன். ஆதலால், உனது குடிச்சிறப்பு போற்றுதற்குரியது என்பார். அதேபோல் ஔவையாரும் நாஞ்சில் வள்ளுவனைப் பாராட்டும் போது,

"தேற்ற ஈகையும் உனது கொல்?
போற்றார் அம்ம பெரியோர்தம் கடனே"[16]

என்று கொடைச் சிறப்பினையுடைய மன்னனே! உனது பெரியோரைப் போன்றே அளவிற்கதிகமாய் ஈகைக் குணம் கொண்டு திகழ்கிறாய் நீ உனது குலப்பெருமையையும் குடிச்சிறப்பையும் பேணிக் காக்கும் தன்மையுடையவன் என்று பாராட்டுகின்றார்.

## குலப்பெருமை

சங்க காலத்தில் மனித குலப்பெருமை மன்னர், புலவர், மக்கள் ஆகிய நிலைகளில் காணப்பட்டது. அதில் மன்னன் குலப்பெருமையாகக் குடிச்சிறப்பு ஓம்புதல், தன்னலமின்மை,ஈகைப்புகழ், குறிப்பறிந்து கொடுத்தல் ஆகியவையும், புலவர் குலப்பெருமையாக, மானமுடைமை, பொய்யாமொழியர் ஆகியவையும், மக்கள் குலப்பெருமையாக, மன்னரைக் காணலே பரிசு என்பதும் ஆக வேட்டைப்பொருளை வழங்கல், மனம் நிறையும் பரிசில் என்று அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

மன்னனின் கொடைத் தன்மையைக் கூறும் புலவர்கள் அவனது குலப்பெருமையால் அக்குணம் வந்தது என்றும்; பெருமை மங்காது காத்துவரும் குடிச்சிறப்பினைப் பேணிக் காப்பவன் என்றும் திகழ்ந்தான் என்பர். அத்தகைய மன்னனது புகழ் பாடுவதோடு அல்லாமல் குலச்சிறப்புகளைப் பேணும் தன்மை கொண்டு பாடல்கள் பாடும் மரபைத் தன்னகத்தே புலவர்கள் கொண்டு இருந்தனர் எனக் கொள்ளத்தகும். நப்பசலையார் என்னும் புலவர், மலையமான் திருமுடிக்காரி என்ற மன்னனை வாழ்த்தும் போது,

"தெறல் அரு மரபின்நின் கிளையொடும் பொலிய"[17]

என்று வாழ்த்தியுள்ளார். இதில் அம்மன்னனின் குடிச்சிறப்பு தென்படுகிறது. மேலும்,

"ஒன்னார் யானை ஓடைப்பொன் கொண்டு
......... வல்லேம் அல்லேம் ஆயினும்
......... பறை இசை அருகு, முள்ளூர்ப் பொருக"[18]

என்று குறிப்பிட்டு வாழ்த்துகிறார். அதில் மன்னனின் புகழ் மட்டுமின்றி உறவினர் சுற்றமும் வீரமும், போரும்,ஈகையும் சிறப்புடன் பேசப்பட்டது.

ஆய் அண்டிரன் எனும் மன்னனது குடிச்சிறப்பினைப் புலவர் முடமோசியார் போற்றும் போது,

"வடதிசை யதுவே வான்தோய் இமயம்
தென்திசை ஆ அய் குடி இன்றாயின்
பிறழ்வது மன்னோ, இம்மலர்தலை உலகே"[19]

என்று அவனது குலப்பெருமை அறுதியிட்டுச் சுட்டுகிறார். வடதிசை தேவர் உலகத்தோடு ஒத்தலால், இமயத்தை அவர்கள் தாங்க தேவையில்லை. ஆனால், தென்திசைக்கண் உள்ள ஆய்குடி தாங்கவில்லையாயின் இவ்வுலகு பிறழும், இதில் இமயத்தைக் காட்டிலும் ஆய் அண்டிரன்குடி பெருமையுடையது என்று குறிப்பிட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

**நல்லறம் கூறல்**

மன்னன் என்பான் அரசு சிறந்து விளங்கவும், நிலையான புகழை பெறவும் அவன் நல்ல ஒழுக்க நெறிகளைப் பேண வேண்டும் என்பர். மக்களின் நல்வாழ்வே மன்னனின் நல்லறம் என்பர். மக்களின் நிலையையும் ஈகையையும், போரைப் பற்றியுமே தம் பாடல்களாகப் புலவர் பாடியுள்ளனர் என்பதை அறிய முடிகிறது. ஈகையுடையோனே அக்கால பாடல்களில் தலைவனாகத் திகழ்ந்தான். ஈதலின் தன்மையையும் நெறிப்படுத்தி உணர்த்தினர்.

"ஈதல் இசைப்பட வாழ்தல் அதுவல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு"[20]

என்ற கொள்கையினை உடையவராகத் திகழ்ந்தனர்.

ஈதலின் மேன்மையைப் பாடும் புலவர்கள்,'ஈயென இரத்தல் எனக்கு அரிது, நின்னையும் நின் கொண்கானத்தைப் பாடுதல் எனக்கு' என்றும் உரைப்பர். இதில் புலவரின் தன்மானம் வெளிப்படுகின்றது. மன்னனைப் பாடாது பரிசில் பெறுதலை இழிவாக எண்ணினர்.

எந்நிலையிலும் மன்னன் முகமலர்ந்து தம் கையால் தராத பொருளை ஏற்க மறுத்தனர். வறுமையுள்ள போதும் முகம்மாறி தரும் பரிசிலை “பரிசில் பெரிதாயினும் அதனை விரும்பேன் என்றும்; அளவில் சிறிதாயினும் இன்முகத்தோடு அளிக்கும் பரிசிலே பெரிது என்ற கொள்கையுடையவராகத் திகழ்ந்தனர்.

இதில் அக்காலப் புலவர்களின் பெருமிதத்தை அறிய முடிகிறது. தன்மானத்திற்கு இழுக்கு ஏற்படின் உயிரையும் துறந்தனர்.

‘உணர்ச்சி இல்லோர் உடைமை உள்ளேம்’ என்று மதுரைக் குமரனார் தம் வரிகளில் கூறுவார். செல்வத்தின் பயன் ஈதலே ஆகும் என்று மன்னனுக்கு எடுத்துரைத்தனர். அக்காலப் புலவர்கள், மன்னனின் ஈகையைப் பாடியதோடு அல்லாமல் பரிசில் பெறுபவர்களின் உணர்வுகளையும் சுட்டிக்காட்டினர்.

**ஈகைப்புகழ்**

பேகன் என்னும் சிற்றரசனின் ஈகைத்திறத்தை, ‘அறுகுறுத்த உகுத்தும் அகல்வயல் பொழிந்தும்’ என்பார். ஈதல் என்பது பலன் கருதாது செய்வதாகும். அத்தகைய பண்பு அக்கால மன்னனிடம் காணப்பட்டதால் புலவர் அரசர் உறவு நிலையானது உறுதியானதாகவும், புரிதல் திறனுடனும் காணப்பட்டது.

“எத்துணை ஆயினும் ஈதல் நன்று
மறுமை நோக்கின்றோ அன்றே
பிறர் வறுமை நோக்கின்று; அவன் கைவன்மையை”[21]

என்ற வரிகளில் மனிதனின் ஈகைப்பண்பானது மறுமையிலும் பலன் அளிக்க வல்லது. இக்குணமுடைய மன்னனிடம் பெறும் பரிசில் மிகச் சிறப்புடையது என்று மன்னனைப் புகழ்ந்து பாடும் பண்பினைக் காணலாம்.

**தன்னலமின்மை**

பெருஞ்சித்தினார் புலமைமிக்க பெரும் புலவராவார். அவரது வறுமையினை அறிந்த குமண வள்ளல் நிறைய பொன் பொருளை வாரி வழங்கிய நிலையில், அவர் தன்போன்ற பிற புலவர்களுக்கும், பரிசிலருக்கும் அப்பொருளை அளித்து மகிழ்ந்ததாகக் கூறப்படுகிறது. மேலும் அவர் தன்னலம் கருதாத தன்மையைக் காணமுடிகிறது என்பர்.

இதே போன்று பட்டினப்பாலைப் பாடிய உருத்திரங்கண்ணனார் தனக்கு கரிகாலன் அளித்த பதினாறுகால் மண்டபத்தினைப் புலவர்களின் கூடாரமாக அமைத்தான்.

இதில் மன்னனின் ஈகைத் தன்மையை விட புலவரின் பிறர் நலம் பேணும் தன்மையைத் தன் பண்பாகக் கொண்டு வாழ்ந்தனர். பிறர் நலன் கருதி வாழும் மன்னனால் மட்டுமே நல்லறம் பேண முடியும் என்பதைத் தானும் வாழ்ந்து காட்டினர்.

**மன்னனைக் காணலே ஈகை**

இம்மன்னனைக் காணலே ஈகை ஈட்டியதாகும் என்பர் பாணர். பரிசில் பெறச் சென்ற பாணன் மன்னனது பரிசு தனது வறுமையை முழுமையாக நீக்கும் என்ற மனநிலையோடு அவனைக் காணச் செல்வான். அதை,

> “பாணர், பாடுநர், பரிசிலர், ஆங்கு அவர்
>
> தமது எனத் தொகுக்குவர் ஆயின் எமது எனப்
>
> பற்றல் தேற்றாப் பயங்கெழு தாயமொடு”[22]

எனும் பாடல் அடிகளால் அறிய முடிகிறது.

மன்னனின் ஈகையானது ‘வேள் ஆயைக் காணல் ஒன்றே போதும்’ என்ற எண்ணமுடைய பாணனைக் காணமுடிகின்றது. ஆகவே, மன்னனைக் கண்டால் பரிசில் பெறாது வர வேண்டிய நிலை இருக்காது என்னும் பாணர்களின் நம்பிக்கைத் தெளிவாகின்றது.

## குறிப்பறிந்து கொடுத்தல்

நாஞ்சில் வள்ளுவனை ஔவைக் கூறும்போது, 'வேந்தனே உள்ளம் மகிழ வெல்புகழ் அறந்தோர்க்கு,ஈந்து பரிசில் இன்புற விருந்தன்று' என்று புறப்பொருள் வெண்பாமாலையில் கூறியிருத்தலைக் காணலாம். பரிசில் பெற வந்த புலவன் பரிசில் பெற்றாலும்; பெறாமல் போனாலும் மன்னனின் ஈகையின் தன்மையானது அக மகிழ்வோடு இருத்தல் வேண்டும் என்பார்.

> ''அரிசி வேண்டினே மாக.....குன்றத்து அன்னத்து
> ஓர் பெருங்களிறு நல்கியோனே''[23]

எனப் பாடுவார்.

புலவனின் நிலைகண்டு பரிசில் வழங்கும் வள்ளல் இவண் என்று மன்னனது குறிப்பறிந்து ஈகை செய்தல் திறனைப் பரிசில் விடைத் துறையில் பாடியிருப்பார். பெற்ற பரிசினால் வியந்து பாடுதல் நிலையில் உள்ளது.

## வேட்டையாடிய பொருளை வழங்கல்

வன்பரணர் தன் சுற்றத்தாருடன் கொல்லிமலை வழியாக சென்று கொண்டிருந்த போது, வேட்டையாடி வந்த வல்வில் ஓரியைக் கண்டு பரிசில் பெற்ற நிலையினை,

> ''தன்மனை பிறந்த தாஇல் நன்பொன்
> பல்மணிக் குவையொடும் விரைஇ கொணம் என
> சுரத்திடை நல்கியோனே – விடர்ச் சிமை
> ஓங்கு இருங் கொல்லி பொருநன்
> ஒப்பா ஈகை விளர் வெய்யோனே''[24]

எனக் காட்டிடத்தே இருந்த போதும் தான் வேட்டையாடிய மான் தசையையும், மதுவையும், பொன்னையும், மணியையும் தன்பால் பேரன்பு கொண்டு தனக்குப் பரிசாக வழங்கினான் என அவனது ஈகைத் திறத்தைப் புகழ்ந்து பாடுவார்.

### மனம் நிறையும் பரிசு

மோசிகீரனார் ஈகைத்திறனை உவமையோடு மன்னனுக்கு எடுத்துரைப்பதில் வல்லவர்.

''ஈயென இரத்தலோ அரிது; நீ அது
நல்கினும் நல்காய் ஆயினும் வெல்போர்
..............................
பாடல் எனக்கு எளிதே கொண்பெருங் கானம்''[25]

என்பார்.

''செல்வம் மிக்கவர் அதிகமானோர் தன்னருகில் வசித்தாலும் அவரிடம் நற்பண்பு இல்லையாயின் அவரது செல்வம் ஈகைக்கு ஆகாது என்றும், அவரது செல்வத்தால் பலன் ஒன்றுமில்லை என்பார். அவர்கள் 'பயன் தராத உப்புநீரைப் போன்றவர்கள்''[26] என்பார். நற்பண்பினையுடைய வள்ளல் எங்கு இருந்தாலும் அவரிடம் சென்று பரிசில் பெறுதலே மகிழ்ச்சி என்பார். இதனைப் பயன்தரும் சுனைநீரைப் போன்றது என்கிறார். ஈகைப் பண்புடைய வள்ளலுக்கு உவமையாகக் கூறுகிறார்.

இம்மன்னனிடத்துப் பெற்ற பரிசில் சிறிதாயினும் குறைவில்லாத நிறைவினையுடையது அப்பரிசில் என்பார். நீர் வேட்கையால் தவிப்போர்க்கு, வறுமையால் தவிக்கும் புலவன் ஒப்பாவான் என்று உவமைப் படுத்துகிறார்.

### பொய்யாமொழி உரைப்பவர்

முகமலர்ச்சியோடு பெறும் பரிசிலை மட்டுமே பெற்றனர். மேலும் எந்நிலையிலும் தன்மானத்திற்கு இழுக்கு வாராமலும்; மன்னனின் ஈகைத்திறனைப் புகழ்ந்தும் தன் உணர்வினைச் சுட்டிக் காட்டினர். ஈதல் சிறப்பு பாடியும், பொய்யா மொழி உரைக்கும் தன்மையையும் தன்னகத்தே கொண்டு விளங்கினர்.

இதனை டி.எம்.சோமசுந்தரம் என்ற பேராசிரியர் கூறும்போது, ''தமிழனின் தனிச்சிறப்பாகக் கருதப்படுவது தன்மானம் என்றும்; அக்கூற்றின்படியே அக்காலப் புலவர்கள் வாழ்ந்தனர்.

வறுமையில் வாடினாலும் தன்மானம் கொண்டவர்களாகத் தமிழகப் புலவர்கள் திகழ்ந்தனர்.

வாய்மையுடையவர்களாகவும், அரசனுக்கு அஞ்சாது அறிவுரை கூறுபவர்களாகவும் வாய்மையால் போரையும் தடுத்தவர்களாகவும் விளங்கினர்''[26] என்று புலவர்களின் பண்புகளில் ஒன்றாகக் கூறுகின்றார்.

அக்காலப் புலவர்கள் வறுமை நிலையிலும் ''பொய்யா நாவற்புலவர், வாழ்ந்த இயற்கை நெறிக்காலம்; செய்யா கூறிக் கிளத்தல் எய்யாதாகின்றது எம் சிறு செந்நாவே''[27] என்று சங்கப்புலவர்களின் வாக்கு உண்மைத்தன்மை உடையதாக இருந்தது என்று கவிஞர் புவியரசு கருத்து உரைப்பார்.

கல்வியில் சிறந்தவர்களாகவும் தன்மான நுழைவுமிக்க அறிவும் நிரம்பியவர்களாக இருந்த காரணத்தால் அரசனுக்கு நல்லறம் உரைத்தும், தவற்றினைக் கண்டு இடித்துரைத்தும் வாழ்ந்தனர். மன்னனின் அவையில் அமைச்சராகவும் திகழ்ந்தனர். தன் புலமைக்கு இழுக்கு நேரிடின் அவையையும் துறந்தனர். தன்மானமே புலவனிடமும் பாணனிடமும் மிதமிஞ்சி நின்றது. இதனை,''பரிசில் வாழ்க்கை மேற்கொண்டோரும், தன் தகுதிக்குக் குறைவாகப் பரிசில் பெறினும், முகம்மாறி அளிக்கும் பரிசிலைச் துச்சமென மறுத்தனர். அவர்களுக்குப் பாடமும் கற்பித்துச் சென்றனர். சென்றதோடு மட்டுமல்லாமல் தன் தவற்றினை உணர செய்தனர்''[28] என்பர். நாட்டின் வளத்தையும் அரசன் மக்கள் இருவரின் நலத்தைப் பேணும் அக்கறை உடையவர்களாகத் திகழ்ந்தனர்.

## வரிவசூல் செய்யும் முறை

மன்னனனுக்கு அறிவுரைகளாக வரிவசூல் செய்யும் முறையையும், இடித்துரைத்தல் நிலையையும் காணமுடிகின்றது. மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம் என்பதால் மன்னனுக்கு நன்மை தீமைகளை எடுத்துரைக்கும் நிலையில் புலவர்கள் இருந்துள்ளனர். புலவர்கள் கூறிய அறிவுரைகள் நாட்டிற்கும் தமக்கும் நன்மை பயக்குமென மன்னர்களும் செவிமடுத்துக் கேட்டனர்.

பாண்டிய அறிவுடைய நம்பியிடத்துச் சென்ற பிசிராந்தையார், நாட்டையாளும் மன்னன், மக்களிடமும் எங்ஙனம் நடந்து கொள்ள வேண்டும் என்பதனை,

''அறிவுடை வேந்தன் நெறியறிந்து கொளினே
கோடி யாத்த நாடு பெரிதும் நந்தும்,
…..பரிவுதப எடுக்கும் பிண்டம் நச்சின்
யானை புக்கபுலம் போல
தானும் உண்ணான்; உலகமும் கெடுமே''[29]

என்று வரி விதித்தல் நிலையினை மக்களில் ஒருவராக நின்று இயம்புகின்ற தன்மையைக் காணலாம். வயலிலே விளைந்த நெல்லினை உணவாக்கி யானைக்குத் தந்தால் பல நாள் உணவாகயிருக்கும் வயலில் யானையையே உண்ண விட்டால் ஒரே நாளில் அழிந்து போகும். அதைப்போல மன்னன் என்பவன் குடிமக்களுக்கு ஏற்றார்போல் வரி வாங்கும் முறையைப் பின்பற்றினால் மக்களும் நாடும் செழிப்பாகயிருப்பர். தகுதி காணாது விதிக்கும் வரியானது யானை சென்ற வயல்போல அழிந்து போகும். உனது புகழும் கெடும் எனத் துணிவோடு தனது கருத்தினை அறிவுறுத்தி உள்ளார் பிசிராந்தையார். இவர் நாட்டின் மீதும் அரசன் மீதும் கொண்ட சமூக அக்கறையைக் காணமுடிகிறது.

## உலக நிலையாமை கூறல்

மன்னர்களின் ஒழுக்கநெறியோடு உலகியல் தன்மையை இயல்பாகத் தம் பாடல்களில் சுட்டிக்காட்டுவர். சோழன் நலங்கிள்ளியைக் காணச் சென்ற உறையூர் முதுகண்ணன் சாத்தனார், அம்மன்னனை நோக்கி மன்னனே! புகழோடு வாழ்தல் பெரிதன்று என்றும் அப்புகழை அழியாத காத்தலே பெரிது என்றும் புகழின் சிறப்பை எடுத்துரைக்கின்றார். மேலும் இவ்வுலகம் நிலையில்லாதது என்பதனை,

''அறமும் பொருளும் இன்பமும் மூன்றும்
ஆற்றும் பெருமதின் செல்வம்
ஆற்றாமை நிற் போற்றாமையே''[30]

என்பார். அறத்தோடு ஈட்டிய பொருளால் பெறும் இன்பமே சிறந்த செல்வம். அந்நிலையே நீ பேணி வளர்க்கவில்லையாயின் நீ அழிந்துபடுவாய். நிலை இல்லாத இவ்வுலகத்தில் நிலையாமை உணர்த்துகிறார்.

தம் புலமைத்திறத்தால் நிலைபேறுடன் வாழ்தலே நன்று; என்று உயரிய சிந்தனையை அஞ்சாது எடுத்துரைத்துள்ளார் எனக் கொள்ளத்தக்கதாகும்.

## இடித்துரைத்தல் நிலை

அறம்போதிக்கும் அறநெறியாளர்களாகப் புலவர்கள் திகழ்ந்தனர். கபிலர் மன்னர்களுக்கு இடித்துரைக்கும் பாடல்களை அதிகமாகப் பாடியுள்ளார். குறிஞ்சித் திணையில் மிகுதியானப் பாடல்களைப் பாடிய காரணத்தால் குறிஞ்சிக்குக் கபிலர் என்ற அடைமொழியும் இவருக்கு உண்டு.

கடையெழு வள்ளல்களில் ஒருவரான பேகனின் நாட்டிற்குச் சென்றார் புலவர். பேகனது இல்லத்தில் புலவர் பாட, உள்ளிருந்து அழுத முகத்தோடு ஒரு பெண் தோன்றினாள். அப்பெண் யாரென வினவ, அவள் பேகனின் மனைவி என்றனர். அதனை அறிது மனம் கலங்கி நின்றார் புலவர். அத்தோடு நில்லாமல் பேகனிடம் சென்று அவனை வாழ்த்திப் பரிசில் பெறும் நிலையில் அவனை இங்ஙனம் இடித்துரைத்துள்ளார்.

''வாயில் தோன்றி வாழ்த்தி நின்று
நின்னினும் நின்மலையும் பாட இன்னாது;
இருந்த கண்ணீர் நிறுத்தல் செல்லாள்
முலையகம் நனைப்ப, விம்மி,
குழல் கிளைவது போல் அழுதனள் பெரிதே''[31]

என்பார். நின்னைப் புகழ்ந்து பாட உன் இல்லம் சென்றேன். இங்கு மனக்கவலையால் அழுதுகொண்டு, கண்ணீரை நிறுத்த இயலாத பெண் ஒருத்தியைக் கண்டேன். அப்பெண் யாரெனத் தெரியவில்லை.

எனக்கு நீ அருள் செய்வதை விட உன் இல்லம் சென்ற அவளின் இன்னலைக் களைவதே சிறந்தது எனக் கூறினார். 'எனக்கு முன்னால் அருள் செய்யப்பட வேண்டியவள் அவளே' என்று கூறுகின்றார்.

மேலும், இதனைத் தொடர்ந்து எனக்குப் பசியும் இல்லை; சுற்றத்தாரைக் காக்க வேண்டிய பாரமும் இல்லை; எனக்காக நீ செய்ய வேண்டியது ஒன்றுதான். அறத்தோடு நின்று வீட்டையும் நாட்டையும் காப்பாயாக என்று அறிவுரை கூறுவார். இதனை,

"அறம் செய்தீமோ; அருள் வெய்யோய்;
இ∴துயாம் இரந்த பரிசில் அ∴து இருளின்
இனமணி நெடுந்தேர் ஏறி
இன்னாரது உறைவி அரும்படர் களைமே"[32]

என்ற பாடலின் மூலம், நீ எனக்கு அருள் புரிவதைக் காட்டிலும் அப்பெண்ணிற்கு அருள்புரிவாய் என்று இடித்துரைப்பார். குடும்பத்தைப் பேணாது நின்ற மன்னனுக்குக் குடும்பம் பேணுதலும் அறமே என்று நயந்து கூறியுள்ளமைப் போற்றுதற்குரியதாகும்.

கபிலர் பேகனின் அகவாழ்விற்கு அறத்தினை நெறிமுறைப்படுத்தியமையைக் காணலாம். இதேபோன்று பரணர், அரிசில்கிழார் பெருங்குன்றூர்கிழார் ஆகியோரும் மன்னனுக்கு அறிவுரை கூறியுள்ளமையைப் புறநானூற்றில் 142ஆம் பாடல் முதல் 147ஆம் பாடல் வரை அறம் உரைத்த செய்திகள் காணக்கிடக்கின்றன.

**மன்னன் புலவர் நட்புறவு**

உலகியல் வாழ்க்கையில் நட்பு என்பது கிடைத்தற்கரியதாகும். இதனை,

"முகநக நட்பது நட்பன்று; நெஞ்சத்
தகநக நட்பது நட்பு"[33]

என்று நட்பின் ஆழத்தினை வள்ளுவர் எடுத்துரைப்பார். அக்கால மன்னர்கள் புலவர்களுடன் நெருங்கிய நட்பு பூண்டிருந்தனர்.

பரிசில் பெறுவதோடு நில்லாமல் மன்னனின் வளர்ச்சிக்கு உறுதுணையாக நின்றனர். நட்புடன் நில்லாது நண்பனுக்காக உயிரையும் துறக்க முற்பட்டனர். பாரிக்காகத் தன் உயிரை வடக்கிருந்து உயிர் துறக்க முற்பட்டபோது மன்னன் தடுத்து நிறுத்தினான்.

அதனை,

> "பெருந்தகு சிறப்பின் நட்பிற்கு ஒல்லாது
> ஒருங்கு வரல் விடாஅது ஒழிக"[34]

எனக் கூறினான் என்பர். அவ்வாறு நெருங்கிய நட்பு கொண்டவர்களாகப் புலவர்கள் திகழ்ந்தனர். சான்றாக, கபிலர்-பாரி; அதியமான்-ஔவையார்; கோப்பெருஞ்சோழன்-பிசிராந்தையார் போன்றோரின் நட்பு போற்றுதற்குரியது ஆகும்.

## நட்புநெறி புகழல்

பாரி மன்னன் வளமை குன்றிய நிலையிலும் அவனது நற்செயல்களைக் கண்டு பூரித்து நின்ற உண்மை நண்பனாகத் திகழ்ந்தவர் கபிலர். பாரியைப் பற்றி மூவேந்தர்களிடமும் கபிலர் கூறிய சொற்கள் இருக்கண் உடையுழி ஊற்றுக்கோலாய் இருந்த தன்மையை,

> "கடந்த அடுதானை மூவரும் கூடி
> உடனின்ற ஆயினும், பறம்பு கொளற்கு அரிதே
> முந்நூறு ஊர்ந்தே தன்பறம்பு நல்நாடு
> யாமும் பாரியும் உளமே;
> குன்றும் உண்டு; நீர் பாடினீர் செலினே"[35]

என்பர். மூவேந்தர் கூடி நின்று எதிர்த்தாலும் பறம்பு மலையினை வெற்றிகொள்ள இயலாது. பாரி தனது முந்நூறு ஊர்களையும் பாடி வந்த பரிசிலருக்குப் பரிசாக வழங்கிவிட்டான். தற்போது நீங்களும் பாடி வந்தால் பாரியும் நானும் வசிக்கும் குன்றினைப் பரிசாக வழங்குவான். இதைத் தவிர வேறு ஒன்றும் பாரியிடம் இல்லை என்பதை நயமாகக் கூறி நட்பின் ஆழத்தையும், அறத்தின் தன்மையையும் விளக்குகிறார். இருவரில் ஒருவராகத் திகழும் தன்மையை எடுத்துக்காட்டுகிறார்.

பாரி மன்னனைச் சூழ்ச்சியால் மூவேந்தரும் வீழ்த்திய நிலையில் அவரது மக்களைத் தம் மக்கள் போல் பேணிக்காத்து வந்தார் கபிலர். பாரி மகளிரை அந்தணரிடம் அடைக்கலமாகக் கொடுத்துவிட்டுத் தானும் உன்னுடன் உயிர் துறப்பேன் என்று முனையும்போது அவரைத் தடுத்து நிறுத்தினான் பாரி.

அதனைக் கூறும்போது,

"மலைகெழு நாட! மாவண் பாரி
கலந்த கேண்மைக்கு ஒவ்வாய் நீ! ஏற்
புலந்தனை யாகுவை புரந்த யாண்டே
பெருந்தகு சிறப்பின் நட்பிற்கு ஒல்லாது
ஒருங்கு வரல் விடா அது ஒழிக எனக்கூறி
இணைய ஆதலின் நினக்கு மற்றுயாண்;
மேயினேன் அண்மையானே; ஆயினும்
இம்மை போலக் காட்டி, உம்மை
இடையில் காட்சி நின்னொடு
உடன் உறைவு ஆக்குக உயர்ந்த பாலே"[36]

எனப் பாரியே நின்னுடன் நட்பு பூண்ட காலத்திலும், பழகிய நாட்களிலும் பிரிவு இல்லாத நிலையில் இருந்தோம். தற்போது நீ மாண்டபின்பு உன்னுடன் வர தடுத்தது ஏன் மன்னா? இங்குப் போன்று அங்கும் உன்னுடன் நட்பு பூணத் தகுதியில்லாதவன் என நினைத்து வெறுத்து விட்டாயா? அதனால் தான் என்னை உன்னுடன் வர மறுத்தாயா? ஏன நட்பின் ஆழத்தை உணர்த்துகிறார். நட்பிற்கு நன்றி காட்டியவராய் வாழ்ந்தவர் கபிலர் என்பது இவர்களது நட்புறவால் அறியலாம்.

### இறவாக்கனிப் பெறல்

இவர்களது நட்பு போற்றுதற்குரியது. ஆண் பெண் உறவுநிலையிலும் உன்னதமான நட்பு உண்டு. தனது வாழ்நாளை நீட்டிக்கும் அரியவகை நெல்லிக்கனியைப் பெற்ற அதியமான், தான் உண்ணாது; ஔவைக்குத் தந்து ‘‘தமிழ் வாழ நீ உண்பாய்’’ என்ற மனம் உவந்து அளித்தான் என்பர்.

‘‘வலம்படு வாய்வாள் ஏந்தி, ஒன்னார்
களம்படக் கடந்த கழல், தொடித் தடக்கை
ஆர்கலி, நறவின், அதியர் கோமான்
போர் அடு திருவின் பொலந் தார் அஞ்சி’’[37]

என அதியமானைப் பாராட்டுவார். மன்னனின் உயர்ந்த உள்ளமும், புலவரின் நட்பும் அவர்களது நட்பின் ஆழத்தினைக் காட்டுகிறது. தொண்டைமானிடம் அதியமானின் புகழை வஞ்சப் புகழ்ச்சியால் பாடிப் போரைத் தடுத்து நிறுத்தியவர் ஔவையார். நண்பனாக மட்டுமல்லாது மன்னனுக்கு நல்ல தூதனாகவும் திகழ்ந்துள்ளார். அவனின் மீதும் நாட்டின் மீதும் மிகுந்த அக்கறையுடையவராக இருந்துள்ளார் என்பது அவரது பாடல்கள்வழி அறிந்த செய்தியாகும்.

### உணர்வும் கருத்தும் ஒன்றிய நட்பு

இவர்கள் நல்ல நட்பிற்கு இலக்கணம் வகுத்தவர்கள் என்பார் பொத்தியார். மன்னன் இறக்கும் தருவாயில் தானும் வருகிறேன் என்று கூறிய புலவனை நோக்கி,

‘‘வருவன் என்ற கோனது பெருமையும்
அது பழுதின்றி வந்தவன் அறிவும்
வியந்தொறும் வியந்தொறும் வியப்பு இறந்தன்றே’’[38]

என்று மன்னனும்-புலவரும் நாடு கடந்து நட்பு பூண்ட நிலையினை உணர்வுப் பூர்வமாக விளக்குகிறார் பொத்தியார். மேலும், இவர்களது நட்பின் மேன்மையைப் போற்றுகின்றார். இதனை,

“நினைக்கும் காலை மருட்கை உடைத்தே
எனைப் பெருஞ்சிறப்பினொடு ஈங்கு இது துணிதல்
அதனினும் மருட்கை உடைத்தே; பிறன் நாட்டுத்
தோற்றம் சான்ற சான்றோன் போற்றி
இசைமரபு ஆக, நட்புக்கந்து ஆக”[39]

என தனது அரசினைத் துறந்து உயிர் துறக்கத் துணிந்தமை வியக்கத்தக்கது ஆகும். அதனினும் வியப்பு யாதெனின் பிற நாட்டினரையும், ஒருவன் காலை இறக்கும் வேந்தனை நாடிவரல் என்றார். வருவான் என்று சொன்னவன் சொன்னவாறு வந்தான். இந்த நிகழ்வினைக் கண்டு, இதற்கு யாரை வியப்பது? சொன்னவனையா? வந்தவனையா? என்று புகழாரம் சூட்டுவார் பொத்தியார்.

கையறுநிலைத் துறையில் சோழனின் இழப்பு இரங்கத்தக்கது ஆகும். சோழன் மீது நட்பு பூண்ட புலவன் புலம்புதல் நிலையினை,

“புகழ்சால் புதல்வன் பிறந்தபின் வா என
என் இவண் ஒழித்த அன்பிலான்”[40]

எனச் சோழனின் நடுகல் முன்னால் நின்று எனக்குக் குறித்த இடம் யாதெனக் கூறுவாயாக என்று புலம்புகிறார். இறப்பிற்குப் பின்பும் நட்பின் தன்மை குன்றாது இருத்தலை உணர முடிகிறது. இவர்கள் நல்ல நட்பிற்கு இலக்கணமாய் திகழ்ந்தவர்கள் என்பதில் ஐயமில்லை எனலாம்.

## நல்லியல்பு உரைத்தல்

சங்ககாலப் பாடல்களில் புலவர்கள் தனி மனித ஒழுக்கத்தினையே நல்லியல்பு சிந்தனையாகக் கருதுவர். அது சமூக மதிப்பிற்கு அடிகோளும் என்பர். சி.எம்.பௌரா, சேட்விக் ஆகியோர் கருத்துக்களை அடியொற்றித் “தமிழில் எழுந்த வீரயுகப் பாடல்கள் வீரயுக நிலையினை ஆராய்ந்த காலம் என்றும்; இது வீரநிலைக் காலமெனவும் நிறுவுகிறார்.”[41]

இவரது கருத்தின்படி சங்ககால மக்கள் வீரத்திற்கும் ஒழுக்கத்திற்கும் முக்கியத்துவம் கொடுத்தனர் என்பதை அறிய முடிகிறது.

'வினையே ஆடவருக்கு உயிரே' என்ற நெறிமுறையோடு ஆடவர்கள் ஒழுக்கமுடையவராக இருத்தல் வேண்டும் என்பர். கற்பு நிலை போன்ற ஆடவரின் ஒழுக்கம் இருத்தல் வேண்டும். இதனை வளர்க்க வேண்டியதும் பேணிக் காக்க வேண்டியதும் மன்னனின் தலையாயக் கடன் என்பார்கள். அரசனது வாழ்க்கையே மக்களுக்குச் சான்றாகத் திகழ வேண்டும். அந்நாடே சிறப்புப் பெறும் என்பர். இதனையே மன்னனுக்கு உரைக்கும் நல்லியல்பு என்றும் கூறுவர். சான்றாக, மோசிகீரனார், ஔவையார், நக்கீரர், உருத்திரங்கண்ணனார் கூறிய திறத்தைக் காணலாம்.

## மன்னனது கடமை உரைத்தல்

ஒவ்வொரு மன்னனின் கடமையானது நாட்டு மக்களைப் பேணுதலேயாகும். அதனினும் பெரிது உலக மக்களைத் தன்னுயிர் போல் காத்தலே என்கிறார். அதனை,

> "நெல்லும் உயிர் அன்றே; நீரும் உயிர் அன்றே;
> மன்னன் உயிர்த்தே; மலர்தலை உலகம்
> அதனால், யான் உயிர் என்பது அறிகை
> வேல்மிகு தானை வேந்தற்குக் கடனே"[42]

எனப் பாடுவார்.

நெல்லுக்கு நீர் உயிரானது போல மன்னனுக்கு மக்கள் உயிர் போன்றவர்கள். அவர்கள் தம் உயிர் போலப் பேணிக் காத்தலே மன்னனது நல்லியல்பாக எடுத்துரைக்கின்றார். அது அவனது கடமையாகும் எனவும் பாடுகின்றார்.

## ஆடவரது ஒழுக்கம் இயம்பல்

ஒவ்வொரு ஆண்மகனின் ஒழுக்கத்தின் மூலமே நாடு சிறப்பு பெறும். அதுவே உலக மேம்பாட்டிற்கும் உதவும். இதனைக் கூறும் போது,

“நாடு ஆகு ஒன்றோ; காடு ஆகு ஒன்றோ;
அவல் ஆகு ஒன்றோ; மிசை ஆகு ஒன்றோ;
எவ்வழி நல்லவர் ஆடவர்;
அவ்வழி நல்லை; வாழிய நிலனே!”[43]

என ஆண்மகனது ஒழுக்கமானது, உலக மேம்பாட்டிற்கு அடிப்படையாகும். இதனைப் பேணிக் காக்கவில்லையாயின் நாடு அழிந்து போகும் என ஔவையார் பாடிய பாடல் உற்று நோக்கத்தக்கது. அந்நாளில் ஆடவரின் ஒழுக்கமானது, அறத்தோடு இல்லாத நிலையில் இருந்துள்ளதைப் பெண்பாற் புலவர் கூறுவதிலிருந்து உணர முடிகிறது. நல்ல ஆடவர்கள் நிறைந்த நாடே சிறந்த நாடாகத் திகழ முடியும். அதனைப் பேணிக் காப்பது அரசனது ஆட்சித்திறனில் உள்ளது என்று மன்னனுக்கு எடுத்துரைக்கின்றார்.

## கொடைத்தன்மை உரைத்தல்

மன்னன் என்பவன் நாட்டின்கண் வீரம், புகழ், கொடை முதலியவற்றைக் காப்பவனாகத் திகழ வேண்டும். உலகம் நிலையில்லாதது; அதைப்போல உலகப் பொருட்களும் நிலையில்லாதது. எனவே தான் பெற்ற செல்வத்தை அறத்தோடு ஈகை செய்தல் வேண்டும் என்பார். இதனை,

“நடுநால் யாமத்தும் பகலும் துஞ்சான்
கடுமாப் பார்க்கும் கல்லா ஒருவற்கும்
உண்பது நாழி; உடுப்பவை இரண்டே”[44]

என்கிறார். உண்பதும், உடுப்பதும் ஆகிய இரு செயல்களைச் செய்பவர்கள் அரசனே ஆனாலும் ஆண்டி போலக் கருதப்படுவர். பெற்ற செல்வத்தால் செய்ய வேண்டுவது ஈதலே என்பார். ஈகையுடையோனே நற்பண்பு உடையவனாகக் கருதப்படுவான் என்பதை மன்னனது நல்லியல்பாகக் கூறுகின்றார்.

## நட்புப்பேணல் நிலை உரைத்தல்

பரிசுபெறல் நிலையில் சோழனின் நல்லியல்பினைச் சுட்டி, மன்னனின் நட்பு பேணும் நிலையினையும் விளக்குவார்.

யாரிடத்து நட்பு பூணுதல் வேண்டும், என்பதனை உவமை கொண்டு அறிவுறுத்திக் காட்டுவார். உயரிய குணம் உடையோரிடத்து நட்பு பூணுதல் வேண்டும் என்பார்.

இதனை,

"புலி பசித்தன்ன மெலிவு இல் உள்ளத்து
உரனுடையாளர் கேண்மையொடு
இயைந்த வைகல் உள ஆகியரோ"[45]

புலியானது தான் செய்யும் வேட்டையின்கண் மிக்க பசியுற்ற போதும் இடப்பக்கம் வீழ்ந்த உணவினை உண்ணாது செல்லும்; புலி பசித்தாலும் புல்லைத் தின்னாது என்பதைப் போல நல்ல குணங்களையுடைய அன்பரோடு மட்டுமே நட்பு கொளல் வேண்டும் என்று உரைப்பார்.

நல்ல நட்பே நற்பண்பாளனாக மனிதனைத் திகழச் செய்யும். அதனைப் பரிசில் கொடல் நிலையின்கண் சுட்டுவர்.

"புலி பார்த்து ஒற்றிய களிறுஇரை பிழைப்பின்
எலிபார்த்து ஒற்றிய தாகும்"[46]

என்பர். அதாவது உயரிய பண்பாளன் தரும் பரிசிலானது களிறு போன்றது என்பர். புலவனின் குறிப்பறிந்து மன்னன் பரிசு தருதல் வேண்டும். அவ்வாறு தராத பரிசு 'எலி' போன்றது என்கிறார் பெருஞ்சித்திரனார். இது மன்னனை நல்லியல்பு உடையோனாகத் திகழ நற்பண்பு மிக்கோரிடம் நட்பு பூண உதவும் என்றும், இது மன்னனின் நல்லியல்புத் திறனை வளர்க்கும் என உணர்த்துகிறார். பரிசில் பெற விழையும் புலவன் மன்னனின் ஈகைத்திறன், நற்பண்பினைப் பேணுதலே எனக் குறிப்பிடுகின்றார்.

## சமூகப்பற்றுக் கொளல்

சங்கப்பாடல்கள் அனைத்தையும் ஆராய்ந்து நோக்கின் புலவர்கள் சமூகத்தின் மீது கொண்ட பற்றும், அக்கறையும் உடையவர்களாகவே தென்படுகின்றனர். அவர்களது, பாடல்கள் அனைத்தும் சமூக அக்கறையுடையவைகளாகவே திகழ்கிறது.

அவர்கள் மன்னனுக்கும், தனிமனிதனுக்கும் நன்னெறிகளைப் பாடல்வழி உணர்த்துபவர்களாக விளங்கினர். மேலும் எக்கருத்தினையும் அஞ்சாது உரைப்பவராய்த் திகழ்ந்தனர்.

சங்கப் புலவர்கள் ஒழுக்க நெறியைப் பேணிக் காத்தனர். பரந்த மனப்பான்மையும், தன்னலமற்ற சிந்தனையும், தன்மானத்தைத் தனது உயிரெனக் காத்தும் நின்றனர். மக்களின் நலன் கருதி ஆளுவோருக்கு அறம் உரைத்த அமைச்சர்கள் இவர்கள் என்று கூறலாம்.

''சான்றோர் பலர்; யான் வாழும் நாடே!''[47]

இப்பாடலில், எனது மன்னனும், மக்களும் தீமையையே அறியாதவர்கள். ஆதலால் எம் நாடு உயரிய சான்றோர்களும் கல்வியில் சிறந்தவர்களும் நிறைந்துள்ளனர். அதனால் இவ்வாறு உள்ளேன் என்கிறார்.

இதே போன்று எல்லா நாடும் திகழ்ந்தால் எம்மைப் போன்று மகிழ்வோடு அனைவரும் திகழ்வர் என்று கேட்போருக்குப் பதிலுரைக்கின்றார் பிசிராந்தையார்.

ஒவ்வொரு நாடும் சிறப்புற்றுத் திகழ, தனிமனிதனின் நல்லியல்பு சிறப்பாக இருத்தல் வேண்டும். சமுதாயத்தின் நலன் மனிதனுள் அடங்கிக் கிடக்கின்றது.

நல்ல சமூகம் உருவாக வேண்டுமானால், வாழும் மனிதன் நல்லவனாகவும், நற்சிந்தனை உடையவனாகவும் இருத்தல் வேண்டும். அன்றையப் புலவர்கள் சமூக அக்கறையுடையவர்களாகத் திகழ்ந்தனர். என்பதை,

''நீர்வழிப் படூஉம் புனைபோல் ஆருயிர்

முறைவழிப் படூஉம் என்பது திறவோர்''[48]

எனப் பாடுவார்.

முறைமைப் படுத்தப்படாத வாழ்க்கையானது அழிவையேத் தரும் எனக் கணியன் பூங்குன்றனார் கூறுவார். இதேபோல்,

“பல்சான்றீரே! பல்சான்றீரே!

கயல் முள் அன்ன நரைமுதிர் திரை கவுள்,

பயன் இல் மூப்பின் பல்சான்றீரே!”[49]

என்ற பாடலில் மன்னனின் புகழ், கொடை, வீரம் முதலியவை பேசப்பட்ட போதிலும், மன்னனின் வாழ்க்கை மக்களின் வாழ்க்கையோடு புனையப்பட்டிருக்கின்றன. மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம் என்பது ஒருபோதும் பொய்த்தல் இல்லை. காலம் மாறினாலும் கருத்துக்களின் செறிவுகள் அதே தன்மையுடையதாய்ச் சமூக நிலைப்பாட்டிற்கு உகந்ததாய் உள்ளது என்கின்றனர். புலவர்கள் மக்களுக்குள் மக்களாய் வாழ்ந்துள்ளனர். அரசனை நெறிப்படுத்தியும், இடித்துரைத்ததும், நல்லியல்பு கூறியும் நாட்டினை வழிநடத்தும் சமூகவாதியாகத் திகழ்ந்தனர். சமூகத்திற்காகத் தன்னையே அர்ப்பணித்துக் கொண்டவர்கள் புலவர்கள் எனலாம்.

## வறுமையிலும் நேர்மை

வாழ்தல் வேண்டி பொய் கூறேன்; மெய் கூறுவல் என்று புலவர்கள் தம் வறுமை வாழ்வை வேண்டி நீக்கப் பொய் கூறி வாழவில்லை. மன்னர்களின் புகழுரைகளைக் கேட்க, இல்லாத ஒன்றை இட்டுக்கட்டி உணர்த்தியதும் இல்லை. இதனை,

“பீடு இல் மன்னர் புகழ்ச்சி வேண்டிச்

செய்யாக் கூறிக் கிளத்தல்

எய்யா தாகின்றது எம்சிறு செந்நாவே”[50]

எனப் பாடுவார்.

எந்நிலையிலும் புலவர்கள் தன்மானம் குன்றாத பெரியோராக வாழ்ந்தனர். தெளிந்த சிந்தனையும், தன் கருத்தினை உரைப்பதில் துணிவும் மிக்கவர்களாகக் காணப்பட்டனர். நற்குணங்கள் நிறைந்த மன்னனிடம் மட்டுமே பாடிப் பரிசில் பெற்றனர். உயரிய பண்பு இல்லாரிடத்து செல்வம் குவிந்திருந்தாலும் அவ்விடத்திற்குச் செல்லவில்லை; அவர்களை மதிக்கவும் இல்லை. உயரிய குறிக்கோளுடன் வாழ்ந்தனர்.

இதனை,

“மிகப்பேர் எவ்வம் உறினும் எனைத்தும்
உணர்ச்சி யில்லோர் உடைமையுள்ளேம்;
நல்லறி வுடையோர் நல்குரவு
உள்ளுவதும் பெரும! யாம் உவந்து நளிபெரிதே”[51]

எனப் பாடுவார்.

புலவர் மட்டுமின்றி அவரைச் சார்ந்த சுற்றத்தினரும், மக்களும் குலமரபையும், பண்பையும் பேணிக்காப்பவர்களாக விளங்கினர். சான்றாக,

“ஒல்குபசி உழந்த ஒடுங்குநுண் மருங்கில்
வளைக்கைக் கிளைமகள் வள்உதிர்க் குறைந்த
குப்பை வேளை உப்புஇலி வெந்ததை,
மடவோர் காட்சிநாணி, கடைய டைத்து
இரும்பேர் ஒக்கலொடு ஒருங்கு உடன்ன மீசையும்
அழிபசி வருத்தம்”[52]

எனும் பாடல் புலவரின் வறுமை நிலையினைச் சுட்டி நிற்கிறது. வறுமை நிலையிலும் சுற்றத்தாரை வரவேற்கும் பண்புடையவர்களாய் வாழ்ந்தனர். தன் வறுமை உற்றாரும், அறியாதவண்ணம் தம் வாழ்க்கையை மேற்கொண்டனர். உப்பில்லாத கீரையைச் சமைத்து தம் மக்களுக்கு அளித்தனர். புலவரின் மனைவி எவரும் என்றும் அதைப் பிறர் கண்டுவிடக் கூடாது என்பதற்காக வாசற் கதவை சாத்தினாள் என்று பாடப்பட்டுள்ளது.

தன் வறுமையைப் பிறர் அறியாமல், நேர்மையோடு வாழ்ந்தனர் என்பது இதனால் அறிய முடிகிறது.

## ஆற்றுப்படுத்துதல் நிலை

ஒரு புலவன் மற்றொரு புலவனைப் பரிசில் பெற வழிகூறல் நிலையே ஆற்றுப்படுத்துதலாகும். பத்துப்பாட்டில் பொருநராற்றுப்படைப் படையில்,

"பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்

சென்று பயன் எதிரச் சொன்ன பக்கமும்"[53]

எனச் தொல்காப்பியம் ஆற்றுப்படுத்துதலுக்கு விதிமுறை கூறுகிறது. இவ்விதிப்படியே, ஆற்றுப்படுத்துவோன், தான் சென்று பெற்ற பெருவளவனை விளித்துக் கூறி, "நீவிர் சென்றும் பயன்பெறுவாயாக" என ஆற்றுப்படுத்துதலைக் காணலாம்.

சிறுபாணாற்றுப்படை முதலாக எஞ்சிய மூன்று ஆற்றுப்படைகளிலும், ஆற்றுப்படுத்துவோன், ஆற்றுப்படுத்துவோனை 'நீ இவ்வழியே சென்று இவ்விடங்களில் இன்னின்ன உண்டிகளைப் பெற்றுச் செல்க' என விளித்துக் கூறும் இடத்து இவ்வாற்றுப்படைக் காலத்தால் முந்தியது என கருதுவதற்கு இடம் உண்டு.

"ஆடுபசி உழந்தனின் இரும்பேர் ஒக்கலொடு

நீடுபசி ஓராஅல் வேண்டின் நீடு இன்று

எழுமதி, வாழி, எழின் கிழவ!"[54]

பரிசில் பெற்று வந்த புலவன், வறுமையில் வாடி நின்ற புலவனை நோக்கி, நீண்ட நெடு நாட்களாக நீயும் உன் சுற்றத்தாரும் பெரும்பசியால் வாடிநிற்கின்றீர். இந்நிலையை நீக்கும் பொருட்டு காலம் தாழ்த்தாது உடனே புறப்படுக! என்று அப்புலவனை ஆற்றுப்படுத்துகிறார். இதில் ஆற்றுப்படுத்தும் புலவனின் உயரிய பண்பு தென்படுகிறது.

தான் பட்ட துன்பம் மற்றொரு புலவன் படாது இருத்தல் நிலையை அவர்கள் ஆற்றுப்படுத்துவதன் மூலம் அறியலாம். சங்கப்புலவர்கள் வறுமையிலும் மனிதப் பண்பு மாறாத நிலையோடு வாழ்ந்தனர். அதனை,

"உடும்பு உரித்தன்ன என்பு எழு மருங்கின்

கடும்பிணி கடும்பசி களையுநர்க் காணாது

சில் செவித்து ஆகிய கேளி நொந்து நொந்து

ஈங்கு எவன் செய்தியோ?

…….உறந்தையோனே குரிசில்

பிறன்கடை மறப்ப நல்குவன் செலினே!"[55]

என வரும் பாடலில், எதிர்வரும் பாணனை நோக்கி, சோழன் நலங்கிள்ளியின் வாயிலை, நீ அடைந்தால் நீ நினையாவண்ணம் பரிசில் வழங்குவான். அம்மன்னன் தன் கொடைத் தன்மையால் தன்னையே கருதுமாறு ஈகை செய்வான் என்றும்; மீண்டும் இரவாத அளவிற்குச் செல்வங்களை வழங்குவான். அத்தகைய ஈகையாளன் என்று மன்னனின் புகழ்பாடி ஆற்றுப்படுத்துகிறார். இதே போன்று புறநானூற்றில்,

"சேயிழை பெறுகுவை – வாள்நுதல் விறலி?

தடவு வாய்க் கலித்த மா இதழ்க் குவளை

வண்டுபடு புதுமலர்த் தண்சிதர் காலப்

பெய்யினும், பெய்யாது; ஆயினும் அருவி

……பாரி வேள்பால் பாடினைச் செலினே!"[56]

என்னும் பாடலில், கூத்தரும், விறலியரும், பாணரும், பொருநரும் அரசனிடம் தான் பெற்றப் பொருளைக் காட்டிப் பெறாதவர்க்கு வழிகாட்டி நெறிப்படுத்துவதைக் காண முடிகிறது.

பொன்னும், பொருளும் பெற்று வறுமையைப் போக்கிட வழிகாட்டும் புலவர்கள் பிறர் நலன் பேணும் அக்கறையுடையோராய் வாழ்ந்திருப்பதும் புலவர்களின் உயரிய பண்பாக அறியலாகிறது.

## புலவர் – புலவரைப் பாராட்டல்

புலவர்கள் பாடும் பொருளை வைத்து பிறந்தகுலம், தொழில் முதலியவற்றைச் சுட்டிக்காட்டிவர் ஆராய்ச்சியாளர்கள். அவர்கள் கூறும்போது குலமரபை அவர்களது பாடல்களே சுட்டி நிற்கும் என்பர். தமிழ்ப்புலவர்களைச் சங்ககாலப் புலவர்கள், இடைக்காலப் புலவர்கள், தற்காலப் புலவர்கள், மேலும் தமிழை வளர்த்த முகமறியாப் புலவர்கள் எனப் பிரித்துப் பார்ப்பர். அவர்களது பண்புநலனை வைத்து குலமரபு பேசப்பட்டது என்றே சான்றோர் கூறுவர்.

அன்று புலவர்களுக்கிடையே மதிப்பும் நட்பும் இருந்து வந்துள்ளது. மன்னனிடம் புலவன் கொண்ட நட்பின் ஆழம் பொய் அல்லாது மரியாதை நிமித்தமாகவும், வறுமையினைப் போக்கும் ஆற்றுப்படுத்துதல் நிலையிலும் மன்னனின் புகழ்பாடுதல் நிலையில் கருத்துக் கூறலுமாக இருந்தது. மன்னனுக்காக உயிர்விட்ட புலவர்கள்போல் அல்லாது சிநேகத்துடன் மட்டுமே உறவு உடையோராய் காணப்பட்டனர்.

புலவர்கள் தங்களுக்குள் ஒற்றுமையாக, ஒவ்வொருவரும் பாராட்டிக் கொண்டனர் என்பதனை, இடைக்காடர் என்ற புலவர் கபிலர் மேல் கொண்டிருந்த நட்பின் சிறப்பினை ‘ஏனைய அந்தாதி சொன்னவன் கபிலர் என்னும் தோழன்’ என்ற வரிகளால் அறிய முடிகின்றது.

சீத்தலைச் சாத்தனாரை இளங்கோவடிகள் ‘தண்டமிழ்ச் சாத்தன், தண்டமிழாசான், நன்னூல் புலவன்’ என சிலம்பில் புகழ்பாடியிருக்கிறார்.

புலவர்களுக்கிடையேயான நட்பு என்பது அவர்கள் தன்னலமற்றவர்களாய், பரந்த மனப்பான்மையுடையவர்களாய் திகழ்ந்திருந்தனர். மன்னனின் மூலமாகவே புலவர்களின் பண்புகளை அறிய முடிந்தது. மன்னனின் பண்புகள் புலவராலும், புலவரின் பண்புகள் மன்னராலும் உணர்த்தப்பட்டது.

> “நிலமிசைப் பரந்த மக்கட்கு எல்லாம்
> புலன் அழுக்கு அற்ற அந்தணாளன்
> இரந்து செல்மாக் கட்கு இனி இடன் இன்றி
> பரந்து இசை நிற்கப் பாடினான்”[57]

எனவரும் பாடலில் கபிலனின் பெருமையை மற்றொரு புலவன் எடுத்துரைப்பதாக அமைந்துள்ளது. ஒரு புலவனின் பெருமையை மற்றொரு புலவன் பெருமைப்படுத்துதலைக் காணலாம்.

அம்மன்னனிடத்துப் பரிசில் பெற்று வரும் பாணனைக் கண்டு வினவுவதுபோல, சோழன் குளமுற்றத்துத் துஞ்சியதாக இது அமைந்தது. புலவர்கள் மன்னனிடத்துப் பெற்ற பரிசில் தனது வறுமையைப் போக்குகிறது. அதேபோல மற்ற புலவர்களும் வாழ வேண்டும் என்ற எண்ணம் உடையவனாய் காணப்பட்டனர்.

அதனை,

"யான் வாழும் நாளும் மன்னன் வாழ்க
பாணன் காண்க"[58]

எனப் பாடுவான்.

இது புலவனின் தன்னலமற்ற தன்மையினையும், பிற புலவரைப் பேணிக் காக்கும் தன்மையினையும் காணமுடிகின்றது. மற்ற புலவரை ஆற்றுப்படுத்தும் நிலையில் ஒரு புலவனை மற்றொரு புலவன் பாராட்டிப் போற்றும் பாரம்பரிய பண்பும் காணப்படுகின்றது.

சோழன் கிள்ளிவளவனைக் காண வந்த இளந்தத்தன் என்ற புலவனை ஒற்றன் என நினைத்து, கொல்ல உத்தரவிட்டான் மன்னன். அதனை அறிந்த கோவூர்கிழார் அவ்விடம் சென்று இளந்தத்தனின் உயிரைக் காத்தார் என்பதை இப்பாடல் மூலம் அறியலாம்.

"வரிசைக்கு வருந்தும் இப்பரிசில் வாழ்க்கை
பிறர்க்குத் தீதறிந் தன்றோ? இன்றே திறம்பட
நண்ணார் நாண, அண்ணாந்து ஏகி
ஆங்கு இனிது ஒழுகின் அல்லது ஓங்குபுகழ்
மண்ணாள் செல்வம் எய்திய
நம்மோர் அன்ன செம்மலும் உடைத்தே!"[59]

எனப் பாடி, இவன் 'ஒற்றன்அல்லன் பொருளீட்ட வந்த புலவனே' என மன்னனுக்கு எடுத்துரைத்து புலவனின் உயிரை மீட்டார்.

இது மன்னனின் கொடையினும், புலவனின் உயிரைக் காத்து நிற்றலே அப்புலவனுக்குக் கொடையாக அமைகிறது. பரிசிலைக் காட்டிலும் புலவர் அளித்த உயிர்க்கொடையே மிகப் பெரியதாகும்.

புலவரை ஆற்றுப்படுத்தும் புலவர்கள் தம்மால் பொருள் கொடுக்க இயலாத நிலையில், தன் பெயரைக் கூறி, அம்மன்னன் பொருளை வாரி வழங்குவான் என வழி நடத்தினர். இதுவும் ஒரு விதமான கொடையெனக் கொள்ளலாம்.

பொய்கையார், சேரமான் மன்னனின் மார்பினைக் காணச் செல்லுமாறு புலவனை ஆற்றுப்படுத்துகிறார். அதனை,

> “கள்நாறும்மே கானல் அம்தொண்டி
> அஃது எம் ஊரே; அவன்எம் இறைவன்
> எம்முள் உள்ளுமோ, முதுவாய் இரவல
> அமர்மேம்படு உங்காலை, நின்
> புகழ்மேம் படுநனைக் கண்டனம்”[60]

எனப் பாடுவார்.

இதில் வறுமையின்கண் வாடி நின்ற புலவனை நோக்கி, சேரமான் எம் இறைவன், அவனிடத்துச் சென்று பரிசில் பெறுக; என்றும், ‘போர்க்களங்களில் வெற்றி பெறும்போது நின் புகழ் போற்றுவானை யாம் கண்டு வந்தோம்’ என உரைக்குமாறு கூறுகிறார். என் பெயர் கேட்டால் கொடை அளிப்பான் என எடுத்துரைக்கின்றார்.

சங்கப்புலவர்கள் நாட்டினையும், அரசனையும், மக்களையும் பேணக்கூடிய அரிய பாடல்களை இயற்றியதோடு அல்லாமல் தான் பெற்ற செல்வத்தை, தன்னைச் சுற்றியுள்ளோருக்கும், உறவினருக்கும், தன்போன்ற புலவனும் அளித்தான்; அதனினும் மேலாகத் தன் புலமையின் தகுதியை உணராத மன்னனுக்கும் தான் பெற்ற பரிசிலைக் கொடையாக அளித்துள்ளனர் என்பதை பாடல்கள் வழி அறிய முடிகின்றது.

## விருந்தோம்பல் நிலை கூறல்

சங்ககால மக்கள் விருந்தோம்பல் பண்பினைத் தன்னகத்தே கொண்டிருந்தனர். விருந்தினர் என்பவர்கள் முகம் தெரியாதவர்களாக இருந்தாலும், அனைவரையும் வரவேற்கும் தன்மையுடையவராகக் காணப்பட்டனர். “இரவு நெடுநேரம் காத்திருந்து, விருந்தினர் வரவில்லையானால் மட்டுமே வீட்டின் கதவை அடைந்தனர். சங்ககால மக்கள் விருந்தோம்பல் இல்லையேல் அது இல்லறம் இல்லை”[61] என்ற கருத்து நிலவி வந்தது.

வீட்டிற்கு எத்துணை விருந்தினர் வரினும் உணவு குறைவாக இருப்பினும் மனம் கோணாது நெடிய பந்தலிலே அமரச் செய்து உணவினைப் பரிமாறும் பண்புடையவர்களாகத் திகழ்ந்தனர் என்பதனை,

"தவச் சிறிது ஆயினும் மிகப்பலர் என்னாள்
நீர் நெடும் பந்தர் ஊண்முறை ஊட்டும்
இற்பொலி மகடூஉப் போல சிற்சில
வரிசையின் அளிக்கவும் வல்லன்"[62]

எனப் பாடுவார்.

விருந்தோம்பல் பண்பானது மன்னனிடத்து மட்டும் இன்றி வறியவரிடத்தும் பாரம்பரியப் பண்பாகக் காணப்பட்டது. வறுமையினையும் பொருட்படுத்தாது, விருந்து படைத்தல் நிலையினைக் காணமுடிகிறது. விருந்து என வந்தோருக்கு இருப்பதை அளித்து மகிழ்ந்த நிலையில் சங்ககால மக்கள் காணப்பட்டனர். அதனை,

"…..மனையோர் விரும்பி
வரகும் தினையும் உள்ளவை எல்லாம்
இரவல் மாக்கள் உணக்கொளத் தீர்ந்தென
குறித்துமாறு எதிர்ப்பை பெறா அமையின்
குரல் உணங்கு விதத்தினை உரல்வாய் பெய்து
சிறிது புறப்பட்டன்றோ இலனே"[63]

எனப் பாடுவர்.

இப்பாடலின் மூலம் சங்ககால மக்களின் பண்பினைத் தெளிவாக அறிந்து கொள்ள முடிகின்றது. விருந்தோம்பல் பண்பினைப் பேணிக் காப்பதும், வளர்ப்பதும், மக்களுக்கு எடுத்துரைத்தலும் புலவனின் கடனே என்பர்.

புலவர்கள் தாம் அரசர்களிடம் பெற்றுவந்த பொன்னையும், பொருளையும், பிறருக்கு அளித்ததோடு மட்டுமல்லாது, உடனிருந்து உபசரித்து விருந்து படைத்தனர்.

பெரும்பாணாற்றுப்படையில் தொண்டைமான் இளந்திரையன் கடியலூர் உருத்திரங்கண்ணனாரைப் பற்றிக் கூறும்போது,

“நாவல் அம்தண்பொழில் வீவுஇன்று விளங்க
நில்லா உலகத்து நிலைமை தூக்கி.......
முகமறை முகமறை நோக்கி, முகன் அமர்ந்து
ஆனா விருப்பின்தான் இன்று ஊட்டி,
மங்குல் வானத்துத் திங்கள் ஏய்க்கும்”[64]

என்று பாடுவார்.

இவ்வுலக மக்கள் யாவரும் நலமுடன் வாழ்தல் வேண்டும் என்பதனை ‘நாவல் அம்தண்பொழில் வீவின்று விளங்க’ என்று விளக்குவார். தொண்டைமானைக் காணச் சென்ற பாணன் கூடவே தன் மனைவி மக்களையும் அழைத்துச் சென்றான். அவனது வறுமையைக் கண்ட மன்னன், வறுமை தீரப் பொருளும், கிழிந்த ஆடையை நீக்கிப் புத்தாடையும், வெள்ளிப்பாத்திரத்தில் அறுசுவை உணவினையும் வழங்கினான் என்றும் கூறுவர்.

புலவனின் முகமறிந்து தானே உணவுகளைப் பரிமாறி விருந்தோம்பல் செய்த பண்பினைச் சுட்டிக் காட்டுகின்றார். மன்னனும் புலவரும் ஈதல் இசைப்பட வாழ்ந்தனர் என்ற நிலையிலே தனது வாழ்க்கையை மேற்கொண்டனர்.

பேகன் என்ற சிற்றரசன் கொடைப் பண்பில் மட்டுமல்லாது விருந்து படைத்தலும் உயரிய பண்புடையவன். என்பதனை,

“அறுகுறுத்து உடுத்தும், அகல்வயல் பொழிந்தும்
உறும் இடத்து உதவாது, உவர்நிலம் ஊட்டியும்
வரையா மரபின் மாரிபோல
கடாஅ யானைக் கழற்காற் பேகன்
கொடைமடம் படுதல் அல்லது
படைமடம் பாடாண் பிறர் படைமயங்குறினே”[65]

என்று பாடுவார். வரையறுத்து கொடை செய்யாது, தன்னிடம் உள்ள பொருளை எப்படி மழை எல்லா இடங்களிலும் நீரைப் பொழிவிப்பதைப் போல அள்ளி வழங்கும் தன்மையுடையவனாகத் திகழ்ந்தான். வருபவரின் முகமறிந்து வறுமையைப் போக்கினான். மனத்திற்குப் பொருளும், வயிற்றுக்கு அறுசுவை உணவும் வழங்கினான் என்று பரிசில் பெற்ற பாணன் விருந்தோம்பலைத் தெரிவிப்பான். மேலும்,

"எத்துணையாயினும் ஈதல் நன்று
மறுமை நோக்கின்றோ அன்றே
பிறர் வறுமை நோக்கின்று, அவன்கை வண்ணம்"[66]

என்ற பாடலில், ஈதல் என்பது பலன் கருதாது செய்தல் வேண்டும் என்பார். ஈகை என்பது பிறர் வறுமையைப் போக்குவதே அன்றி; பயன் கருதி அல்ல; என்ற உள்ளத்தோடு, மன்னரும் புலவரும் திகழ்ந்தனர்.

பெருஞ்சித்திரனார். குமண வள்ளலைக் காணச் சென்றார். புலவருக்கு ஏராளமான பரிசிலை வழங்கினான். அவனிடம் பெற்று வந்த பரிசிலைப் புலவன் தனது மனையாளை நோக்கி,

"நின் நயத்து உறைநர்க்கும், நீ நயந்து உறைநர்க்கும்
பல்மாண் கற்பின் நின்கிளை முதலோர்க்கும்
கடும்பின் கடும்பசி தீர யாழ நின்
நெடுங் குறியெதிர்ப்பை நல்கியோர்க்கும்
இன்னார்க்கும் என்னாது, என்னொடும் சூழாது
வல்லாங்கு வாழ்தும் என்னாது, நீயும்
எல்லோருக்கும் கொடுமதி – மனைக்கிழவோமே
பழம் தூங்கு முதிரத்துக் கிழவன்
திருந்துவேல் குமணன் நல்கிய வளனே!"[67]

என்று கூறுகின்றார். தான் பெற்ற பரிசிலை வறுமையால் உதவிய உற்றாருக்கும், உறவினருக்கும் அளிப்பாய்.

கடும் பசி போக்கிய நல்லாளை அழைத்து அறுசுவை உணவினை அளித்து மகிழ்விப்பாய் என்று தனது மனைவிக்குச் சொல்லியதாக இப்பாடல்வழி அறிய முடிகின்றது. மன்னன் மட்டுமல்லாது புலவரும் விருந்தோம்பல் செய்து தன் சுற்றத்தாரைக் காத்தனர் என்று கருத்து புலனாகின்றது.

## கொடைப்பண்பு கூறல்

புலவர்கள் தன் வறுமை நிலையிலும் கொடைத்தன்மை மிக்கவராகத் தென்பட்டனர். மன்னனுக்கு ஈகையை எடுத்துக்கூறிய புலவர்கள் ஈகைத்திறனைத் தானும் செய்து நின்றனர். வறுமை கண்ட இடத்தில், உடனே தான் ஈட்டிய பொருளை அப்படியே இரவலருக்கு வழங்கும் பண்புடையவர்களாகத் திகழ்ந்தனர்.

பெருஞ்சித்திரனார் வேள்மானிடம் சென்றார். அவனோ சாவின் எல்லையில் நின்றான். தன் பின்னோனான இளவெளிமானிடம் சென்றார். அவன் அளித்த பரிசிலைப் பெறாது, குமணனிடம் சென்று பரிசில் பெற்றார். அதனோடு அவன் அளித்த பரிசிலைக் கொண்டு வந்து வேள்மானின் காவல் மரத்தில் கட்டி விட்டு ‘இரவலர் அளித்த பரிசில்’ இது எனப் பாடுகின்றார்.

“இரவலர் புரவலரை நீயும் அல்லை
புரவலர் இரவலர்க்கு இல்லையும் அல்லர்;
இரவலர் உண்மையும் காண்; இனி இரவலர்க்கு
ஈவோர் உண்மையும் காண்; இனி நின் ஊர்க்
கடிமரம் வருந்தத் தந்து யாம் பிணித்த
நெடுநல் யானைஎம் பரிசில்;
கடுமான் தோன்றல்; செல்வல் யானே![68]

எனப் பாடுவார்.

இரவலருக்கு உதவும் புரவலன் நீ மட்டுமன்று, வேறு பல புரவலரும் உண்டு. நின் ஊரின் காவல் மரத்தில் யானையைக் கட்டியுள்ளேன். இது யான் அளித்த பரிசில் உனக்கு என உரைக்கின்றார். புலவர்களின் உணர்வறிந்து அளிக்கும் பரிசை மட்டுமே புலவர்கள் பெற்றார்கள்.

தன்மானத்திற்கு இழிவு வரும் எனில் அதனை மறுத்து மன்னனுக்குப் பாடமும் புகட்டினர் என்பதை இப்பாடல் வழி அறிய முடிகிறது.

மேலும் குமணன் அளித்த பரிசிலைத் தம் உற்றாருக்கும் உறவினருக்கும் வாரி வழங்குக என்று மனைவியிடம் கூறியதை,

''வல்லாங்கு வாழ்தும் என்னாது, நீயும்
எல்லார்க்கும் கொடுமதி – மனை கிழவோயே''[69]

என்ற பாடலின் மூலம் தான் பெற்ற செல்வத்தைக் கொடையாக அளித்தார் என்பதனை அறிய முடிகின்றது.

## வீடுபேறு அடைதல் நிலை

ஆற்றுப்படுத்தும் புலவர்களைப் பொருள் பெறுதல் கூறியதோடு மட்டுமல்லாது வீடுபேறு அடைதல் நிலையினையும் அறிவுறுத்துகின்றனர். வாழ்க்கைக்குப் பொருள் அவசியமாயின் வாழ்வின் நிலையாமைக்கு வீடுபேறு அடைதலும் அவசியமாகும் என்கிறார் நக்கீரர். அதனை,

''சேவடி படரும் செம்மல் உள்ளமொடு
நலம்புரி கொள்கைப் புலம் புரிந்து உறையும்
செலவுநீ நயந்தனை ஆயின் பலஉடன்
நன்னர் நெஞ்சத்து இன்றசை வாய்ப்ப
இன்னே பெறுதி நீ முன்னிய வினையே''[70]

எனப் பாடுவார். திருமுருகாற்றுப்படையில் இறைவனை வணங்குதல் நிலையினையும் புகழையும் எடுத்துரைப்பார். மன்னனிடம் பொருள் ஈட்ட ஆற்றுப்படுத்தும் புலவர்கள், வீடுபேறு அடைவதற்கு முருகனிடத்து ஆற்றுப்படுத்துகின்றார்.

அவன் அருளாரே அவன் தாள் வணங்கி என்ற மாணிக்கவாசகரின் கூற்றிற்கிணங்க, உயிரின் தன்மையறிந்து நல்லாசிரியனாய் எதிர்வந்து செவியறுத்து வீடுபேறு அடைதலை வழிப்படுத்துகின்றார். இவ்வாற்றுப்படை வாழ்வின் நிலையாமை தத்துவத்தை உணர்த்தி நிற்கின்றது.

உள்ளுவது எல்லாம் உயர்வு உள்ளல்'' என்ற உயர்ந்த சிந்தனையோடு வாழ்ந்தவர்கள் சங்கப் புலவர்கள். அப்புலவர்களைப் பற்றி, ''நம் சங்கப் புலவர்களின் பொய்யா மொழியில் உதித்தவை சங்கப் பாடல்கள். மன்னனும் மக்களும் வாழ்வின் உண்மைநிலை உணர்ந்து செம்மை வாழ்வு வாழ்ந்தவர்கள். நேர்மையும், திண்மையும், வளமையும், வாய்மையும், தெளிவும், துணிவும், அன்பும், அருளும் நிறைந்த பாடல்களைப் பாடியவர்கள். மனமும், சிந்தனையும் வளம்பெற மேம்பட்ட கருத்துக்களைத் தந்தவர்கள் புலவர்கள் என்பார்கள் இலக்கியவாதிகள்''[71] என்கிறார் ரா.ருக்மணி.

ஆற்றுப்படுத்தும் புலவர்கள் ஆற்றுப்படுத்துதலோடு மட்டுமல்லாது வீடுபேறு நிலையினையும் சேர்த்து ஆற்றுப்படுத்தினர் என்பதை ஆற்றுப்படை வாயிலாக அறிய முடிகின்றது.

**முடிவுகள்**

சங்க இலக்கியம், சங்கப்புலவர்களின் வாழ்வியல் சிந்தனைகளைச் சித்தரிப்பதாக அமைந்துள்ளது. மேலும் அவர்களது பாடல்கள், புலவனின் புலமைத் திறனையும் பண்பாட்டினையும் எடுத்துரைப்பதாக உள்ளது.

புலவனின் பண்புகளும் வாழ்வியலும் எனும் தலைப்பில் புலவனின் பண்புகளாகப் புலமை, மன்னனின் நட்பிலை, கொடைப்பண்பு,ஈகைத்திறம், ஆற்றுப்படுத்துதல், மன்னனுக்கு அறிவுரை வழங்கல், இடித்துரைத்தல், சமூக அக்கறைக் காட்டல், புலவன், மன்னன் நல்லியல்புகள் போன்றவை இவ்வியலில் பேசப்பட்டுள்ளன. பண்பு எனப்படுவது ஒவ்வொரு மனிதனின் வாழ்க்கையைப் பேணிக்காப்பது மட்டுமின்றி, நாட்டின் வளர்ச்சிக்கு உதவுகின்றது. ஒவ்வொரு தனிமனிதனின் சிறப்பாகவும், பண்பாகவும், குலத்தின் மரபாகவும் கூறப்படுகின்றது. சங்கப்புலவர்களின் குலப்பெருமை, பாரம்பரியம் முதலியவை தமிழர் பண்பாட்டின் தன்மையை நிர்ணயம் செய்கிறது என்பர்.

புலவர்கள் தனது வறுமை நிலையிலும் தன்மானம் குன்றாது எந்நிலையிலும் ஒழுக்கநெறி தவறாறு வாழும் பண்பினராய் திகழ்ந்தனர். தமது புலமைத் திறத்தாலும் உயரிய பண்பாலும் மன்னனிடம் நன்மதிப்பைப் பெற்றிருந்தனர். கல்வியில் சிறந்த சான்றோர்களாய்த் திகழ்ந்தனர்.

மன்னனுக்கு ஈகையைப் பற்றி எடுத்துரைத்தும், மக்களின் நிலையினைச் சுட்டிக்காட்டியும் வாழ்ந்தனர். முகம் மாறிய மன்னனிடம் பரிசில் பெற மறுத்தனர். அகமகிழ்ந்து தரும் பரிசில் சிறிதாயினும் அதனை மட்டுமே பெற்றனர்.

ஆற்றுப்படுத்துதல் நிலையில் தன் வறுமை நீக்கிய அரசனை, பிற புலவனுக்கும் அறிவுறுத்தி பரிசில் ஈட்டச் செய்தனர். பரிசு பெறுதல் மட்டுமல்லாது அவர்களைக் காக்கும் பண்பும் நிறைந்தவர்களாகக் காணப்பட்டனர். தான் பெற்ற பரிசிலைத் தன் சுற்றத்தாருக்கும் அளித்து மகிழ்ந்தனர். தன் தகுதியறிந்து தரும் பரிசிலை மட்டுமே பெற்றனர். பரிசில் தரும் மன்னனிடம் தவறு காணுமிடத்து இடித்துரைத்தனர். மேலும், அறநெறி உரைத்தும் வழிநடத்தினர். அஞ்சாது எக்கருத்தினையும் எடுத்துரைக்கும் தன்மையுடையவராகத் திகழ்ந்தனர்.

புலவர்கள் தன்னலம் கருதாது பிறர்நலம் பேணும் பண்புடையவராயத் திகழ்ந்தனர். தான் மட்டுமின்றி தன் மனைவி மக்களையும் சுயநலமின்றி வாழ அறிவுறுத்தினர். நல்லியல்புகளை மன்னனுக்கும் மக்களுக்கும் எடுத்துரைத்தனர். நற்பண்பு நிலையில் மன்னன் புலவரிடம் கொண்ட நட்பானது மிக ஆழமானதாகவும், உண்மையானதாகவும் விளங்கியது. நண்பனுக்காக உயிரையும் துறக்கும் நன்றியுடையவர்களாக இருந்தனர் புலவர்கள்.

அவர்களது வாழ்க்கையானது மக்களுக்கும், மன்னனுக்கும் அறிநெறிகளை உரைப்பதோடு அல்லாமல் தானும் வாழ்ந்து காட்டினர். எச்சூழலிலும் பண்பிலும், ஒழுக்கத்திலும் தவறாது இருந்தனர். சமூக அக்கறையோடு வாழ்ந்தனர். அவர்களது பாடலால் வெற்றியடைந்தனர் எனக் கருதிய போதும் அவர்களது பண்பான வாழ்க்கையே, அவர்களது உயரிய மேம்பாட்டிற்கு வழிகோலியதாகும்.

## சான்றெண் விளக்கம்

1. புறம். பா.அடி.126:3-6
2. மேலது, பா.அடி.121.
3. மேலது,. பா.அடி.30:1-10.
4. மேலது, பா.அடி.183:1,2.
5. மேலது, பா.அடி.183:5-7.
6. மேலது, பா.அடி.183:8-10.
7. மேலது, பா.அடி.18:41-42.
8. குறள். 183.
9. புறம். பா.அடி.312:1-6.
10. மேலது, பா.அடி.195:1-6.
11. மேலது, பா.அடி.191:1-7.
12. மேலது, பா.அடி.182:1-10.
13. மேலது, பா.அடி.162:1-10.
14. மேலது, பா.அடி.137:12-15.
15. மேலது, பா.அடி.140:7.
16. மேலது, பா.அடி.140:9,10.
17. மேலது, பா.அடி.121:28-32.
18. மேலது, பா.அடி.126:9.
19. மேலது, பா.அடி.126:1-10.
20. குறள். 231.
21. மேலது, பா.அடி.141:13-15.
22. மேலது, பா.அடி.135:14-18.
23. மேலது, பா.அடி.140:5-8.
24. மேலது, பா.அடி.121:28-32.
25. மேலது, பா.அடி.154:2-13.
26. டி.எம்.சோமசுந்தரம் பிள்ளை, இலக்கியப் புலவர்கள், ப.5.
27. மேலது, 28.
28. புறநானூறு சொற்பொழிவுகள், ராசமாணிக்கனார், ப.18.
29. புறம். பா.அடி.184:5-10.
30. மேலது, பா.அடி.28:15-18.
31. மேலது, பா.அடி.143:11-15.

32. மேலது, பா.அடி.145:7-11.
33. குறள்: 184..
34. புறம். பா.அடி.236:.6,7.
35. மேலது, பா.அடி.110:1-6.
36. மேலது, பா.அடி.236:3-12.
37. மேலது, பா.அடி.91:1-4.
38. மேலது, பா.அடி.217:1-7.
39. மேலது, பா.அடி.217:1-5.
40. மேலது, பா.அடி.222:3-4.
41. நா. செயராமன், சங்க இலக்கியத்தில் பாடாண் திணை,ப.56.
42. புறம். பா.அடி.186:1-4.
43. மேலது, பா.அடி.187:1-4.
44. மேலது, பா.அடி.189:2-5.
45. மேலது, பா.அடி.190:10-13.
46. தி.சு.நடராசன், திறனாய்வுக் கலை, பக். 51,52.
47. பிசிராந்தையார்,ப.69.
48. புறம். பா.அடி.192:1-13.
49. மேலது, பா.அடி.195:1-3.
50. மேலது, பா.அடி.198:5-7.
51. மேலது, பா.அடி.197:15-17.
52. சிறுபாணாற்றுப்படை, அடி.135-140.
53. மேலது, அடி.3,4.
54. மேலது, அடி. 135-140.
55. புறம். பா.அடி.164:1-10.
56. மேலது, பா.அடி.105.
57. மேலது, பா.அடி.126.
58. மேலது, பா.அடி.173:1,2.
59. தமிழ்ப்பிரியன், தமிழ்ப்புலவர் வரலாறு, ப.7.
60. புலியூர்கேசிகன், மூலமும் உரையும், பா.163.
61. மேலது, பா.அடி. 48.
62. புறம். பா.அடி.331.
63. மேலது, பா.அடி.432.
64. பொருநராற்றுப்படை, பா.478, 479.

65. புறம். பா.அடி. 142.
66. மேலது,. பா.அடி. 141.
67. மேலது, பா.அடி. 164.
68. புலியூர்கேசிகன், மூலமும் உரையும், பா.162.
69. புறம்.பா.அடி. 63:1,2.
70. மேலது, பா.அடி. 47:6-10.
71. ரா.ருக்மணி, சங்க இலக்கியத்தில் வாழ்வியல் சிந்தனைகள், ப.70.

# இயல் - மூன்று

# புறப்பாடல்களில் தொழில் பதிவும் கொடைப் பதிவும்

சங்கப்புலவர்களின் வாழ்க்கை முறையையும் இயல்பையும் புறப்பாடல்களைக் கொண்டே அறிந்துகொள்ள முடிகிறது. புலவர்கள், பெருவேந்தர்களையும், குறுநில மன்னர்களையும் பாடிப் பரிசில் பெற்று வாழ்க்கை நடத்தினர் என்பது மேலோட்டமாகக் கண்டோர் முடிவாகும். ஆனால், அப்புலவர்களில் பலர் சில தொழில்களை மேற்கொண்டு அவற்றின் நுட்பமான அறிவுடையவர்களாக விளங்கியுள்ளமை ஆழ்ந்து நோக்குவார்க்குப் புலப்படுகின்றது.

மனிதனின் உணவு தேடும் நிலை மாறி உணவினை உற்பத்தி செய்கின்ற தொழில்களில் கவனம் செலுத்தினர் சங்ககால மக்கள் தங்கள் தொழில்களாக வேட்டையாடுதல், மேய்த்தல், உழவு, கவர்தல், வாணிபம் போன்ற தொழில்கள் செய்தனர். மேலும் பிற தொழில்களாக தச்சு, மண்பாண்டம், சலவை, நெசவு, கட்டிடம், இசை, மீன் பிடித்தல், மறையோதுதல் தொழிலுடன் வாணிபமும் சேர்ந்து செய்தனர் என்பதை இவ்வியல் ஆராய்ந்துரைக்கின்றது. மேலும் மன்னன் புலவர் ஆகியோரின் கொடைத் தன்மைகளையும் விளக்கி நிற்கிறது.

## வேட்டையாடுதல்

மலையும் மலைசார்ந்த இடமும் குறிஞ்சி. மலையில் விளையும் மூங்கில் நெல், பலாப்பழம், வள்ளிக்கிழங்கு, தேன் ஆகிய நான்கும் உழவின்றி கிடைக்கும் உணவுப் பொருள்களாகும்.

இவ்வகையான பொருட்கள் நிறைந்த மலை பாரியின் பறம்பு மலையாகும். இதனைக் கபிலர்,

"உழவர் உழாதன நான்கு பயன் உடைத்தே
ஒன்றே சிறியிலை வெதிரின் நெல் விளை யும்மே
இரண்டே தீஞ்சுளைப் பலவின் பழம் ஊழ்க்கும்மே
மூன்றே கொழுங்கொடி வள்ளிக் கிழங்கு வீழ்க்கும்மே
தான்கே அணிநிற ஓரிறி பாய்தலின், மீது அழிந்து
திணி நெருங்குன்றம் தேன்சொரி யும்மே"[1]

என்று பறம்பு மலையின் புகழைப் பாடியுள்ளார். ஆடிப்பாடி மன்னனை மகிழ்வித்த இடத்துப் பாரி மன்னன் வாரி வாரி பரிசில் வழங்குவான் எனக் கூறுவார். இதில் நிலத்தில் விளையும் பொருளைக் குறிப்பிட்டு, உழவின்றி உணவுப்பொருள் திரட்டும் பணியினை அந்நில மக்கள் செய்கின்றனர். மலைப்பகுதியாக இருப்பதால் கிழங்கு தோண்டுதல், தேன் எடுத்தல், பழங்களைப் பறித்தல் ஆகிய இவற்றைத் தவிர வேட்டையாடுதல் நிலையும் காணப்பட்டது. அந்நிலப் பகுதியில் மேற்கொண்ட தொழிலை மட்டுமே மக்கள் செய்து வந்தனர் என்று தம் பாடல்களில் புலவர்கள் பதிவு செய்திருப்பதைக் காணமுடிகிறது.

முல்லையைச் சுற்றியுள்ள அடிவாரப் பகுதியில் எள், திணை, அவரை, வரகு, மூங்கில் நெல், வெண்சிறு குறுகு, இஞ்சிக்கிழங்கு, கவலைக்கிழங்கு, வாழை மா, பலா போன்றவை விளைவிக்கப்பட்டன. அதனை,

"வாலி தின் விரிந்த புன்தொடி முசுண்டை;
நிலத்து அன்ன விதைப்புன மருங்கில்
மகுளி பாயாது மலிதுளி தழாலின்"[2]

மேலும்,

"அரலை உக்கன; நெடுநாள் ஆசினி
விரல் ஊன்று படுகண் ஆகுளி கடுப்ப"[3]

எனக் கூறுவர். மலைமீது திணைப் பயிர்கள் சிறப்பாகப் பயிரிடப்பட்டன. சில கிழங்குப் பயிர்களும் பயிர் செய்யப்பட்டன.

## மேய்த்தல் தொழில்

காடும் காடு சார்ந்த பகுதி முல்லையாகும். இந்நிலத்தில் வாழும் மக்கள் புன்செய் நிலத்தில் வேளாண்மைத் தொழிலை அடிப்படையாகக் கொண்டு வாழந்து வந்தனர். மேலும் கால்நடைப் பொருளாதாரம் வாழ்க்கையின் ஓர் அங்கமாகத் திகழ்ந்தது. ஆடு மாடு மேய்த்தல் தொழிலைச் செய்து வந்தனர். வரகு, திணை, கொள், அவரை போன்றவை மட்டுமே உற்பத்திப் பொருட்களாகக் கிடைத்தன் என்பர்.

''அலஉருந் துப்பின்……குருத்தே முல்லைபெயன்று''[4]

என்று முல்லை நிலத்தினைக் குறிப்பிடுவர். முல்லை நில மக்களை மாங்குடி மருதனார் கூறும்போது,

''கருங்கால் வரகே, இருங்கதிர்த் திணையே
சிறுதொடிக் கொள்ளே! பொறிசினர் அவரை யொரு
இந்நான் கல்லாது உணர்வும் இல்லை''[5]

என்று விளைந்த உணவுப் பொருளைச் சுட்டிக் காட்டுகின்றார். மேலும் அந்நிலத்தில் வாழும் பகைவரைத் தன் இருப்பிடத்தை நெருங்கி வராது தடுத்து நிறுத்துவர். அந்நிகழ்வில் தானும் மடிவர். மடிந்த நிலையில் நடுகல் நட்டு வழிபாடு செய்தனர். இதனை,

''துடியன், பாணன், பறையன், கடம்பன் என்று
இந்நான் கல்லது குடியும் இல்லை
ஒன்னாத் தொவர் முன்னின்று விலங்கி
ஒன்றுவந்து மருப்பின் களிறு எறிந்து வீழ்ந்தெனக்
கல்லே பரவின் அல்லது
நெல் உகுத்துப் பரவும் கடவுளும் இலமே''[6]

என்று பாடுகிறார். துடியன், பாணன், பறையன், கடம்பன் இன மக்கள் மட்டும் வசித்தனர். பகைவரை எதிர்த்துப் போரிட்டனர். போரில் வீரமரணம் அடைந்தவர்களுக்கு நெல்லும் மலரும் தூவி வழிபட்டனர். வீரம் நிறைந்த மக்கள் வாழ்ந்ததாகக் கூறுகின்றார். அஞ்சாத நெஞ்சம் உடையவர்களாகக் காணப்பட்டனர்.

முல்லைநில மக்கள் அறுவடைப் பயிர்களைப் பயிரிட்டனர். அதில், அவரை சிறப்பான பயிராகப் பயிரிடப்பட்டது.

> ''அறல்குழல் பாணி தூங்கிய அவரொடு
>
> வரற்குழச் சூட்டின் வயின்வயின் பெருகுவீர்''[7]

என்று குறிப்பிடுவார். திணை, எள், வரகு முதலியனவும் பயிர் செய்யப்பட்டன. இதனை, மதுரைக்காஞ்சி,

> ''சிறுதிணை கொய்ய, இவ்வகைக் கறுப்ப
>
> கருங்கால் வரகின் இருங்குரல் புலர''[8]

முல்லை நிலத்தில் அறுவடையான பயிர்த்தொழில் செய்தலில் ஆண்களைப் போல் பெண்களும் உயர்ந்து நின்றனர்.

> ''மனை நொச்சி, நிழல் ஆங்கண்
>
> ஈற்று யாமைதன் பார்ப்பு ஓம்பவும்''[9]

என்று பயிர்கள் விளைந்த விதத்தைப் புலவர்கள் இப்பாடலில் குறிப்பிடுகின்றனர்.

## உழவுத்தொழில்

வயலும் வயல் சார்ந்த பகுதியே மருதநிலமாகும். உணவு உற்பத்தியின் அடித்தளமாக இருப்பது உழவுத்தொழில். இத்தொழிலே சிறந்து போற்றப்பட்டது. ஆற்றுப்படை, புறநானூறு, பதிற்றுப்பத்து நூல்கள் இதனைச் சுட்டி நிற்கின்றன. பெரும்பாணாற்றுப்படையில் நாற்று நடுதல், களைஎடுத்தல், நெல் விளைத்தல், கடாவிடுதல் ஆகியவை அந்நில மக்களின் தொழிலாக இருந்தது.

இதனை,

> "குடகாற் றெறிந்த குப்பை வடபாற்
> செம்பொன் மலைபாற் சிறப்பத் தோன்றுந்
> தண்பனை தழீஇய தளரா விருக்கை"[10]

என வயல் வளம் பற்றிக் குறிப்பிடுகின்றது. இதேபோல் மதுரைக் காஞ்சியில், மழைநீரால் வயல் செழுமை பெறும் என்பதனை மழைநீரால் குளம் நிறைந்தது என்றும் அக்குளத்து நீரால் வயல் செழுமையடைந்தது என்பர். இதனை,

> "சிதராற் பெரும் பெயல் திறத்தலிற் நங்காது
> குணகடற் கிவர்தருங் குரூஉப்புன லுந்தி
> நிவந்து செனீத் தங் குளங்கொளச் சாற்றிக்
> களிறு மாய்க்குங் கதிர்க் கழனி"[11]

என்று பாடுகின்றார். வயலின் செழுமையால் உழவுத்தொழில் சிறப்புப் பெற்றுத் திகழ்கின்றது. உணவிற்குப் பஞ்சமில்லாத தன்மையோடு இந்நில மக்கள் மகிழ்ச்சியோடு வாழ்கின்றனர். இதனை,

> "தொல்பசி அறியாத் துளங்கா இருக்கை
> மல்லற் பேரூர்"[12]

என்கிறார். வயல்கள் நிறைந்து காணப்படுவதால் நெல் விளைச்சலும் அதிகம். அதனால் மக்கள் பசியறியாத பண்பினராய் மருதநில மக்கள் வாழ்கின்றனர். தன்னை நாடிவந்தோருக்கு இல்லையெனாது வாரி வழங்கியும், விருந்தோம்பல் செய்யும் தன்மையினராய் உள்ளனர் எனப் புலவர்கள் கூறுவர்.

சோழ மன்னர்கள் ஆற்றங்கரைப் பகுதிகளை உயர்த்தி அணைகளைக் கட்டினர். அதனால் வாய்க்கால்களை உருவாக்கி வயல்வெளிகளுக்கு நீர்ப் பாய்ச்சினர். இதனால் சோழநாடு சோறு உடைத்து என்று பெயர் பெற்றது. அங்கு ஒரு மாநிலத்தில் திடர்தோறும் நெற்கூடுகள் இருந்தன என்றும், ஒரு வேலி நிலத்தில் ஆயிரம் கலம் நெல் விளைந்தது என்றும் கூறுவர்.

"ஏணி ராய்த நீள்நெடு மார்பின்

முகடு துமித்து அடுக்கிய பழம்பல் உணவின்"[13]

என ஆற்றுப்படையில் கூறப்பட்டுள்ளது. இன்றும் தமிழ்நாட்டின் நெற்களஞ்சியமாகத் திகழ்வது சோழநாடே ஆகும்.

உழவுத் தொழிலுக்குப் பெரிய எருதுகளைப் பூட்டி ஏரைக் கொண்டு நிலத்தினை உழுதனர். கலப்பையின் கொடு நிலத்தில் மறைய அமுக்கி உழுதனர் என்று பெரும்பாணாற்றுப்படை உழவினைப் பற்றிப் பேசுகிறது.

"நடைநவில் பெரும்பகடு புரவில் பூட்டி

பிடிவாய் அன்ன மடிவாய் நாஞ்சில்

உடுப்பு முக முழுக் கொழு மூழ்க ஊன்றி

தொடுப்பு எறிந்து உழுத துளர்படு துடவை"[14]

என்று உழுதல் நிலையினைக் குறிப்பிடுகின்றது. செறு, செய் என்று வயல் பெயர் பெற்றிருந்தது என்றும் செந்நெல், தோப்பி நெல், மூங்கில் நெல் என நெல் பல வகைகள் உள்ளன. நெல்வயலின் ஊடே வெற்றிலைக் கொடிகளையும் வளர்த்து வெற்றிலையையும் பயிர் செய்தனர். இதனை,

"நீடு கொடி இலையினர், கோடு சுடு நூற்றினர்,

இழுதலை வந்த பகை முனை கடுப்ப"[15]

என்ற பாடல் வரிகளால் அறியலாம்.

பண்டைக்காலத்தில் வேளாண் மரபினர் உழவர்கள் என அழைக்கப்பட்டனர். இவர்களில்,

"உழுதுண்போர், உழுவித்துண்போர் என இரு பிரிவுகள் உண்டென்பார்"[16] (புறம். 212, 387).

என சாமி சிதம்பரனார் கூறுகிறார். உழவர்களை ஏரின் வாழ்நர், களமர் என புறநானூற்றுப் பாடல்கள் இயம்புகின்றன.

"நுங்கோ யார், என வினவின், எங்கோக்

களமர்க்கு அரித்த விளைவல் வெங்கள்"[17]

எனவும் அழைத்தனர். அவர்களைச் சான்றோர்கள்,

"உழுதுண்பர், நிலக்கிழார்கள் உழுவித்துண்பவராவர்

அவர்களே வேளிர் என அழைக்கப்பட்டிருப்பர்"[18]

எனப் பொதுவாகப் பயிர்த்தொழில் செய்வோரை உழவரென்று அழைத்துள்ளனர்.

"வேளாண் மாந்தர்க்கு உழுதூண் அல்லது

இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி"[19]

எனத் தொல்காப்பியரும் வேளாண் மக்களை எடுத்துரைக்கின்றது. இதனையே திருவள்ளுவர் கூறும் போது,

"உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம்

தொழுதுண்டு பின் செல்பவர்"[20]

என உழவனின் பெருமையை எடுத்துரைப்பார்.

பெரும்பாணாற்றுப்படை (206, 246), மதுரைக்காஞ்சி (246, 270), மலைபடுகடாம் (100-105) போன்ற ஆற்றுப்படை நூல்களிலும் பிற நூலிலும் வேளாண் மரபினரின் தொழிலைப் பற்றி அறிந்து கொள்ள முடிகின்றது. குறிப்பாக மருத நில மக்களின் வாழ்க்கையைப் புலவர்கள் தம் பாடல்களில் பதிவு செய்துள்ளனர்.

சங்கப்புலவர்களில் பலர் வேளாள மரபினர் என ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர். (எ.கா) அரிசில்கிழார் என்ற பெயர் வேளாண் மரபிற்குரிய பெயர் என உ.வே.சா எடுத்துரைப்பார். 'கிழார்' என்ற பெயருடைய அனைவருமே வேளாண் மரபினைச் சார்ந்தவர்கள் என்று குறிப்பிடுகின்றார்.

மேலும் குறுங்கோழியூர் கிழார், கூடலூர் கிழார், குன்றூர்கிழார் மகனார், கோவூர்கிழார், பெருங்குன்றூர்கிழார் போன்றோர் வேளாண் மரபினைச் சார்ந்தவர்களாகக் கருதப்படுகின்றனர். ஒரு நாட்டின் வளமும், மன்னனின் புகழும் உழவர்களால் ஏற்படுகின்றது என்பதனை,

''பொருபடை தரூஉங் கொற்றமும் உழுபடை

ஊன்றுசால் மருங்கினீன்றதன் பயனே''[21]

என்று வெள்ளைக்குடி நாகனாரின் பாடல் வரிகள் குறிப்பிடுகின்றன. புறநானூற்றுப் புலவர்கள் அக்கருத்துக்கு முன்னோடியாக விளங்குகின்றனர்.

''நீரின் றியமையா யாக்கைக் கெல்லாம்

உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே''[22]

என்னும் குடபுலவியனாரின் இப்பாடலடிகள் நீர் நிலைகளைப் பெருக்குவதன் இன்றியமையாமையை வற்புறுத்துகின்றது. மேலும்,

''மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்

காவலர்ப் பழிக்கும் இக்கண்ணகல் ஞாலம்''[23]

என உழவர்களைப் பேணும் கடமையாக மன்னனுக்கு வலியுறுத்துகின்றார். உழவுத் தொழில் சார்ந்த குறிப்புகளைத் தரும் புலவர்கள் நெல்லை அளக்கும் கருவிகளாக அம்பணம், நாழியை (புறம்.189) எனக் குறிப்பிடுகின்றனர். இதனைத் தொல்காப்பியர் 'பதக்கு' (எழுத்து.289) என்று குறிப்பிடுவார். நில அளவையாக உழவர்களும் வறுமையுடையோராக இருந்துள்ளனர். இதனை, வெள்ளைக்குடி நாகனார் என்னும் புலவர் கூறுமிடத்து,

''உழுதும் உழுவித்தும் தொழில் மேற்கொண்டிருக்கிறார். அப்பொழுது நிலத்திற்குச் செலுத்த வேண்டிய வரிப்பணம் கொடுக்க முடியாத சூழலில் கிள்ளிவளவன் என்னும் அரசன் வரியைத் தள்ளுபடி செய்திருக்கின்றான். இதனைப் பழஞ்செய்க்கடன் வீடு கொண்டனரெனக் காணப்படும் என்ற குறிப்பின் மூலம் அறியலாம்''[22] எனப் பூவராகவம்பிள்ளை தம் ஆய்வில் உரைத்துள்ளார்.

புலவரின் மீதுள்ள இரக்கம் என்பதைத் தாண்டி அவர்களது புலமை மீதும், அறிவு நுட்பத்தின் மீதும் மன்னர்கள் நற்மதிப்பு வைத்திருந்தினர்.

இவர்களைப் போலவே திருவள்ளுவர் தனி அதிகாரம் படைத்துப் போற்றியுள்ளார். உழவர்கள் இல்லையெனில் துறவிக்கும் நிலையில்லை. உலக உயிர்களின் நிலைப்பாட்டிற்கு உழவரின் உழைப்பே அடிப்படை என்றும் பயிர்த்தொழில் நுட்பங்களையும், பயிரை வளர்க்கும் முறையையும் நீர்ப் பாய்ச்சுதல், களையெடுத்தல், எருவாடல் மற்றும் நாள்தோறும் உழவன் நிலத்தைக் கண்காணிக்க வேண்டும் என்றும் அவ்வாறு இல்லையேல் நிலம் வளம் குன்றிப்போகும் எனக் கூறுவர்.

உழவுத் தொழில் நாட்டின் உயிர்த் தொழில் என்றும், உழவன் என்பவன் நாட்டிற்கு உன்னதமானவன் எனவும் மக்களுக்கும், மன்னனுக்கும் புலவர்கள் பதிவு செய்துள்ளனர்.

### வாணிபத் தொழில்

கடலும் கடல் சார்ந்த பகுதியும் நெய்தல் நிலமாகும். இந்நில மக்கள் தங்களின் வாழ்வாதாரமாகக் கடலையும் கடல் சார்ந்த வாணிபத்தையுமே நம்பியிருந்தனர். நெல் விளைவிக்கப் படவில்லையாயினும், உழவிற்குப் பயன்படும் காளைமாடு, ஆடுகள், நாய்கள் போன்றவற்றை இல்லத்தில் வளர்த்தனர். இந்நில மக்களைப் ‘பரதவர்கள்’ என்று அழைத்தனர். மேலும் மாடமாளிகைகளில் வசித்தனர். மிக நீண்ட தெருக்கள், நல்ல வளமிக்க மாந்தர்களாகவும் வாழ்ந்தனர்.

இந்நிலமானது குதிரைகளையும், பொருட்களை ஏற்றிச்செல்லும் கப்பல்களையும், தொழில் செய்வோரால் காக்கப்படும் பண்டக சாலைகளையும் உடையதாக இருந்தது. மேலும் இம்மக்கள் வாணிபம் செய்பவர்களாகக் காணப்பட்டனர். கடல் கடந்து சென்று தொழில் புரிந்தனர். இதனால் ஈட்டிய பொருளைக் கொண்டு மிக்க வசதிகளோடு வாழ்ந்தனர். இதனை,

“கடல் படை அடல் கொண்டி
மண்குற்ற மலிர் கோன்றாள்
தன் சோழ நாட்டு பொருநன்”[24]

என்று, கடல் வழியில் பெற்ற பொருள்கள் நிரம்பப் பெற்றவன் என்றும், வலிமை மிக்க குதிரைகளை உடையவன் என்றும் உரைப்பார். பசியறியாது வாழும் மக்களாய் இருந்தனர். இதனால் அவர்களை நாடி வந்தோருக்கு அறுசுவை உணவினை விருந்தாக அளித்தனர். மேலும் பரிசில் பொருட்களையும் வாரி வழங்கினர். இதனை,

"நெய் குய்ய ஊன் நவின்ற
பல் சோற்றான் இன் சுவைய
நல்குரவின் பசித் துன்பின்"[25]

என்பார். இம்மக்கள் தன்னலம் மட்டும் கருதாது பிறர் நலம் பேணும் கருத்து உடையவராய்த் திகழ்ந்தனர். வாணிபத்தில் உண்மையையும் நேர்மையையும் கடைபிடித்தவர்களாய்க் காணப்பட்டனர். தான் ஈட்டிய செல்வத்தை மன்னன் மட்டுமல்லாது மக்களும் பிறருக்கு அளித்து மகிழ்ந்தனர் என்று புலவர்கள் தம் பாடலில் பதிவு செய்துள்ளனர். சங்ககால மக்கள் உற்பத்திப் பொருள்கள் மீது அதிக நாட்டமுடையவர்களாகத் தென்பட்டனர். மனித குலத்திற்கு அது முன்னேற்றம் அளிப்பதாக எண்ணினான். எனவே உற்பத்திக்கு ஏற்றவாறு பொருளாதார ஏற்றத்தாழ்வுகளும் காணப்பட்டன. அரசு உருவாக்கம் நிகழ்ந்த காலத்தில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் போன்ற நான்கு நிலப்பகுதிகளும் அரசுடைமை ஆக்கப்பட்டன என்பதனை ஆற்றுப்படை நூல்கள் தெரிவிக்கின்றன.

"தேனெய் யொடு கிழங்கு மாறியோர்
மீனெய் யொடு நறவு மறுகவுந்
தீங்கரும் போடவல் வகுத்தோர்
மான் குறையொடு மது மறுகவுங்
குறிஞ்சி பரதவர் பாட நெய்த
லறும் பூங்கண்ணி குறவர் சூடக்
கானவர் மருதம் பாட வடுவர்
.....மண்மருங்கினான் மறுவின்றி
பொருளுடையா னொன்று கூறப்
பெரிதாண்ட பெருங் கேண்மை"[26]

என்று அரசில் நானிலம் இணைந்த செய்தியை எடுத்துரைக்கின்றது.

எனவே சங்ககால மக்கள் தாங்கள் வாழும் இடத்திற்கு ஏற்பத் தொழில் செய்துள்ளனர். இவர்களுள் தச்சர் மண்பாண்டத் தொழில் செய்வோர், சலவைத் தொழிலாளி, பாணர், பறையர், துடியர், ஆயர், பரதவர், உழவர், பார்ப்பணர் போன்றோரின் தொழில் அறிவினைப் புலவர்கள் தம் பாடல்களில் பதிவு செய்துள்ளனர் என்பதை அறிய முடிகின்றது.

## கவர்தல் தொழில்

பாலை நில மக்கள் பிற நிலங்களிலுள்ள ஆநிரைகளைக் கவர்தல், வழிப்பறி செய்தல் ஆகிய தொழில்களைச் செய்தனர். முல்லை நிலப் பகுதியில் விளைந்த சாமை, வரகு முதலியவற்றை விற்றனர். மேலும் அதனை விதைத்தல் தொழிலையும் மேற்கொண்டனர். கால்நடைகளை மேய்த்தல், பால், தயிர், மோர், நெய், வெண்ணெய் இவற்றை விற்கும் தொழிலினையும் செய்தனர்.

மணலும் மணல் சார்ந்த பகுதியாக அமைந்த காரணத்தினால் பிற நிலத்தைச் சார்ந்தே வாழ்க்கையை நடத்தினர். பாலை நில மக்களை வழிப்பறி செய்பவர்களாகவே புலவர்கள் சுட்டுவர். கடைநிலை வாழ்க்கையையே இவர்கள் வாழ்ந்தனர். இதனை,

> ‘‘முல்லையும் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து
> நல்லியல் பிழந்து நடுங்கு துயர் உறுத்துப்
> பாலை யென்பதோர் வடிவம் கொள்ளும்’’[27]

ஆதலால் பாலை நிலம் பெரும்பாலும் குறிஞ்சிக்கும் முல்லைக்கும் இடையில் அமைந்திருக்கும். அங்கு வெப்பம் மிகுதி. நன்னீர் கிடைத்தல் அரிது. விளைவு இல்லாததால் பாலை நில மக்கள் வேட்டையாடுதல் தொழிலினைச் செய்தனர். பாலை நில விலங்குகள், பறவைகள் ஆகியவற்றை வேட்டையாடினர்.

அவர்தம் இல்லங்கள் குடில்களாகவே காணப்பட்டது. அந்த இல்லங்களில் வசிப்போர் வெயிற்காலங்களில் பெரும் துன்பத்திற்கு ஆட்பட்டனர்.

இதனை,

> "உறுவெயிற்கு உலைஇய உறுப்பு அவிர் குறம்பை
>
> எயிற்றியர்......."[28]

என்றனர். அவர்களது குடிலானது கூர்மையான ஈர்க்கு இலையினால் வேயப்பட்டது. அக்குடில்களில் மான் தோலையே படுக்கையாகக் கொண்டு பிள்ளையைப் பெற்றதாகப் புலவர்கள் கூறுவர். அதனை எயின மகளிர் மான் தோளில் பிள்ளைகளைப் பெற்று முடங்கிக் கிடந்தனர் என்ற கூற்றின் மூலமாக அறியலாம்.

> "மான் தோல் பள்ளி மகவோடு முடங்கி
>
> ஈன் பிணவு ஒழியப் போகி, நோன் காழ்"[29]

எனப் பெரும்பாணாற்றுப்படைப் புலப்படுத்துகிறது. இம்மக்களை எயினர்கள் என அழைத்தனர். மேலும் தனது உணவாகப் புலலரிசியினை உட்கொண்டனர். அது யாதெனில், எறும்புப் புற்றைப் பாறையால் குத்திக் கிளறி ஆண்டு முழுவதும் எறும்பு சேர்த்து வைத்த புல்லரிசியை வாரிக் கொண்டு வந்து சமைத்து உண்பர்.

புல்லரிசி உண்ணல் அவர்களது வழக்கமாக இருந்தது. அது கிடைத்தவுடன் மகிழ்ச்சியால் முகம் மலர்ந்து நிற்பர். அவர்கள் 'வெண்பல் எயிற்றியர்' என்னும் தொடரால் அழைக்கப்பட்டனர்.

## பிற தொழில்கள்

### தச்சுத் தொழில்

சங்ககாலத்தில் வாழ்ந்த உழவர் பெருமக்களைப் போன்று தச்சுத் தொழில் புரிவோர் மக்களுக்கும் அரசனுக்கும் வேண்டிய இல்லறப் பொருள்களான மர தளவாடங்கள், வண்டிகள் மற்றும் தேர்கள் முதலியவற்றைச் செய்து கொடுத்துள்ளனர். நால்வகைப் படைகளில் தேர்ப்படையும் ஒன்றாக இருந்ததால் தேர் செய்வதே தலையாயக் கடமையாக இருந்தது.

படைக்கருவிகளில் வேல் முக்கியமான கருவியாகக் கொள்ளப்பட்டது. இதனைப் பொன்முடியார் ‘‘வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே’’ என்ற பாடல் அடி மூலம் அறியலாம். வேல் வடித்தல், தேர் செய்தல் போன்ற அரசுடைமைச் சாமான்களைப் புனைவதால் மன்னர்களுக்கும் தச்சர்களுக்கும் இடையேயான உறவு ஆனது சிறந்த முறையில் இருந்ததாக உரைப்பர்.

பத்துப்பாட்டில் கைத்தொழில் வல்லத் தச்சனால் இடைவெளி தோன்றாமல், பல மரங்களைச் சேர்த்து முடுக்கி, மதிலின் வாயில் உருவாக்கப்படும் அவ்வாயில் நிலை நெய் பூசப்பட்டு, வெண்சிறு கடுகினால் தூவப்பெற்ற அழகுடையதாகும். அரசனின் வெற்றியைக் குறிக்கும் வண்ணம் அரண்மனை நுழைவுவாயிலின் கதவுகளில் பூசப்பட்டது. கதவுகள் உயரமாகவும், அகலமாகவும் யானைகள் நுழைவதற்கு ஏற்றவாறு அமைக்கப்பட்டது. இதனை,

‘‘தொல் வலி நிலைஇய அணங்குடை நெடுநிலை
நெய்படக் கரிந்த திண்போர்க் கதவின்’’[30]

என்கிறது மதுரைக்காஞ்சி. மேலும்,

‘‘படைப்புப்பல படைத்தல் பலரோடும் உண்ணும்
உடைப்பெருஞ் செல்வ ராயினும் மெல்ல
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்
நெய்யுடை அடிசில் மெய்ப்பட விதிர்ந்தும்’’[31]

எனப் பாண்டியன் அறிவுடைய நம்பி பாடுவதுபோல் சிறுதேர் உருட்டி தளர் நடையிட்ட வரும் உழவர்தம் சிறார் அத்தளர்நடை வருத்தம் அகலச் செவிலியரிடம் பால் அருந்தித் துயில் கொள்ளும் நிலையினைச் சுட்டித் தச்சுச் சிறார் நாளும் தேர் பல கண்டு வெறுத்த நிலையில், தன் சிறார்களுக்கு விரும்பும்படி பேரழகு உடைய தேர் வண்டியைச் செய்தனர்.

இதனை,

"தச்சு சிறாஅர் நச்சப்புனைந்த தேர்"[32]

என்ற அடிகளால் உணரலாம்.

தச்சர்கள் சிற்ப நூலின் சாத்திரம் பிறழாமல் இலக்கணப்படி நாள், நாழிகை ஆகியவைகளைப் பார்த்து மனைகளையும், கோல்களையும் அமைத்தனர் எனப் பத்துப்பாட்டு நூல் இயம்புகின்றது. இதனை,

"நூல்வழி பிழையா ஊர்"[33]

"நூலிற் சொன்னபடி சமைத்த ஊர் என்னும் ஆம்"[34]

என நச்சினார்க்கினியர் உரை எழுதியுள்ளதையும் காணமுடிகின்றது.

"தேர், பாண்டில், உளி (சிறுபா.அடி.52) (25-260), உலக்கை (பெ.ஆ.படை:அடி.97) நுகம், அச்சு, பார், உருளை (பெ.ஆ.படை: அடி.63-66) என்னும் பெயர்கள் அக்காலத் தச்சுத் தொழிலை நினைவூட்டுகின்றன. தச்சர் என்பார் 'கருந்தொழில் வினைஞர்' என்று குறிப்பிடுவர் (சிறு.ஆ.படை:அடி.257).

'உழுகெழு குயம் (அரிவாள் - பொ.ஆ.படை:அடி.29), கத்திரிகை (யானையை அடக்கும் தோட்டி – திரு.மு.அடி.78), தோல், துருத்தி (பெ.ஆ.படை: அடி. 206-207), இரும்புத்தகடு (பெ.ஆ.படை: 222), சுவைமுட்கருவி, மத்திகை (சம்மட்டி – முல்லைப்பாட்டு, 35, 59), நிலம் அகழும் உளி, வனைவுகத்தி, தொடலை வாள் (மதுரைக்காஞ்சி, அடி. 635, 636, 637) என்னும் கருவிகளின் பெயர்கள் கொல்லர்களின் தொழில் நன்கு நடைபெற்றதைத் தெரிவிக்கின்றன."[26] இதனைத் தவிர போர்க்கருவிகளாக உள்ள வாள், வேல்,ஈட்டி, சூலம் முதலியன கொல்லனால் உருவாக்கப்பட்டனவாகும். இதுபோன்று அம்மி, குழவி, திரிகை ((பெ.ஆ.படை: அடி. 229) என்பவை கல் தச்சனை நினைவூட்டுகின்றது என்பர் சான்றோர்.

## மண்பாண்டத் தொழில்

பண்டைக்காலத்தில் மண்ணால் செய்யப்பட்ட பொருள்களையே அதிகமாக உபயோகப்படுத்தினர். பெயர் தெரியாத சங்கப்புலவரின் பாடல் ஒன்றில் பாண்டங்கள் செய்வதற்குப் பயன்படும் கருவியை 'அச்சுடைக் காட்டும் அறம்' (புறம். 256) என்ற பெயர் கொண்டு அழைத்தனர் என்று சுட்டுகின்றனர். ஈர மண்பாண்டங்களைச் சூளையில் இட்டு சுருட்டி அதனைப் பயன்படுத்தினர். இதனை,

> "இருள் திணிந்தன்ன குரூஉத்திரள் பரூஉம் புகை
>
> அகலிரு விசும்பின் ஊன்றுஞ் சூளை"[35]

எனும் பாடலடிகள் வாயிலாக கலம் செய்யக் கூடியவனைக் குயவன் என்று பெயர் கொண்டு அழைத்தனர். மண் கொண்டு பல்வேறு பாண்டங்களைச் செய்தனர். மிக நேர்த்தியான முறையில் செய்தனர் என்பதனை,

> "கலஞ் செய் கோவே! கலஞ்செய் கோவே!
>
> …..தேவர் உலகம் எய்தினன்; ஆதலின்
>
> அன்னோற் கவிக்கும் கண்ணகன் தாழி;
>
> வனைதல் வேட்டனை ஆயின்!"[36]

எனச் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் விண்ணுலகம் அடைந்தபொழுது அவனது பூத உடலை வைப்பதற்கு மிகப்பெரிய தாழியைச் செய்யச் சொன்னதாகப் பாடலடிகள் குறிப்பிடுகின்றன. இத்தாழியைக் கடவுளுக்கே செய்யும் மண்பாண்டமாக நினைத்து குயவன் நேர்த்தியாகச் செய்தான் எனப் புலவர் பாடுகின்றார். அவ்வாறு செய்யப்பட்ட தாழியானது சுடப்பட்டு செந்நிறமாகக் காட்சியளித்தது. அதனை,

> "கவி செய்த தாழிக் குவிபுறத் திருந்த
>
> செவி செஞ் சேவலும் பொகுவலும் வெரிஇ"[37]

என்று கூறுகின்றார். அத்தாழியினை அகலமாகவும் செய்யவும் வேண்டுவர். பாடியவர் பெயர் தெரியவில்லை. அதனால் இது பொதுவியல் திணையில் கூறப்பட்டுள்ளது.

“கலம் செய் கோவே! குலம் செய் கோவே

…………………………………………

வியன்மலர் அகன்பொழில் ஈமத் தாழி

நனந்தலை மூதூர்க் கலம் செய் கோவே”[38]

என்னும் பாடலில் அவனுக்கு செய்யும் ஈமத் தாழியைச் சற்று அகலமாகச் செய்வாயாக எனக்கும் அதனுள் இருக்க இடம் வேண்டுமென்றோ? என்று மன்னன் மீது கொண்ட நட்பினையும் பற்றினையும் இப்பாடல் வழியாக அறியலாம்.

மண்பாண்டத் தொழில் நுட்பத்தினை பற்றிய அறிவினைச் சங்கப்புலவர்கள் அறிந்திருந்தமையைக் காண முடிகிறது. குழிசி (பானை) அடுப்பு (பெ.படை: அடி. 99) எனும் பெயர்கள் கொண்ட மண்பாண்டங்களைச் செய்தனர் என்பதனை ஆற்றுப்படையில் பதிவு செய்துள்ளனர்.

## சலவைத் தொழில்

ஆடைகளைத் தூய்மை செய்யும் தொழில் செய்பவரை வண்ணார் அல்லது சலவைத் தொழிலாளி என அழைத்தனர். வண்ணாருக்குக் ‘காழியர்’ என்ற பெயருமுண்டு. இவர்கள் களர் நிலத்தில் ஊற்றுக் கிணறுகளைத் தோண்டித் துணிகளைத் தூய்மை செய்தனர்.

“களர்ப்படு கூவல் தோண்டி நாளும்

புலைத்தி கழீஇய தூ வெள்ளறுவை”[39]

என உவர் நிலத்திலே கிணறு தோண்டி தினமும் புலைத்தி துவைத்துத் தருகின்ற வெண்ணிற ஆடையானது வெண்ணிறமான மலரைப் போன்றதாக இருந்தது என்பர். அத்தகைய ஆடையை உடுத்துவதால் மன்றத்தில் மிடுக்கான தோற்றத்துடன் மன்னன் திகழ்ந்தான்.

இவர்கள் மன்னனது துணிகளை மட்டுமல்லாது மக்களின் துணிகளையும் சலவை செய்பவனாகத் திகழ்ந்தனர். கூடாரத் துணிகளையும் முரட்டுத் துணிகளையும் வெளுத்தான் வண்ணான் என்று புலவர் சுட்டிக்காட்டுவர். உயர்வு தாழ்வு கருதாது புலவர் பண்புத் திறத்தால் பொருளாதார நிலையில் வறுமையில் நின்ற கடைநிலை மனிதனாகக் கருதப்பட்டான். தன்க்கு ஊதியமாக உணவுப் பொருள்களைப் பெற்றான் என்றும் கூறுவர். நாட்டு மக்களின் துணிகளில் உள்ள அழுக்கினைப் போக்கும் சலவைத் தொழிலாளியின் வாழ்க்கை அழுக்கேறியதாகவே இருந்தது என்பர் சான்றோர்கள்.

## நெசவுத் தொழில்

பழந்தமிழ் நாட்டில் நூல் நூற்றலும் ஆடை நெய்தலும் மிக முக்கியமானத் தொழிலாகக் கருதப்பட்டது. இதனை,

> ‘‘ஒண்பொறிச் சேவல் எருப்ப, ஏற்று எழுந்து
>
> ……………………………………………
>
> தேம்பாய் உள்ள தங்கமழ் மடருணுப்
>
> பாம்புரி அன்ன வடிவான காம்பின்
>
> கழைபடு சொலியின் இழையணி வார’’[40]

எனப் பரிசில் பெறச் சென்ற பாணன், அந்நகர மக்கள் மிகுந்த வேலைப்பாடு உள்ள ஆடைகளை அணிந்திருந்தனர் என்பதை மிக அழகாக நப்பசலையார் சுட்டிக்காட்டுகின்றார்.

அவ்வாடையானது பாம்பின் தோல் போன்றும், மூங்கில் உள்ளே உள்ள மெல்லிய தோல் போன்றும் மிக நுண்மையானதாகவும் பூ வேலைப்பாடுடையதாகவும் உள்ள ஆடையினைச் செய்தனர்.

நூல் நூற்கும் தொழிலைப் பெண்கள் மட்டும் செய்தனர். அதனால் அவர்களை ‘நூற்பெண்டிர்’ என்றும் ‘பருத்திப் பெண்டிர்’ என்றும் அழைத்தனர்.

> ‘‘பருத்திப் பெண்டிர் பனுவல் அன்ன
>
> நெருப்புச்சினம் தணிந்த நினத் தயங்கு’’[41]

என்ற பாடல் மூலம் அறியலாம்.

அக்கால மக்கள் பருத்தி ஆடைகளை அணிந்தனர். சங்கப்புலவர்கள் இத்தொழிலின் நுட்பத்தை அறிந்திருந்தனர். உழவிற்கு அடுத்தபடியாக இத்தொழிலை மக்கள் அதிகமாக மேற்கொண்டனர் என்பதைப் பாடல் வழி அறியலாம்.

''பருத்திப் பெண்டிர் சிறு தீ விளக்கத்து''[42]

''ஆளில் பெண்டிர் தாளீர் செய்த
துணங்கு நுண் பனுவல் போலக் கணங்கொள்''[43]

''கோடைப்பருத்தி வீடு நிறை பெய்த மூடைப் பிண்டம்
மிடை நிறைந்தன்ன வெண் நிண மூரி அருள''[44]

''உழவு ஒழி பெரும பகடு அழி தின்றாங்கு''[45]

மேற்கண்ட வரிகள் அனைத்தும் நூல் நூற்பது பற்றியும், பருத்தி ஆடையினைப் பற்றியும் விரித்து நிற்கின்றது. தனது பொருளாதார வளர்ச்சிக்கு இத்தொழிலை மேற்கொண்டனர் எனப் புலவர்கள் சுட்டிக் காட்டுகின்றனர்.

சங்ககால மக்கள் என்னென்ன உடைகள் அணிந்திருந்தார்கள் என்பதைத் திட்டவட்டமாக அறிய இயலவில்லை ஆயினும் பத்துப்பாட்டில் அக்கால மக்கள் பயன்படுத்திய பலவகை உடைகளின் பெயர்கள் காணப்படுகின்றன.

நெய்தல் மகளிர் – தழைகள், தளிர்கள், மலர்கள் இவற்றாலாகிய ஆடைகளை உடுத்தினர். (திரு.முருகு. அடி:201-203).

''பூந்துகில் மரீஇய அவர்நூல் கலிங்கம்''[46]

என்ற பாடலடியில் துகில், கலிங்கம் என்ற பெயர் கொண்ட ஆடைகளை உடுத்தினர் என அறிய முடிகின்றது.

மிக உயர்ந்த ஆடைகளை மன்னன் அணிந்தான் என்றும் மிகுந்த வேலைப்பாடு உடையதாக அவ்வாடையை நெய்தனர். இதனை,

"நோக்கு துழை கல்லா ஒண்மைய பூக்கனிந்(து)
ஆர வுரியன்ன அறுவை"[47]

கரிகாலன் தன்னைப் பாடி வந்த பொருநர்க்கு நுட்பமான வேலைப்பாடுள்ள ஆடைகளைப் பரிசாக அளித்தான் எனப் புலவர் சுட்டிக்காட்டுகின்றார்.

"வெயிற்கதிர் மழுங்கிய படர்கூர் ஞாயிற்றுச்
செக்க ரன்ன சிவந்து நுணங்குருவிற்
கண்பொரு புகுஉம் உண்பூங் கலிங்கம்
பொன்புனை வாளொடு பொலியக் கட்டி"[48]

என மதுரைக் காஞ்சியில் செல்வந்தர் மிகுந்த வேலைப்பாடும் செக்கச் சிவந்த ஆடைகளையும் விரும்பி உடுத்தினர். இத்தகைய வேலைப்பாடுகள் கண்களை மயங்குவிப்பதாக இருந்தது என்று புலவர் சுட்டிக்காட்டுகின்றார். நிலத்திற்கு ஏற்றவாறும், மக்களுக்கு ஏற்றவாறும் ஆடைகளை நெய்தனர். ஆடைகள் மக்களின் ஏற்றத்தாழ்வுகளை வெளிப்படுத்துவதாகவும் இருந்தது என்பதையும் நம்மால் அறிய முடிகின்றது.

## கட்டிடத் தொழில்

கட்டிடத் தொழில் சிறப்புற்று விளங்கியது. மாட மாளிகைகளையும், கோபுரங்களையும் நுட்ப வேலைப்பாடுடன் செய்தனர். ஒப்பனைகளை நேர்த்தியாகச் செய்தனர். அரண்மனைகள் வானளாவ உயர்ந்த நிலையில் அமைக்கப்பட்டது. வேத சாஸ்திரங்களோடு அமைக்கப்பட்டது.

சங்ககாலத் தமிழரின் கட்டிடக் கலையறிவை உணர்த்துவனவாகும். நகரைச் சூழ்ந்திருந்த கோட்டைச் சுவரின் அமைப்பும் அகழியின் அமைப்பும் அவர்தம் கட்டிடக் கலையறிவை வெளிப்படுத்தும் கட்டிடம் கட்டுவது உலோகங்களும் பயன்படுத்தப்பட்டன என்றும் அவை இரும்பு, செம்பு, பொன், வெள்ளி ஆகிய நான்கினையும் பயன்படுத்தினர்.

மதுரைக்காஞ்சியில்,

“மண்உற ஆழ்ந்த திண்யோர்க் கதவின்
மழை ஆடும் மலையின் நிவந்த மாடமொடு”[49]

என மதுரைக் கோட்டையின் மதில் சுவர்கள் வலிமையுடையதாக தெய்வ உருவங்கள் பொறிக்கப்பட்டு. வாயிலின் மதில் சுவர்கள் மலையென உயர்ந்ததாக அமைக்கப்பட்டது என்பர். ஆவூர்கிழார் என்ற காரியாதி மன்னன் அரண்மனைச் சுட்டும் போது,

“திங்களும் நுழையா எந்திரப் படுவுழைக்
கள்மாறு நீட்ட நண்நனி”[50]

எனக் கூறுவார். திங்களும் நுழையமுடியாத மிக உயர்ந்ததாக அரண்மனைக் காணப்பட்டது என்பார். மேலும் அவைகள் வெண்சுதை மண்ணால் புனையப்பட்டது என்பதையும் புலவர்கள் அறிந்திருந்தனர். அதனை,

“புதுப்பறையன்ன கதைசெய் மாடத்துப்
பனிக்கயத் தன்ன நீள்நகர் நின்று”[51]

என்பது சோழனின் பெருநகரில் வெண்சுதை மாடங்கள் நிறைந்த வேலைப்பாடுடன் காணப்படுகின்றன. அக்காலக் கட்டிடக் கலைஞர்கள் அரண்மனை, கோவில் கோபுரங்கள் ஆகியவற்றை அழகிய வேலைப்பாடுகளுடன் அமைத்தனர். இவர்களுடன் சிற்பக்கலைஞர், ஓவியக்கலைஞர், தச்சர் போன்றோர் இணைந்து சிறந்த கட்டிடங்களை அமைத்தனர். நெடுநல்வாடையில் இவர்களைப் பற்றிய செய்திகள் அதிகமாகக் காணக்கிடக்கின்றன. இவர்கள் அனைவரும் அரசுடைமைவாதிகளாகக் காணப்பட்டனர். மன்னனுடன் உறவு கொண்டவர்களாகவும் திகழ்ந்தனர் எனப் புலவர்கள் சுட்டுவர்.

## இசைத் தொழில்

இவர்கள் அனைவரும் புலையரென்று அழைக்கப்பட்டனர். மாங்குடி மருதனார் இவர்களைக் கூறுமிடத்து மிகப் பழமையான குடிகளையுடையவர்களாக இருந்திருக்க வேண்டும் என்பார்.

“துடியன், பாணன், பறையன், கடம்பன் என்று

இந்நான் கல்லது குடியும் இல்லை”[52]

இவர்கள் பறை, துடி, தண்ணுமை போன்ற இசைக்கருவிகளை வாசித்ததனால் இப்பெயரினைப் பெற்றிருக்கலாம் என்லாம். புறநானூற்றில் இவர்களைப் பற்றி அதிகமாகவே பேசப்பட்டது.

“வறுமையும் இவர்களும் உடனசேர்ந்தே பேசப்படுவதால்

ஆற்றுப்படை யென்றொரு பாடல்வகை தோன்றுவதற்கு

இவர்களின் வாழ்க்கை முறையே காரணமென”[53]

என்று அ.தட்சணாமூர்த்தி குறிப்பிடுவார். மேலும் புறவாழ்வை விட அகவாழ்வில் இவர்களது பண்புகள் ஓரளவு வெளிப்படுகின்றன. தொல்காப்பியர் வாயில்களாகக் கூறிய பன்னிருவரில் பாணனையும் (கற்பியல்.52) குறிப்பிடுகிறார். எனவே அகவாழ்க்கையில் தலை மக்களுக்குத் தூதுவர்களாக விளங்கினர் எனலாம். இவர்கள் சமூகத்தில் கடைநிலையிலேயே இருந்துள்ளனர்.

“கேட்டியோ வாதி பாண்பாசறைப்

பூக்கோள் இன்றையன யுறையும்

மடிவாய்த் தண்ணுமை இழிசினன் குரலே”[54]

என்றும்,

“இழிபிறப்பாளன் கருங்கை சிவப்ப

வலிதுரந்து கிலைக்கும் வன்கண் கடுந்துடி”[55]

என்றும் பாடியுள்ளார். மேலும் அவர்களின் நிலையினைக் குறிப்பிடும் போது,

“துடியெறியும் புலைய

எறிகோல் கொள்ளும் இழிசின்”[56]

என்று குறிப்பிடுகின்றார். இடுகாட்டுக் கிரியைகளைப் புலையர்கள் தான் செய்தனர் என்ற செய்தியினை,

"கள்ளி போகிய களரிய மருங்கின்

வெள்ளி னிறுத்த பின்றைக் கள்ளொடு

புல்லங் திட்ட சில்லவழ் வல்கி

புலைய னேவப் புல்மேல் அமர்ந்துண்டு"[57]

என்று புலவர்கள் அவர்களது பணிகளைச் சுட்டிக்காட்டுகின்றனர். இவர்களது வாழ்க்கையானது கடைநிலையிலேயே இருந்தது என்கின்றனர்.

## மீனவத் தொழில்

நெய்தல் நில மக்கள் ஓடம், மிதவை, படகு முதலியவற்றை அமைத்தல் தொழிலைச் செய்தனர். அதன் மூலமாக மீன்பிடித்தல், உப்பு விற்றல் முதலிய தொழில்களையம் செய்தனர். உப்பு விற்பவர்களை 'அளவர்' என அழைத்தனர். இதனை மதுரைக்காஞ்சி,

"நிரை திமில் வேட்டுவர் கரைசேர் கம்பலை

இருங்கழிச் செறுவன் வெண் உப்புப் பகர்தரொடு"[58]

என்று குறிப்பிடுவார். கடல் சார்ந்து வாழ்ந்த மக்களால் இவ்வகைத் தொழில் செய்யப்பட்டது. நகர்ப்புறம் வந்து மீன், உப்பு, உப்பிட்ட மீன்கள் முதலியவற்றை விற்கும் தொழிலை மேற்கொண்டனர். இதனால் ஈட்டப்பட்டப் பொருளால் அமைந்த வாழ்க்கையாக இருந்தது. பொருளாதாரத்தில் வறுமை குன்றியவர்களாகவே தென்பட்டனர் என்று புலவர்கள் கூறுவர். மேலும்,

"நெல் அரியும், இருந்தொழுவர்

செஞ்ஞாயிற்று வெயில் முனையின்

தெண்கடல் திரைமிசைப் பாய்ந்து

திண் திமில் வன் பரதவர்"[59]

என்று மாங்குடி மருதனார் குறிப்பிடுகின்றார்.

குறிஞ்சி, முல்லை நில மக்களிடமிருந்து வேறுபட்டவர்களாகக் காணப்பட்டனர். மருதநில மக்கள் வயலில் கண்ட கயல் மீனை உண்டனர். அதனை விடுத்து முள்ளிப்பூ சூடிய பரதவர்கள் கடல் அலைமேல் ஆடியும் பாடியும் மகிழ்ந்தனர். கடல் மீனை பிறருக்கு விற்கும் தொழிலைச் செய்தனர். இதனால் மட்டுமே வருவாய் ஈட்டினர். இவர்களது வாழ்க்கையானது வீரம் நிறைந்ததாக உள்ளது என்றும் மன வலிமையும் உடல் வலிமையும் பெற்றவராய் இருபாலரும் திகழ்ந்தனர் எனப் புலவர்கள் சுட்டிக்காட்டுகின்றனர்.

**மறை ஓதுதல்**

புறநானூற்றுப் புலவர்கள் மக்களோடு இயைந்து வாழும் வாழ்க்கையை மேற்கொண்டனர். அதனால் சமூகத்தின் மேலடுக்கிலிருந்து கடைநிலையிலிருக்கும் புலையரின் வாழ்வியல் நிலை வரை பெரும்பாலானவை புறநானூற்றுப் பாடல்களில் பதிவாகியுள்ளன.

வேதம் ஓதுபவர்களாகவும், பாடுபடுபவர்களாகவும் தன் தொழிலைச் செய்தனர். அர்த்தசாஸ்திரங்களை உணர்ந்திருந்தனர். சமூகத்தில் உயர்ந்த நிலையில் இடம் பெற்றிருந்தனர். கடவுளுக்கும், மன்னனுக்கும் ஊழியனாகத் திகழ்ந்தனர். கடவுளின் பணியை முதன்மையாகச் செய்தனர். மன்னனுக்கு வேதம் கூறும் நெறிமுறைகளை எடுத்துரைத்தனர். அதனால் இவர்களைக் காக்கும் கடமை மன்னனுக்கு இருந்தது என்கின்றனர் புலவர்கள். இதனை,

“ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் …………………..”[60]

என்று கூறுவர். அறிவு நுட்பமுடையவராகக் காணப்பட்டனர். புலவனை ஒத்த அந்தஸ்தை மன்னனிடம் பெற்றிருந்தனர். சிலர் புலவர்களாகவும் திகழ்ந்தனர். இதனை,

“சங்க காலத்தில் பிராமணர் பெரிதும் உயர்வாக மதிக்கப்பெற்றவர். கபிலர் போன்றோர் சிறந்த புலவர்களாக விளங்கினர். தூதுவர்களாகவும் அறக்கள நடுவர்களாகவும், பூசாரிகளாகவும் விளங்கியுள்ளனர். சில பிராமணர்கள் சங்கு அறுத்தல் போன்ற தொழிலையும் செய்தனர்.

எனினும் பெரும்பான்மையோர் வேதம் ஓதுதல் போன்ற கடமைகளைச் செய்தோரேயாவர்.''[61] என்று அ.தட்சணாமூர்த்தி கூறுகின்றார்.

வேதம் ஓதுதல் தனது முழு நேரப்பணியாகவே செய்து வந்தனர். மிக சிறந்த அறிவுப் புலமை மிக்கவராக இருந்தனர். சமூகத்தில் உயர்ந்த நிலையில் இருந்தனர். மன்னனுக்கு நிகரான வளமையுடன் காணப்பட்டனர். தனது தந்திரத்தால் மன்னனுக்கு அறநெறியையும் எடுத்துரைத்தனர் என்று புலவர்கள் சுட்டிக்காட்டுகின்றனர்.

## தொழிலும் வாணிபமும்

''உழவும் வாணிபமும் உலகத்துத் தொழில்களில் அதிகமாகப் பேசப்படுபவை. அவ்விரண்டால்தான் உலகத்துச் செல்வ வளத்தைத் திரட்டவும் பேணவும் முடியும்''[62] என்கிறார் மாங்குடி மருதனார். ஐவகை நிலத்துக்கும் எனச் சிறப்புத் தொழில்கள் இருந்தன. அதனை மட்டுமே மக்கள் செய்து வந்தனர்.

இந்த ஐந்துநில மக்களும் தங்களுக்கென வீடுகளைத் தாங்களே அமைத்துக் கொண்டனர். மண்சுவர் எழுப்புதல், வைக்கோல் கொண்டு மேற்கூரை அமைத்தல், செம்மண்ணைக் கொண்டு செங்கல் செய்து உலர்த்துதல் மேலும் சூளையில் இட்டு சுட்டுப் பயன்படுத்துதல் போன்ற தொழில்களைச் செய்தனர்.

ஒவ்வொரு நிலத்திலும் பறை, துடி, முழவு, பம்பை போன்ற இசைக்கருவிகளைச் செய்யும் தொழில்களையும் செய்தனர். சுருங்கக்கூறின் ஒவ்வொரு நிலத்திலும் வாழும் மக்கள் தங்கள் சூழ்நிலைகளுக்கேற்பத் தொழில்களை அமைத்துக் கொண்டனர். இதில் ஆண் பெண் வேறுபாடின்றி இருவரும் தொழில் செய்தனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

### பண்டமாற்று வாணிபம்

தொழில் நிலையில் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களை விற்பனைக்குக் கொண்டு சென்றனர். இதனால் பண்டமாற்று முறை ஏற்பட்டது. ஒவ்வொரு நில மக்களும் தங்களின் தேவைகளைப் பண்டமாற்று முறையில் பூர்த்தி செய்து கொண்டனர்.

‘நாணயங்கள்’ தோன்றுவதற்கு முன்பாக இம்முறையே மக்கள் வழக்கத்தில் இருந்தது. உள்நாட்டு வாணிபம், கடல்வழி வாணிபம் என்ற இருநிலைகளில் தொழிலினைச் செய்தனர். தங்களின் நகரத்திற்குள் விற்கும் நிலை உள்நாட்டு வாணிபம் என்றும்; கடல் வழியாகப் பொருள்களை ஏற்றுமதி இறக்குமதி செய்தலைக் கடல் வாணிபம் என்றும் அழைத்தனர்.

பால், தயிர், மோர், நெய் போன்றவற்றைப் பண்டமாற்று முறையில் விற்பனை செய்தனர்.

“கள்கமழ் புதுப்பூ முனையின், முட்சினை
முகைசூழ் தகட்ட பிறழ்வாய் முள்ளிக்
கொடுங்கால் மாமலர் கொய்துகொண்டு அவண
பஞ்சாய்க் கோரை பல்லின் சவட்டி”[63]

என்பர். உணவுப் பொருள்களை வண்டியில் ஏற்றித் தெருத்தெருவாய்ச் சென்று விற்பனை செய்தனர். வீடு வீடாகவும், ஊர் ஊராகவும் வணிகர் சென்று விற்பனை செய்ததாகக் கூறுவர். சேரநாட்டு மிளகினை கழுதை மீது மூட்டைகளாக ஏற்றி விற்பனை செய்தனர். பிற நாடுகளுக்கும் ஏற்றுமதி செய்யவும் முற்பட்டனர்.

தமிழ்நாட்டு மன்னர்கள் பயிர்த்தொழிலைப் போலவே உள்நாட்டு வாணிபத்தையும், வெளிநாட்டு வாணிபத்தையும் வளர்த்தனர். நாடு முழுவதும் செல்வதற்கு நல்ல பாதைகளை அமைத்தனர். பெருவழிகளில் வீரர்கள் காவலுக்கு நிறுத்தப்பட்டனர். பாதையில் செல்ல வரி வசூல் செய்யப்பட்டது. சுங்கச் சாவடிகள் அமைக்கப்பட்டிருந்தது. இதனை,

“இலைவேய் குரம்பை உழை அதட் பள்ளி
உவலைக் கண்ணி வன்சொல் இளைஞர்
சிலையுடைக் கையர் கவலை காப்பு”[64]

என வாணிபம் செய்பவர்களுக்குக் காவலாக வீரர்கள் நிறுத்தப்பட்டிருந்தனர் என்பதை அறிய முடிகிறது.

## கடல் வாணிபம்

ஏறத்தாழ கி.மு.1000 ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த 'சாலமன்' அரசன் காலத்திலிருந்து கடல்வழி வாணிபம் நடந்ததாகக் கூறுவர். கப்பல்கள் இவ்வாணிகத்திற்குப் பயன்படுத்தப்பட்டது. கப்பல்கள் வந்து தங்கவும், பொருள்களை ஏற்றவும், இறக்குமதி செய்யவும் துறைமுகங்கள் அமைக்கப்பட்டன. "சங்ககாலத் தமிழகத்தில் பல துறைகள் இருந்தன என பெரிப்புளுஸ், பிளைனி, தாலமி போன்ற யாத்திரிகர்கள் எழுதிய குறிப்புகள் வாயிலாக அறிய முடிகின்றது."[65]

பத்துப்பாட்டில் துறைமுக நகரங்களாக் காவிரிப் பூம்பட்டினமும், கொற்கையும் குறிப்பிடப்பட்டுள்ளது.

"வீங்குதிரை கொணர்ந்த விரைமர விறகின்"[66]

என்பர். வடநாட்டுப் பொருள்களும் மேலைநாட்டுக் குதிரைகளும் இறக்குமதி செய்யப்பட்டன. இதன் காரணமாகப் பரதவர்கள் செல்வ வளம் பெற்றவர்களாகத் திகழ்ந்தனர். பொன்னால் ஆகிய அணிகலன்களை ஒலித்தல் நிலையில் அணிந்தனர்.

"பீலி மஞ்ஞையின் இயனி, கால
தமனியப் பொற்சிலம்பு ஒலிப்ப, உயர்நிலை….."[67]

எனும் பாடல் வரிகளால் அறியலாம். இதனைத் தொடர்ந்து உப்பு, கருப்பட்டி, பெருத்தப்புளி முதலியனவும் ஏற்றுமதி செய்யப்பட்டது.

கொற்கைத் துறைமுகத்தில் சங்கு, முத்து, குதிரைகள், யவன நாட்டுப் பாவை விளக்குகள், மதுவகைகள் இறக்குமதியும் ஏற்றுமதியும் செய்யப்பட்டன. இதனை மதுரைக்காஞ்சி,

"விழுமிய நாவாய் பெருநீர் ஓச்சுநர்
நனந்தலை தோத்து நன்கலன் உய்மார்
புணர்ந்து, உடன் கொணர்ந்த புரவியொடு அனைத்தும்"[68]

இப்பாடலில் வாணிபப் பொருட்கள் பற்றிக் கூறப்பட்டுள்ளது.

காவிரிப்பூம்பட்டினத்தில் வாணிபத்தின் பொருட்டுப் பல நாட்டு மக்கள் அங்குக் குடியேறினர். அவர்கள் மரக்கலத்தின் மூலம் பொருட்களைக் கொண்டு வந்தனர். இதற்கு ‘வங்கம்’ என்றுப் பெயரிட்டனர்.

“வால் இதை எடுத்த வளிதரு வங்கம்”[69]

வாணிபத்தினை அறத்தொடு செய்தனர். இலாபத்தை வெளிப்படையாகச் சொல்லியே விற்றனர். உயிர்க்கொலையைத் தவிர்த்தனர். அங்ஙனம் உயிர்க்கொலை புரிவோரைத் தொழிலிலிருந்து விலக்கி வைத்தனர். பசுக்களைக் காத்தனர்; வேள்விகள் செய்தனர்; தானங்கள் செய்தனர்; ஏழைகள் மீது இரக்கமுடையவராகத் திகழ்ந்தனர்; தாம் ஈட்டியப் பொருட்களை அரசனுக்கு ஒப்பாகக் கொடை செய்தனர். இச்செய்தியைப் பட்டினப்பாலை அழகாக விளக்குகின்றது.

“கிளை கலித்துப் பகை பேணாது;

வலைஞர் குரம்பை மா சுண்டவும்…..

நான் மறையோர் புகழ் பரப்பியும்”[70]

இப்பாடலில் தன் புகழ் கெடாதவாறு கொடை செய்து வாணிபத் தொழில் செய்தனர் அக்கால மக்கள் என்கின்றனர் புலவர்கள்.

## தொழிற்கருவிகள்

புறநானூற்றினைக் காட்டிலும் பத்துப்பாட்டில் பல தொழிற் கருவிகளின் யெர்கள் சுட்டிக்காட்டப்படுகின்றன. கருவிகளின் பெயர் கொண்டு தொழில்களை அறிந்துகொள்ள முடிகின்றது. அவைகள்,

1. குழிசி (பானை) அடுப்பு என்னும் பெயர்களைக் கொண்டு மண்பாண்டத் தொழில் பற்றிய குறிப்பினைக் காணமுடிகின்றது. (பெரும்பாணாற்றுப்படை. அடி.99).

2. தேர், பாண்டில், உளி (சிறுபாணாற்றுப்படை.அடி.52:258-260), உலக்கை (பெ.ஆ.படை.அடி.97), நுகம், அச்சு, பார், உருளை (பெ.ஆ.படை,அடி.63-66) என்னும் பெயர்களைக் கொண்டு அக்காலத் தச்சுத் தொழிலினை அறிய முடிகின்றது. அச்சாரக் 'கருந்தொழில் வினைஞர்' என்று பெயர் கொண்டு அழைப்பர் (சிறுபாணாற்றுப்படை,அடி.297).
3. உழுகொழு குயம் (அரிவாள்) கத்தரிகை (பொ.ஆ.ப.அடி.29),'யானையை அடக்கும் தோட்டி' (திரு.ஆ.படை.78), தோல் துருத்தி (பெரு.ஆ.படை.அடி.206, 207), இரும்புத் தகடு (பெரு.ஆ.ப.அடி.222), சுவைமுட் கருவி, மத்திகை (கம்மட்டி), முமல், பாட்டு (பெ.ஆ.ப. அடி.35, 59), நிலம் அகழுமம் உளி, வளைவு, கத்தி, தொடலைவாள் (ம.கா.அடி.635, 636, 637) என்னும் கருவிகளின் பெயர்கள் கூறப்பட்டுள்ளமையால் கொல்லன் தொழில் சிறப்புற்று நடைபெற்றிருந்திருக்கின்றது இவையல்லாமல் போர்க் கருவிகளான வாள், வேல்,ஈட்டி, சூலம் முதலியனவும் கொல்லனால் உருவாக்கப்பட்டுள்ளது.
4. அம்மி, குழவி, திரிகை போன்ற பொருள்கள் கல்தச்சனால் உருவாக்கப்பட்டுள்ளது (பெ.ஆ.படை.அடி.229), வீட்டு உபயோகப் பொருள்களாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது.
5. வாரை என்னும் சொல்லானது,'தொத்தொளிப்பாய்' என்னும் உரையின் வாயிலாக 'பாய்' என்பதன் பொருள் என்று அறிய முடிகிறது. பாய் பின்னுதல் தொழிலையும் செய்து வந்துள்ளனர் (பெ.ஆ.படை.அடி.50).
6. தொழு தோல், செருப்பு (பெ.ஆ.படை.அடி.169; ம.கா.அடி.636), தோல் பதனிட்டுத் தோல் தொழில் செய்துள்ளனர்.

7. பாண்டிமாதேவியின் தந்தக் கட்டிலின் மீது கஞ்சியிட்டுச் சலவை செய்யப்பட்ட துகில் விரிக்கப்பட்டுள்ளது என்றும் (நெடுநல்.அடி.134-135) துகில் கலங்கம் போன்ற உயர்ந்த ஆடைகளும், சாதாரண மக்கள் அணியும் ஆடைகளும் நெய்யப்பட்டன. இதனால் நெசவுத் தொழில் சிறப்புற்று இருந்திருக்கிறது எனலாம். அரசியல் வல்லுநர், உயர்குடிப் பெண்டிர் முதலியோர் சட்டையும் கச்சும் அணிந்திருந்தனர். பெரிய நகரங்களில் நூலால் வரிந்து பந்தும் பாவையும் செய்யும் தொழிலும் நூலேணி முதலிய (ம.கா.அடி.640; திரு.மு.ஆ.படை.68; திரு.மு.ஆ.படை.68), செய்தொழிலும் நடைபெற்றன. இதனை நூல் தொழில் என்றனர். சங்ககாலத் தமிழ் மக்களோடு மக்களாகப் புலவர்களும் வாழ்ந்தனர். அப்புலவர்கள் சிற்றூர்களைச் சார்ந்திருந்தனர். அதனால் சிற்றூர்களிலும் பேரூர்களிலும் தொழில் சார்ந்து கல்வி கற்கும் நிலை இருந்திருக்க வேண்டும் என்று எண்ணுவது தவறாகாது.

## கொடைப் பதிவுகள்

ஈகைத் தன்மை மனிதனின் பண்புகளில் உயரிய நிலையாகப் புலவர் கூறுவர். அதனடிப்படையில் கொடையின் தன்மைகளாக, நிலக்கொடை, மலைக்கொடை, ஊர்க்கொடை, பொருள்கொடை, உணவுக் கொடையினையும் மற்றும் புலவருக்கு மன்னன் அளித்த கொடைச் சிறப்பையும் இப்பகுதி ஆராய்ந்துரைக்கின்றது. சங்ககாலப் புலவர்கள் மன்னர்களின் வீரம், புகழ், அறம் ஆகியவற்றைப் போற்றிப் பரிசில் பெற்றனர். இப்பரிசில் பெறும் நிலையானது மன்னனுக்கு மன்னன் வேறுபாடு இருந்தது என்பர். ஈகை செய்தல் என்பது ஒரு அறமாகவே கருதப்பட்டது. புலவர்கள் மன்னனுக்கு எடுத்துரைத்தனர். கடையெழு வள்ளல்கள் பாரி, பேகன், காரி, ஆய், அதியன், நள்ளி, ஓரி போன்றோரின் கொடைத்தன்மை சிறப்பாகக் கூறப்பட்டது. அவர்களை அடுத்து நல்லியக்கோடன் சிறந்த கொடையாளியாகப் போற்றப்பட்டான்.

“எழுவர் பூண்ட ஈகைச் செந்துகம்
விரிகடல் வேலி வியலகம் விளங்க
ஒரு தான் தாங்கிய உரனுடை நோன்றாள்
நல்லியக் கோடன்”[71]

என்னும் பாடல் வரிகளால் உணர்த்தியுள்ளார். நல்லியக்கோடன் தன்னை நாடி வந்தோருக்குப் புத்தாடைகளையும், அறுசுவை உணவினையும் அளித்து மகிழ்ந்தான் என்றும் பரிசிலர் வேண்டும் பொருளைக் கேட்றிந்து வழங்கினான் என்பதையும் அறிய முடிகின்றது. வேண்டும் பரிசிலை நல்கித் தேர்ப்பாகனுடன் வழியனுப்பி வைத்தான் எனச் சிறுபாணாற்றுப்படை இயம்புகின்றது.

> ‘‘கருந்தொழில் வினைஞர் கை வினை முற்றி
> ஊர்த்து பெயர் பெற்ற எழில்நடை பாகரொடு
> மாசெலவு ஒழிக்கும் மதனுடைய நோன்தான்
> வாள்முகப் பாண்டில் வலவனொடு தரீஇ
> அன்றே விடுக்கும் அவன் பரிசில்’’[72]

எனும் பாடலின் மூலம் மன்னன் பரிசில் வழங்கிய முறையை அறிய முடிகிறது. புலவர்களுக்கு அளிக்கும் பரிசிலை மன்னர்கள் தன் சிறந்த நற்பண்புகளில் ஒன்றாகக் கருதினர். எனவே, புலவர்களுக்கு இல்லையெனாது பரிசிலை வழங்கினர்.

புலவர்கள் கொடைநிலையில் தன்மானத்திற்கு இழுக்கு ஏற்படாதவாறு பரிசிலைப் பெற்றனர். முகம் மலராது அளித்த பரிசிலைப் பெற மறுத்தனர். மரியாதையுடன் அளிக்கும் கொடையினை மீண்டும் பெற்றனர்.

சங்ககாலம் நிலவுடைமைச் சமூகமாக இருந்த காரணத்தினால் நிலமும் வேளாண்மையும் சங்க இலக்கியத்தில் முக்கிய இடம் பெற்றிருந்தது. மன்னர்கள் புலவர்களுக்குத் தானமாக நிலத்தினை அளித்துள்ளனர். மேலும், பொன் பொருள், விளைந்த பொருள்கள், ஆடைகள், யானைகள், குதிரைகள் போன்றவையும், இல்லறம் பேண வீடுகளையும் பரிசாக அளித்தனர்.

அதனினும் மேலாகப் பட்டினப்பாலைப் பாடிய உருத்திரங்கண்ணனாருக்குக் கரிகாலன் ஆயிரங்கால் மண்டபத்தினைப் பரிசாக வழங்கினான் என்பதை அறிய முடிகின்றது.

பரிசில் பெற்ற புலவர் அதனைக் காத்ததோடு அல்லாமல் புலவர்களும், பாணர்களும், வழிநடையாகச் செல்லும்போது இரவலர்களின் இல்லமாகத் திகழட்டும் என்று பாடியதாகக் கூறுவர். அதனைப் போற்றியும் காத்து வந்தனர்.

**நிலக்கொடை**

சிற்றரசர்கள் நிலவுடைமைச் சமுதாயத்தின் அங்கமாகத் திகழ்ந்தனர். இவர்கள் தங்களை நாடி வந்தோருக்கு நிலங்களைத் தானமாக அளித்து வேளாண் குடியினராகப் புலவரை மாற்றினர் என்பர். அவர்களது உணவுத் தேவைகளை நிறைவு செய்வதற்கு மருத நிலத்தினை அளித்துள்ளனர் என்ற செய்தியினைப் புறநானூற்றுப் பாடலில் காணலாம். சீறூர் மன்னனின் கொடையினை,

> "இலங்குவான் மருப்பினுதி மடுத் தூன்றினும்
> ஓடல் செல்லாப் பீடுடை யாளர்
> நெடுநீர்ப் பொய்கைப் பிறழிய வாளை
> நெல்லுடை நெடுநர்க் கூட்டு முதற்புரளும்
> தண்ணடை பெறுதல் யாவது? படினே"[73]

எனப் பாடுகின்றார். ஆழம் மிக்க நீரைக் கொண்ட பொய்கையில் பிறழ்ந்த வாளை மீன்களும் நெல் மணிகளும் வீடுகளில் நிறைந்துள்ளது. வீரமரணமடைந்த அந்நில வீரர்கள் சொர்க்கத்திற்குச் செல்வர். அத்தகையச் சிறப்புடையது இம்மருத நிலமாகும். மேலும் தண்ணடை என்பது மருதநில வயல்களைக் குறிப்பதாகும். இவ்வகையான நிலங்களைப் பரிசாகப் புலவர்களுக்கு அளித்துள்ளனர். மேலும்,

> "துறைநனி கெழீஇக் கம்புள் ஈனும்
> தண்ணடை பெறுதலும் உரித்தே"[74]

மருத நிலத்தில் வாழும் எருதுகள் எல்லாம் தண்ணீரிலேயே மூழ்கி கிடக்கும். எருமையின் கரிய கொம்புகள் போன்று நீண்ட முற்றிய பயிர் கொத்துக்கள் நிறைந்திருக்கும். பயிறு நீக்கப்பட்ட நிலையில் அவ்விடத்தினைப் பசுக்கள் படுக்கும் இடமாகக் கொண்டிருக்கும். இதனைக் கொடையாகப் பெறுதலை தாம் இப்போது விரும்பவில்லை.

கூர்மைமிக்க நெடுவேல் பாய்ந்த பரந்த மார்பை உடைய மடல் நிறைந்த பூக்களை உடைய, கோரைப் புதர்களோடு வாழும் கம்புள் பறவையினம் முட்டையிட்டு ஈன்றெடுக்கும் மருதநிலத்து ஊர்களைப் பரிசிலாகப் பெறுதலை மட்டுமே தாம் விரும்பியுள்ளதாகக் கூறி மருதநிலத்தைக் கொடையாகப் பெற்ற புலவர்களைப் பற்றி அறிய முடிகின்றது.

> ''இளநீர் உதிர்க்கும் வளம்படு நன்னாடு
>
> பெற்றனர் உவக்கும் நின்படை கொள் மாக்கள்''[75]

எனும் பாடலில் சோழன் நலங்கிள்ளி தன் படைவீரர்களுக்கு, இளநீரைக் உதிர்த்துக் கொண்டிருக்கும் வளமிகுந்த நீர் வளம் உள்ள நிலத்தினை அளித்தான் என்றும்; இனி புலவர்கள் வறுமையற்றுப் பாசறை வாழ்வை விடுத்து மகிழ்ச்சியாக வாழ வேண்டும் என்றும் தம்மை நாடி வந்தோருக்கு மனமுவந்து உதவி செய்யும் நற்பண்பு உடையோனாகத் திகழ்ந்தான். இவ்வாறு மன்னன் அளித்த கொடையினையும், கொடையினால் மக்களிடம் ஏற்படும் மனமாற்றத்தையும் புலவர்கள் மிக அழகாக எடுத்துரைத்துள்ளனர். இல்லம் வளம் பெறும்போது மக்களும் நற்பண்புடையவர்களாக மாறுவர் என்பதைக் காணமுடிகின்றது.

**மலைநாடு**

கபிலர் பாரியைப் புகழ்ந்து பாடியவர். பாரி வாழும் பறம்பு மலையிடத்துச் சென்றால், வேண்டும் பரிசிலை அளித்துத் தானும் 'வாரேன்' என்று நிற்கும் தன்மையை உடையவன் பாரி. அவனிடத்துச் செல்வோர்கள் பரிசில்லாது திரும்ப மாட்டார்கள்; புலவர்களின் தகுதியறிந்து தேவையறிந்து பரிசுதர வல்லவன் ஆவான்.

> ''சுகிர்புரி நரம்பன் சீறியாழ் பண்ணி,
>
> விரைஒலி கூந்தலும்நும் விறலியர் பின்வர
>
> ஆடினர் பாடினிர் செலினே
>
> நாடும் குன்றும் ஒருங்கு ஈயும்மே''[76]

எனப் பாரியின் பறம்பு மலையானது இரங்கத் தக்கது. உங்களது போர் வலிமையால் நாட்டைக் கைப்பற்ற முடியாது.

அதைவிடுத்துச் சிறிய யாழை மீட்டி விறலியராக ஆடிப்பாடிச் சென்றீர்களேயானால் பறம்பு மலையையும், நாட்டினையும் ஒட்டுமொத்தமாகத் தந்துவிடுவான். அத்தகையக் கொடைத்தன்மையுடையவன் பாரி எனப் புலவர்கள் சுட்டிக்காட்டுகின்றனர்.

**ஊர்க்கொடை**

பாரியின் கொடைத்தன்மையானது தன்னலமற்றது. இரந்து வந்தோருக்கு இல்லையெனாத வழங்கும் நற்பேறு உடையவன். அவனைப் பாடிய பாணனுக்குத் தனது சிற்றூர்களைக் கொடையாக அளித்தான் என்று கபிலர் கூறுகையில்,

> ‘‘முந்நூறு ஊர்த்தே தன்பறம்பு நாடு
> முந்நூறு ஊரும் பரிசிலர் பெற்றனர்’’[77]

**பொருள்கொடை**

வன்பரணர் நள்ளியைப் பாடுமிடத்து அவனுடைய புகழ், வலிமை, கொடை ஆகியவற்றைப் புகழ்ந்து பாடுவர். அங்ஙனம் பாடும்போது பரிசில் தருபவன் யாராக இருந்தாலும் உண்மையைத் தவிரப் பொய் உரைக்க மாட்டோம். இட்டுக்கட்டிப் பாடும் வழக்கமும் தங்களிடம் இல்லை. செய்யாததைச் செய்ததாகக் கூறிப் பாடுதலுமில்லை என்பதனை,

> ‘‘நாள்தொறும் நன்கலன் களிற்றொடு கொணர்நது
> கூடுவிளங்கு வியன்நகர், பரிசில்முற்று அளிப்பப்
> பீடுஇல் மன்னன் புகழ்ச்சி வேண்டி
> செய்யா கூறிக் கிளத்தல்
> எய்யா தாகின்று எம் சிறுசெந் நாவே’’[78]

என்று பாடுகின்றார். இதில் பொய்யுரைத்தலுக்குப் பரிசாகச் சிறந்த அணிகலன்களையும் அதனோடு யானையையும் கொடையாக அளித்தான். அதனை தான் விரும்பவில்லை என்றும் உன்னைப் புகழ்ந்த என் செந்நாவானது வேறு எவரையும் புகழாது என்றும் தாம் வறுமையில் நின்றபோதும் மன்னன் அளிக்கும் பரிசே மேலானது எனச் சுட்டி நின்றனர்.

மேலும், காட்டினிடத்து வேட்டைக்குச் சென்ற ‘நள்ளி’யினைக் கண்ட பாணர்கள், நள்ளி என்று தெரியாமலே மன்னனைப் புகழ்ந்து பாடினர். எனினும் பாடியவர்களை நோக்கி எம்மிடம் இந்த கடகத்தொடு மாலைகளே தற்போது உள்ளது என்று தன் மார்பில் இருந்த மாலையைத் தந்தான். அதற்குப் பாணர்கள் நீ யார்? என வினவ பதில் அளிக்காது விரைந்து சென்றுவிட்டான். எனினும் விசாரித்து அறிந்தனர் என்பதனை,

“மார்பில் பூண்ட வயங்கு காழ்ஆரம்
முடைசெறி முன்னகக் கடகமொடு ஈத்தனள்;
எந்நாடோ? என தாகும் சொல்லான்;
………..பிறர்பிறர் கூற வழிக்கேட்டிசினே”[79]

என்று பாடுகின்றார். நாட்டில் மட்டுமல்லாது காட்டிடத்தும் சிறந்த அணிகலன்களைள் பரிசாகப் பாணர்களுக்கு வாரி வழங்கினான் என்று புலவர்கள் தம் பாடலில் பதிவு செய்துள்ளனர். மரியாதையுடன் தரப்பட்ட பரிசிலை மட்டுமே மகிழ்ச்சியோடு ஏற்றனர் என்பதையும் அறிய முடிகின்றது.

## உணவுக் கொடை

சங்ககால மக்கள் விருந்தோம்பல் செய்தலில் சிறப்புற்றுத் திகழ்ந்தனர். தன்னை நாடி வந்தோருக்கு உணவும் மதுவும் அளித்து மகிழ்ச்சிப் படுத்தினர். விழாக்காலங்களிலும் இதுபோன்ற நிகழ்வுகள் காணப்பட்டன. அரசனைப் பாடுமிடத்து முதலில் மன்னன் தானே உணவுப் பரிமாறி விருந்து படைத்தான் என்றும் அதன் பின்னரே பரிசில் வழங்கியதாக் கூறுவர். போருக்குச் சென்று வந்த போர்வீரர்களின் பாசறையிலும் மன்னர்கள் உணவினையும் மதுவினையும் வாரி வாரி அளித்தனர்.

‘உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே’ என்ற கூற்றிற்கிணங்க உண்ண உணவினையும் மகிழ்ச்சிக்கு மதுவினையளித்தனர்.

அதனை,

"உண்பின் கள்ளே! அடுமின் சோறே!
எயிற்றிய ஏற்றுமழின் புழுக்கே!
வருநர்க்கு வரையாது பொலாங் கலம் தெளிர்ப்ப
…………………………………………………
மாரி பொய்க்குவது ஆயினும்
சேரலாதன் பொய்யலன் நசையே!"[80]

எனப் பரிசில் பெற வந்த பாணனுக்குச் சேரமன்னன் அளித்தக் கொடையெனப் புலவர் பாடுகின்றார்.

இவ்வாறாகப் புலவர்கள் மன்னனிடம் பெற்றக் கொடையானது தம் வாழ்வையும், தன் சுற்றத்தாரையும் வளப்படுத்தியது என்பர். 'கொடையானது' மன்னனின் அறச்செயல்களில் ஒன்றாகக் கருதப்பட்டது. பரிசில் கொடாத மன்னனைப் பரிசில் ஈட்டுவதே அறம் என்றும் எடுத்துரைத்தனர். தன்னை நாடி வந்தப் புலவருக்கு அணிகலன்கள், குதிரை, யானை, நாடு, நிலம் போன்றவற்றையும் பரிசாக அளித்தனர் என்பதையும் சுட்டிக் காட்டுகின்றனர்.

**புலவன் மன்னனுக்கு அளித்த கொடை**

புலவர் பெருஞ்சித்திரனார் வெளிமான் துஞ்சியைப் பாடிப் பரிசில் பெறச் செல்கின்றார். அங்ஙனம் அவன் அளித்த பரிசில் பொருந்தார், இதனைப் 'பரிசில் விடை' துறையில் குமணன் புகழைப் புகழ்ந்து பாடி, பரிசில் பெறுகின்றார். அதனை அம்மன்னனுக்குத் தகுதியறியாது புலவனுக்குக் கொடையளிக்காதே என்று இடித்துரைப்பதாகப் பாடியுள்ளார்.

"இரவலர் உண்மையும் காண்; இனி; இரவலர்க்கு
ஈவோர் உண்மையும் காண்; இனி; நின் ஊர்க்
கடிமரம் வருந்தத் தன்துயரம் பிணித்த
நெடுநல் யானைஎம் பரிசில்"[81]

எனப் பாடுகிறார். மன்னனே! புலவரின் தகுதியறியாது நீ அளிக்கும் பரிசு பெறுவதற்கு உகந்தது அல்ல; நான் குமணனிடம் பெற்று வந்த யானையினை உன் காவல் மரத்தில் கட்டியுள்ளேன்.

இது நான் உமக்கு அளிக்கும் பரிசு என மன்னனை இடித்துரைக்கின்றார். கொடைப் பெறுதல் மட்டுமின்றி தாம் பெற்றப் பரிசிலைப் பிறருக்கும் அளித்தனர். தாம் பெற்றப் பரிசிலை மன்னனுக்கே அளித்த செய்தியானது புலவனின் அஞ்சாத தன்மையைக் காட்டி நிற்கின்றது.

**முடிவுகள்**

சங்ககால மக்களின் வாழ்வியலைப் படம் பிடித்துக்காட்டும் காலக் கண்ணாடியாகச் சங்க இலக்கியம் திகழ்கின்றது. புறப்பாடல்கள் மன்னனின் போர், வீரம், புகழ், கொடை பற்றிப் பேசுவதோடு மட்டுமல்லாது மக்களின் வாழ்வியல் நெறிகளையும் எடுத்துக்காட்டுகின்றது.

சங்க இலக்கியப் பாடல்களில் வேளாண்மையும், வாணிபமுமம் இணைந்து வளர்ந்து வந்தன. தமிழ்ச் சமூகமானது ஐவகை நிலப் பாகுபாட்டிற்கு ஏற்றவாறு சமூகமும் தொழில்களும் அமைந்தன. இனக்குழச் சமுதாயமாக வாழ்ந்து வந்தனர். அதாவது, மேலோர், கீழோர், ஏவலர், வினைவலர், ஆண்டான், அடிமை, செல்வந்தன், வறியவன், உழுவித்து உண்போன், உழுவோர், சமூகத் தேவைகளுக்கு ஏற்பப் பொருளீட்டுதலில் - உற்பத்தியாளன் என்றும் விற்பனையாளன் என்றும் படிநிலைகளை அமைத்தனர்.

அரசு உருவாக்கிய நிலவுடைமைச் சமுதாயத்தில் மன்னர்கள் நாட்டைக் காத்துப் போர் புரிபவர் மட்டுமல்லாது, வேளாண் சமூகத்தைச் சார்ந்தவராக அடையாளப்படுத்தப்பட்டனர்.

நிலப்பாகுபாடு அடிப்படையில் தொழில் பிரிவுகள் குறித்தச் செய்திகள் இடம் பெற்றன. தொழிலின் அடிப்படையில் சமூகப் பிரிவுகள் ஏற்படுத்தப்பட்டன. நீர் வளம் வேளாண்மைக்கு முக்கியமானது என்றும் ‘உழவர்’ என்ற பெயர் வழக்கில் இருந்து வந்ததையும் அறிய முடிகின்றது. அதேபோன்று தச்சர், கொல்லர், மீன் விற்பவர், நெசவாளர், கட்டிடக் கலைஞர்கள் போன்றோரும் தம் தொழிலால் புகழப்பட்டனர்.

தொழிலாளர் நேர்த்தியானப் பாடல்கள் பதிவு செய்திருத்தலைக் காணமுடிகின்றது. தொழில்புரிவோரின் சொல் பயன்பாட்டினைப் புலவர்கள் நன்கு பதிவு செய்துள்ளமைப் போற்றுதற்குரியதாகும்.

‘மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்’ என்ற ஆட்சி முறையை மன்னர்கள் நடத்தினர். நீதி நெறி தவறாது; ஈகை, கொடை, போர் போன்றவற்றையும் பேணிக் காத்தனர். பொன்னையும் பொருளையும் பரிசாக வழங்கினர் என்பதோடு மட்டுமல்லாது பாணர்கள் வேண்டி நின்றது எதுவாயினும் அவர்களுக்கு அளித்தனர்.

கொடையாக நிலமும், முந்நூறு ஊர்களையும், மலையினையும், நாட்டினையும், முத்துமாலைகளையும், சிறந்த அணிகலன்களோடு யானைகளையும் பரிசாக அளித்ததாகப் புலவர்கள் பதிவு செய்துள்ளனர். புலவர்களைப் பரிசில் பெறுபவராக மட்டும் கருதாமல் நட்புடனும், மரியாதையுடனும் நடத்தினர். புலவர்களும் மன்னர்களும் சிறந்த நட்பினைப் பேணிக் காத்தனர். மன்னனையும், மக்களையும் பேணிக்காப்பவர்களாகப் புலவர்கள் இருந்தனர் என்பதை அவர்களது பாடல்கள் வழி அறிய முடிகின்றது.

## சான்றெண் விளக்கம்

1. புறம்.பா.அடி. 109:2-8.
2. மலைபடுகடாம்,பா.அடி. 101-103.
3. மலைபடுகடாம்,ப.அடி.139-140.
4. புறம்.பா.அடி. 335:1.
5. மேலது, பா.அடி. 335:4-8.
6. மேலது,அடி.8-10.
7. சிறுபாணாற்றுப்படை,பா.அடி. 664-665.
8. மதுரைக்காஞ்சி,பா.அடி. 274-275.
9. பெரும்பாணாற்றுப்படை,பா.அடி. 186.
10. மேலது, பா.அடி. 240-242.
11. மதுரைக்காஞ்சி,பா.அடி. 253-247.
12. பெரும்பாணாற்றுப்படை,பா.அடி. 253-254.
13. மேலது, பா.அடி. 246-248.
14. மேலது, பா.அடி. 196-200.
15. மதுரைக்காஞ்சி,பா.அடி. 401-402.
16. சாமி சிதம்பரனார், சங்கப்புலவர் சன்மார்க்கம், ப.109.
17. புறம்.பா.அடி.212: 1,2.
18. ஆ.தட்சணாமூர்த்தி, தமிழக வரலாறும் பண்பாடும்,ப.39.
19. தொல்.மரபு.பா.81.
20. குறள்.1033.
21. புறம்.பா.அடி. 351:25,26.
22. மேலது,பா.அடி. 18:18,19.
23. மேலது, பா.அடி. 35:26-29.
24. மேலது, பா.அடி. 382:1-3.
25. மேலது, பா.அடி. 382:7-9.
26. பொருநராற்றுப்படை,பா.அடி. 214-229.
27. சிலம்பு, காதை.பா.அடி. 11:64-66.
28. சிறுபாணாற்றுப்படை,பா.அடி. 174.
29. பெரும்பாணாற்றுப்படை,பா.அடி. 89-90.
30. மதுரைக்காஞ்சி, பா.353.

31. புறம்.பா.அடி. 188:1-5.
32. மேலது.,
33. மதுரைக்காஞ்சி,பா.அடி. 646.
34. மேலது.,
35. புறம். பா.2அடி. 28:2,3.
36. மேலது, பா.அடி. 228:1,11-14.
37. மேலது, பா.அடி. 258.
38. மேலது, பா.256:அடி. 5,6,7.
39. மேலது, பா.அடி. 311:1,2.
40. மேலது, பா.அடி.388:1,8,9,10.
41. மேலது, பா.அடி.125:1,2.
42. மேலது, பா.அடி.326:5.
43. நற்றிணை,பா.அடி.353.
44. புறம்.பா.அடி.393:12-14.
45. மேலது, பா.366:14.
46. நெடுநல்வாடை,பா.அடி.145-6
47. பொருநராற்றுப்படை.பா.அடி.82-83.
48. மதுரைக்காஞ்சி, பா.அடி431-34.
49. மேலது, பா.அடி.351-356.
50. புறம்.பா.அடி. 177:5,6.
51. மேலது, பா.அடி. 378:6,7.
52. மேலது, பா.அடி.235:78.
53. அ.தட்சணாமூர்த்தி, தமிழக நாகரீகமும் பண்பாடும், ப.33.
54. புறம்.பா.அடி.289.
55. மேலது, பா.அடி.170
56. மேலது, பா.அடி.287.
57. மேலது, பா.அடி.360.
58. மதுரைக்காஞ்சி,பா.117-118.
59. புறம்.பா.அடி. 224:1-4.
60. மேலது, பா.அடி. 9:1-2.
61. அ.தட்சணாமூர்த்தி, தமிழக வரலாறும் நாகரீகமும், ப.40.

62. மேலது, பா.அடி.120-3.
63. பெரும்பாணாற்றுப்படை,பா.அடி. 89-90.
64. மதுரைக்காஞ்சி,பா.அடி. 810-814.
65. History of South India, KAN Satry, pp.76-78 and 134-136.
66. சிறுபாணாற்றுப்படை,பா.அடி. 155.
67. பெரும்பாணாற்றுப்படை,பா.அடி. 331-332.
68. மதுரைக்காஞ்சி,பா.அடி.318-324.
69. மேலது, பா.அடி. 536.
70. பட்டினப்பாலை,பா.அடி. 196-201.
71. சிறுபாணாற்றுப்படை,பா.அடி. 113-126.
72. மேலது,பா.அடி. 257-260.
73. புறம்.பா.அடி. 287:6-10.
74. மேலது, பா.அடி. 297:7,8.
75. மேலது, பா.அடி. 29:16,17.
76. மேலது, பா.அடி. 109:15-20.
77. மேலது, பா.அடி. 110:4,5.
78. மேலது, பா.அடி. 143:3-10.
79. மேலது, பா.அடி. 150:20-25.
80. பதிற்றுப்பத்து,பா.அடி. 18:1-12.
81. புறம்.பா.அடி. 274:1-5.

# இயல்: நான்கு

## சங்கப் புலவர்கள் உரைத்த நெறியும் அரசர் பின்பற்றிய நெறியும்

சங்க இலக்கியத்தைத் தமிழக வரலாற்றின் ஒளிமிக்க காலம் எனச் சுட்டுவார். தி.வி. நீலகண்ட சாஸ்திரியார். ஹார்ட் என்னும் அறிஞர் பழமையான தமிழ் இலக்கியங்களே பழங்கால இந்தியாவை அறிவதற்கு உதவும் தகுதிச் சான்றுகள் என்பர். எல்லா தொகை நூல்களிலும் பெரும்பான்மையான வட மொழியிலக்கியங்களில் புறக்கணிக்கப்பட்டுள்ள அன்றாட வாழ்வுக் கூறுகள் மலிந்துள்ளன. பல்வேறு சமூகப்பிரிவு மக்களின் வாழ்வு பற்றி மிகத் துல்லியமாக உரைக்கிறது. தென்னகத்திற்கு ஆரியர் வருவதற்கு முந்திய சமூக நிலையை விளக்குவனவாக புறப்பாடல்கள் திகழ்கின்றன.

### சங்கப் புலவர்கள் உரைத்தமை

சங்கப் புலவர்கள் அரசர்களை வழிநடத்துபவராகத் திகழ்ந்தனர். மன்னன் என்பான் உயரிய பண்புநலன்களோடு திகழ வேண்டும் என நெறிப்படுத்தினர். அதனடிப்படையில், மன்னனுக்கு, தலைமைப் பண்பு, அருள் நிலை, அறநெறி இயல்பு, சொற்பிழையாமை, புலவர் நலம் பேணல், மன்னர்களின் கடமை எனவும், அறம் பொருள் இன்பம் உரைத்தல், நாணத்தின் உயர்ச்சி, புகழ்ச்சி, வெற்றி தோல்வி, போர்முறை வஞ்சினம் உரைத்தல், ஆடவர் ஒழுக்கம், செவியறிவுறூஉ, இரவலர்க்கு உதவுதல், ஆற்றுப்படுத்தும் முறை, மன்னன்-தேவன், போற்றுரைகள், வள்ளல் தன்மை போன்ற தலைப்புகளில் மன்னனுக்கு உரைத்த நெறிகளாகவும், அதனைப் பின்பற்ற வலியுறுத்திய நிலையினையும் இவ்வியல் சுட்டி நிற்கின்றது.

‘‘பரிசில் பெறும் பொருட்டு அரசன் அவைக்களத்தே பல புலவர்கள் சூழ்ந்திருந்த காலம் அது. வரிசையறிந்து பரிசை வழங்க வேண்டும் என்று விரும்பிப் பல புலவர்கள் பாடியதைக் காண்கிறோம். எனவே. ஒரு புலவர் பாடும்போது மற்ற புலவர்கள் அவையிலிருந்து அப்பாடல்களைக் கேட்டனர் என்பர் உறுதி. சங்க காலத்தில் புலவர்கள் தனிப்பட்ட சாதியினர் அல்லர். பாடுபவர்கள் அனைவரும் புலவர்களே.

புலமைப்பேறு பெற்றவர்கள் எல்லாத் தொழிலும் செய்திருக்கின்றனர். எனவே, அவைக் களத்தில் உள்ள தங்கள் மனத்தில் பதியுமாறு அப்பாடல்களில் ஈடுபாடு கொண்டிருப்பர்.''[1] மேலும், சங்கப்புலவர்களின் திறன்களை மதிப்பிடும் கதிர் மகாதேவன் ''சங்கப் பாக்களில் புலவரின் ஆளுமை எதிரொளிப்பதைக் காண்கிறோம். எனினும், அவரின் ஆளுமை தனியே தெளிவாகப் பிரிந்து நின்றிருக்கவில்லை. கடல் அலைகள் பரந்து திரிந்து அலைந்து மீண்டும் கடலுள் சேர்வது போல சங்கப் புலவர்களின் ஆளுமைகள் எல்லாம் சங்கப் பாக்களில் ஒன்று சேர்ந்துள்ளன''[2] என்கிறார். புலவர்களின் வாழ்வியல், அரசியல், நிர்வாகவியல் எனப் பல்வேறு கூறுபாடுகளை மன்னர்களுக்கும், மக்களுக்கும் தம் படைப்புகள் வழியாக முன்னிறுத்தி உள்ளார்கள் என்பது யாங்கும் உண்மையாகிறது.

## தாய்மைப் பண்பு

மாதா, பிதா, குரு, தெய்வம் என்பதில் முதல் சொல் தாய்க்கு உரியதாக இருப்பது தமிழ்ப் பண்பாட்டின் உச்சம் ஆகும். தாய்மையைப் போற்றாத மனிதன் இல்லை. துறவியும் இல்லை என்பதும் பொருள் ஆகும். துறவிகளுக்கு பூர்வாசிரமம் இல்லை என்கிறது சனாதன தர்மம். ஒரு துறவி மேற்கொண்ட துறவறத்தில் தாய், தந்தையைச் சந்திக்கும் காலம் ஏற்படுகின்ற நிலையில் தந்தை துறவியின் கால்களில் விழுந்து வணங்க வேண்டும். ஆனால், தாயின் காலில் துறவி விழுந்து வணங்குவார். கணவனுக்காகக் காந்தாரி கண்களைத் துணியால் கட்டிக்கொண்டாள். மகன் துரியோதனனுக்கு துன்பம் நேர்கின்ற நிலையில் என் முன்னால் நீ ஆடையில்லாமல் நில் என் கற்புத் தவத்தை உனக்குக் கவசம் ஆக்குகிறேன் என்கிறாள். அவ்வாறே துரியோதனன் செய்தான். ஆயினும், தாயின் முன் முழுவதுமாக நிர்வாணமாக இல்லாமல் இடையில் ஓர் அரையாடை அணிந்திருந்தான். அதுவே அவனுக்குப் பலவீனமாக மாறியது. பட்டினத்தடிகள் தாயின் உறவைத் தள்ள முடியாமல் தவியாய்த் தவித்தார். தாயின் இறப்பிற்காகப் பத்துப் பாடல்களைப் பாடினார். நபிகள் நாயகம் தாயின் காலடியில் சொர்க்கம் இருக்கிறது என்றார். 'பெத்த மனம் பித்து, பிள்ளை மனம் கல்லு' என்னும் பழமொழியின் பொருள் மிகவும் ஆழமானதாகும்.

சோழன் உருவப் ப.்.றேர் இளஞ்சேட் சென்னியைப் பரணர் வஞ்சித் திணையில் கொற்றவள்ளைத் துறையில் சோழனது படைப் பெருக்கம் குறித்து பாடும் போது,

> ''தாயின் தூவாச் குழவிபோல
>
> ஓவாது கூவும், நின் உடற்றியோர் நாடே''[3]

எனப் பாடுகிறார்.

அரிசில் கிழார், அதியமான் தகடூர் பொழுது வீழ்ந்த எழினியைப் பொதுவியல் திணையில் கையறுநிலைத் துறையில்,

> ''ஈன்றோர் நீத்த குழவி போலத்''[4]

எனப் பாடுவார்.

> ''குழவி கொள்வாரிற் குடிபுறந் தந்து''[5]

எனப் பாடுவார் காக்கைப்பாடினியார் நச்செள்ளையார்.

புறப்புலவர்கள் தாய் இல்லாத நிலையில் ஒருவன் சொல்லொனாத் துன்பம் எய்துவான் என்பது அவர்களின் உட்கிடக்கை. ஆகவே, தாய்மையைப் போற் வேண்டும் என்றே பல்லாற்றானும் பாடி உள்ளதைக் காணலாம்.

''தாயை வேறெந்த மொழியில் விளக்கினாலும் வராத பொருள் தமிழில் விளக்கினால் வரும். தாய் தன்னுடைய குழந்தைக்கு உயிர் கொடுக்கிறாள். கருவில் உயிர் கொடுத்தவள், அந்த உயிர் உறைவதற்கு மெய் (உடல்) கொடுக்கிறாள். பத்து மாதம் சுமந்து பின்பு அதை உலகத்தில் உயிர்மெய்யாய் உலவ விடுகிறாள். இந்த உண்மையினை உணர்த்தவே உயிர், மெய், உயிர்மெய் எழுத்துக்கள் சேர்ந்து உருவானது அம்மா. இந்தியாவில் ஓர் இலட்சியப் பெண் தாயே. அவள் தன்னலமற்ற துன்பங்களைச் சகித்துக் கொள்கிற, எந்தப் பாவத்தையும் மன்னிக்கின்ற மனோபாவம் கொண்டவள்''[6] என்னும் தமிழருவிமணியனின் கூற்று தாய்மைப் பண்பிற்குத் தமிழர்களும் இந்திய சமுதாயமும் காலங்காலமாக வழங்கி வந்து கொண்டிருக்கின்ற உயரிய நிலையை அறிவதற்கு ஏதுவாகும்.

## அருள் நிலை

'துயில் எழாநிலை' என்னும் இலக்கிய வடிவம் மன்னர்களை துயில் எழுப்ப உண்டான இலக்கிய வடிவமாகும். இந்த நிலையில் பள்ளியெழுச்சி என நாயன்மார்களும், ஆழ்வார்களும் இறைவனைப் பாடினார்கள். அதாவது, இறைவனை துயில் எழுப்புவது போன்று அமைத்துக் கொண்டனர். இதே வடிவத்தைப் பாரதியும் பாரதமாதா பள்ளியெழுச்சி எனப் பாடி உள்ளார். இவற்றிற்குக் காரணம் அருள் ஆகும். அருள் என்பது எவ்விதத் தீங்கும் இல்லாத ஒரு குண வடிவமாகும். இவ்வடிவம் இறைவனுக்கு முழுமையும் உடையதாயினும், மனிதர்களுக்கு அந்த அருள் உள்ளம் உண்டு என்பது புறம் பாடும் புலவர்களின் முடிவாக உள்ளது.

நரிவெரூஉத் தலையார், சேரமான் கருவூரேறிய ஏற்வாட் கோப்பெருஞ் சேரல் என்றும் மன்னனை,

> "அருளும் அன்பும் நீக்கி நீங்கா
> நிரயாய் கொள்பவரோமு ஒன்றாது காவல்,
> குழவி கொள்பவரின், ஓம்புமதி
> அளிதோ தானே; அதுபெறல் அருங்குரைத்தே"[7]

என்று பாடுவார்.

நீயோ பெருமகன்! ஆகலின் ஒன்று சொல்வேன் கேட்பாயாக. அருளையும், அன்பையும் தன் வாழ்விலிருந்து நீக்கி விட்டவர் நீங்காத துயரத்திலே கிடந்து உழல்வர். அத்தகையரோடு சேராதிருப்பாயாக; பெற்ற தாய் குழந்தையைப் பேணுவது போல நின் நாட்டைப் பேணக் காத்து வருவாயாக. நாட்டு அரசனாவது எளிதில் வாய்ப்பதன்று. எனவே, அருளோடு காவல் நடத்துக என்கிறார்.

உறையூர் முதுகண்ணன் சாத்தனார், சோழன் நலங்கிள்ளியைப் பொதுவியல் திணையில்,

"வருந்தி வந்தோர் மருங்கு நோக்கி,
அருள வல்லை ஆகுமதி; அருளிலர்
கொடா அமை வல்லர் ஆகுக
கொடாஅத் துப்பின்நின் பகைஎதிர்ந் தோரே"[8]

என்று பாடுகிறார்.

தம்மை நாடி வருபவரை மிக நெருங்கி அவனின் வயிற்றைக் காணும் நிலையில் அவர்களுக்கு அருளவல்லவனாகத் திகழ்கிறார். ஆனால், உன்னை எதிர்த்தவர் அருள் இல்லாதவராகவும், கொடுக்கும் நிலையற்றவராகவும் ஆவர் என்கிறார்.

"இன்பம் இடரென்று இரண்டே வைத்தது
நின்பவர் செய்கையினாலே முடிந்தது
இன்பமது உண்டும் ஈஇலாப் பேதைகள்
அன்பிலாச் சிந்தை அறமறி யாரே"[9]

என்பார் திருமூலர்.

ஒருவன் அனுபவிக்கும் இன்ப துன்பங்கள் தான் அவன் செய்த புண்ணிய பாவங்களின் விளைவு. புண்ணியத்தின் விளைவாக ஒருவன் இன்பம் அனுபவிப்பதைக் கண்டும் பிறருக்கு ஈதலாகியப் புண்ணியத்தைச் செய்யாது வாழ்கின்றார்களே என்கிறார்.

"மனிதன் கடவுள் உருவைத் தன்னுருவில் இடங் கொள்ளச் செய்து கொண்டு, தான் நித்திய அருள் வடிவினனாய் வாழலாம் என்று ஐயமற அறிந்து கொள்கிறான்"[10] என்பார் சுவாமி சரவணானந்தா.

புறப்புலவர்கள் மன்னர்களுக்கு அருள் வடிவத்தையும், அருளால் பெறக் கூடிய நன்மைகளையும் சுட்டிக்காட்டி உள்ளனர் என்பது தெளிவாகின்றது.

உலக சன்மார்க்க அருளாளர்கள் அருளே இறைவனின் அடிநாதம் என்பதை உணர்த்தி நிற்க எஞ்ஞான்றும் தவறில்லை. மன்னர்கள் அருள்நிலை உடையவர்களாக வாழ வேண்டும் என்பதைப் புலவர்களின் உயரிய நோக்கமாக உள்ளதை அறிய முடிகின்றது.

## அறநெறி இயல்பு

அறம் என்பது ஒவ்வொரு சமுதாயத்திற்கும் மாறுபாடு உடையதாகும். இந்த கோட்பாட்டிற்குக் காரணம் எல்லா சமுதாயமும் ஒரே தளத்தில் நிர்ணயம் செய்யப்படவில்லை. இதற்குச் சான்றாகக் கம்பனின் வாலி வதைப் படலத்தைக் கூறலாம். வாலி இராவணனிடத்து பிறர் மனைவியைப் புசிப்பது எங்கள் குலத்திற்கு இயல்பான ஒன்றாகும். அது குற்றமே இல்லை என்கிறார். இராமன் அதைத் தவறு என்கிறார். இக்கூறுபாடு உலகம் முழுமைக்கும் அறம் என்பது ஒரே பொருளில் இல்லை என்பதை உணர்த்துகிறது. புறநானூறு புலவர் மருதன் இளநாகனார் ‘‘அறநெறி முதற்றே அரசின் கொற்றம்’’[11] என்கிறார். மேலும் மணிமேகலையில்,

‘‘பத்தினிப் பெண்டிர் பாத்தூண் ஏற்ற
பிச்சைப் பாத்திரப் பெருஞ் சோற்ற மலை
அறத்தின் ஈட்டிய ஒண்பொருள் அறவோன்’’[12]

எனச் சாத்தனார் உரைப்பார். அறநெறியில் ஒழுகி வருபவர் நல்ல வழியில் உண்டாக்கிய சிறந்த பொருளானது நல்ல நெறிகளில் பயன்படுத்தப்பட்டு அவள் பாலும் காலமும் முடியாது.இக்கூற்றில் மணிமேகலை செய்த அறத்தின் வலிமையைச் சாத்தனார் உரைப்பது நன்கு விளங்கும்.

‘‘அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
பிறன் பழிப்பது இல்லாயின் நன்று’’[13]

என்கிறது குறள்.

இதற்குப் பரிமேலழகர் “ஏகாரம் பிரிநிலைக்காண் வந்தது. இதனால் பிரிக்கப்பட்டது துறவறம் ஆகலின் அ∴து என்னும் சுட்டுப்பெயர் நின்றது அதன்மேல் நின்றது பிறன் பழிப்பது என்றது கூடா ஒழுக்கத்தினைத் துறவறம் மனத்தையும் பொறிகளையும் ஒருங்கே அடக்கவல்லது அருமையுடைத்தாய் வழியே. அவற்றை ஒழிக்க வேண்டாது ஐம்புல இன்பங்கள் ஆரத் துய்க்கும் எண்மையுடைய இல்வாழ்க்கையோடு அறம் என ஒருங்கு எண்ணப்படுவது என்றவாறு ஆயிற்று”[14] என உரை வகுப்பார்.

அறத்திற்குத் தமிழ்ச் சான்றோர்கள் அவர்கள் கொண்ட பொருண்மைக்குத் தக்கவாறு பொருள் உணர்த்தி நிற்பது நோக்குதற்குரியதாகும். புறநானூற்றுப் புலவர் நெட்டிமையார் பல்யாக சாலை முதுகுமுடி பெருவழுதியைப் பாடாண் திணையில்,

“பாணர் தாமரை மலையவும், புலவர்
பூநுதல் யானையொடு புனைதேர் பண்ணவும்
அறனோ மற்று இதுவிறல் மாண் குடுமி
இன்னா ஆகப்பிறர் மண் கொண்டு
இனிய செய்தி நின் ஆர்வலர் குறித்தே”[15]

எனப் பாடுகிறார்.

புறப்புலவர்கள், மன்னர்கள் எந்நிலையிலும் பரிசில் வழங்குவதை மரபாகவே கொண்டுள்ளனர் என்பதை இப்பாடல் அடிகளால் அறியலாம்.

“வேந்தே நீ ஒருபால் இனிமையும், ஒருபால் இன்னாமையும் செய்தல் அறனோ என்று வினவுவது பழிப்புரை. இரவலர்க்கு இன்பம் செய்தலும், பகைவர்க்கு இன்னாமை செய்தலும் கொண்ட வேந்தர்களுக்குப் புகழாதலால் அதனைக் கூறுதல் புகழாயிற்று. புகழைப் பழி போலக் கூறுதலின், இது பழித்தது போலப் புகழ்ந்தது எனக் கொள்க”[16] என்கிறார் என உரை வகுப்பார் ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை.

புறப்புலவர்கள் நல்ல மன்னனுக்கு அழகு எதிரி மன்னனை வெற்றி கொள்வதாகும். வீரத்திற்கு அழகு அறத்தின் வழியான வெற்றியாகும். புறப் புலவர்கள் மன்னனின் வெற்றிச் சிறப்பையே அறம் என முன்னிறுத்துவது இங்கு குறிப்பிடத் தக்கதாகும்.

## சொற்பிழையாமை

சொற்பிழையாமை மனித சமூகத்திற்கு முதன்மையான கருத்தியல் ஆகும். நற்றிணைத் தலைவி தன் தோழியிடத்துத் தன்னுடைய காதலின் ஆழத்தை உணர்த்தும் நிலையில் 'நின்ற சொல்லர்' எனக் கூறுவாள். அவளின் நோக்கம் தலைவன் காதலை விட காதலின் கடமையைச் செய்யத் தவறாதவன் என்பதைப் புலப்படுத்துகிறாள்.

புலவர்கள் சமுதாயத்திற்கும் மக்களுக்கும் சொற்பிழை என்பது கல்மீது இட்ட எழுத்தாக இருக்கவேண்டும் என உரைப்பர்.

> ''சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம்
> சொல்லிய வண்ணம் செயல்''[17]

என்கிறது குறள். வள்ளுவர் இதை வினைத்திட்பம் எனும் அதிகாரத்தில் உரைப்பார். வினைத்திட்ப அதிகாரத்திற்குப் பரிமேலழகர்,''அதாவது அத்தூய வினை முடிப்பானுக்கு வேண்டுவதாய் மனத் திண்மையும் அதிகார முறைமையும் இது தானே என உரைப்பார்''[18] என அதிகாரத்திற்கு விளக்கம் அளிப்பார். மேலும் சொல்லுதல் என்னும் குறளுக்குப் பரிமேலழகர்,''சொல்லுதல் செயல் என்பன சாதிப் பெயர், அரியவற்றை எண்ணிச் சொல்லுதல் திட்பமில்லாதார்க்கும் இயறலின் எளிய என்கிறார்.''[19] இவ்விளக்கம் சொற்களின் வலிமையை உணர்த்தி நிற்கின்றது.

> ''சொல்லான் அறிய ஒருவனை மெல்லென்ற
> நீரான் அறிய மருவினை யார் கண்ணும்
> ஒப்புரவினான் அறிய சான்றாண்மை மெய்க்கண்
> மகிழான் அறிய நறா''[20]

என்கிறது நான்மணிக்கடிகை. ஒருவனுடைய குணத்தை அவன் பேசும் சொற்களால் அறியலாம். மடுவின் ஆழத்தை அதில் உள்ள நீரின் குளிர்ச்சியால் அறியலாம். சான்றாண்மையை ஒருவன் குடித்திருக்கும் அளவினால் ஏற்படும் தடுமாற்றத்தால் அறியலாம் என்பார் விளம்பிநாகனார். சொற்கள் என்பது ஒருவரை அடையாளப்படுத்தி விடும் என்று கூறுகிறார்.

சொல்லுதல் செயல் என்பன சாதிப்பெயர் என்றே உரை எழுதுகிறார். சாதி என்பது ஒருவர் தோன்றிய குலத்தில் இல்லை; அவனது குணமாகிய சொல்லில்தான் இருக்கிறது என்கிறார் பரிமேலழகர்.

இரும்பிடத்தலையார் எனும் புலவர் பாடாண் திணையில் ‘‘நிலம் பெயரினும் நின்சொற் பெயரல்’’[21] எனக் கூறியுள்ளார். இதற்கு ஔவை. சு. துரைசாமிப் பிள்ளையவர்கள் அரசரது ஆணை வழியொழுகப்படாது பிறழுமாயின், அரசியல் அறம் பொருள் இன்பங்கள் நிலவுவதற்கு அரணாகாது ஒழியுமாதலால் சொல் என்பதற்கு ‘‘ஆணையாகிய சொல்’’ எனப் பொருள் கூறகின்றார். பாட்டுக் கிடந்தபடியே பொருள் கொள்ளாது; எயிறு படையாக வெயிற்கத் கடாஅ’’ என்பதனை இரும்பிடர்த் தலையிருந் தென்பதன்பால் கூட்டில் பொருள் கொள்ள வேண்டியிருத்தலின் மாறிக் கூட்டுக’’ என உரைக்கின்றார். உவமையை மிகுத்தற்கண் செல்லும் மனத்தை மீட்டுப் பிறரது இனிமை தீர்த்தற்குச் செல்லுதல் மிக்க வண்மையுடையார்க்கு அல்லதாகாமையால் ‘‘தீர்த்தல் வன்மையான்’’[22] என்று உரைக்கின்றான் என விளக்கம் தருகிறார். இவரின் கருத்துரை மன்னர்கள் சொற்கள் சொல்லும் நிலையில் ‘தடுமாற்றம் இருத்தல்’ ஆகாது என்று உணர்த்துகிறார்.

> ‘‘தாழ்பூங் கோதை தன்காற் சிலம்பு
> கன்றிய கள்வன் கைய தாகில்
> கொன்றச் சிலம்பு கொணர்க ஈங்கெனக்
> காவலன் ஏவ’’[23]

இது பாண்டியன் நெடுஞ்செழியனின் கூற்றாகும். இச்சொற்றொடர் பாண்டியனுக்கு அழியாப் பழியை உண்டாக்கியது. இதே பாண்டியன் வழக்குரைத்த காதையில்,

"பொன்செய் கொல்லன் தன்சொற் கேட்ட
யானோ அரசன் யானே கள்வன்"[24]

என்கிறார் இளங்கோவடிகள். மன்னனின் சொல்லால் எப்படியெல்லாம் தீங்கு நேர்கிறது என்பதை உணர்த்துகிறார். அரசாணை வழியொழுகப்படாது பிறழுமாயின் அரசியல் அறம் பொருள் இன்பம் இன்பங்கள் நிலவுவதற்குக் காரணமான அரசு ஒழியும் என்பது எத்தகைய நுட்பமான பொருள் உடையதாகும் என ஔவை துரைசாமிப்பிள்ளை கூறுகிறார்.

## புலவர் நலம் பேணல்

மன்னர்கள் புலவர்களைக் கண்ணை இமை காப்பது போல் காத்துள்ளனர் என்பதை புறப்பாடல்களின் வழி அறிய முடிகின்றது. புலவர்களும் மன்னர்களை அறநெறிப்படுத்துவதில் அரசாட்சி செய்துள்ளனர். இதற்குக் காரணம் காலச் சூழல்தான். சூழ்நிலையியல் கோட்பாடு தற்காலத்தில் இலக்கிய வடிவமாக வளர்ச்சி பெற்றுள்ளது. இலக்கியத் திறனாய்வுக் கலையில் சூழல் நிலையியல் திறனாய்வின் வளர்ச்சியைக் குறித்துள்ளார்.

"ஒரு மொழியில் இடம் பெற்றுள்ள புகழ் பெற்ற இலக்கியங்களைச் சூழலியல் பார்வையில் அணுகி அந்த இலக்கியங்களில் இயற்கை உலகம் எவ்வாறு அடையாளப் படுத்தப்பட்டுள்ளது என்பதில் கவனம் செலுத்தி ஆராயலாம். இலக்கியத்தில் சூழலியல் சார்ந்த கருத்தாக்கங்கள் பாடுபொருளோடு இருக்கும் தன்மையை வெளிக்கொணர்தல், இயற்கையைப் பாடுதல் என்பதனையே குறிக்கோளாகக் கொண்டு பாடிப் புகழ்பெற்ற கவிஞர்களின் கவிதைகளைச் சூழலியல் நோக்கில் விளக்குதல்"[25] போன்றவையாகும்.

திறனாய்வாளர் பஞ்சாங்கம் சூழல் நிலையியல் குறித்து வழங்கும் கருத்துரைகளைப் புறப்புலவர்களும் பயன்படுத்தியுள்ளார்கள். சூழல் நிலையியல் என்பதை இயற்கையைச் சார்ந்ததாகவே கருத்துரைத்துள்ளனர். இருப்பினும் வாழ்வியலும் நோக்குவது ஆய்வியல் அணுகுமுறையாக நோக்க வேண்டும்.

உலகத்தில் நிகழும் நிகழ்வுகள் அனைத்திற்கும் சூழல் நிலையே காரணமாகும். இதனைக் கபிலர் பொதுவியல் திணையில் அரசனுக்கு உரைக்கும் உரையாக,

"ஒருதிணை ஒருவனை உள்ளி, நாற்றிசைப்
பலரும் வருவர், பரிசில் மாக்கள்
வரிசை அறிதலோ அரிதே; பெரிதும்
ஈதல் எளிதே; மாவண் தோன்றல்;
அது நற்கு அறிந்தனை யாயின்
பொது நோக்கு ஒழிமழி புலவர் மாட்டே"[26]

என்று அரசனது பரிசில் வழங்கும் தன்மையினைத் தகுதியறிந்து வழங்கல் வேண்டும் என்றும், புலவரிடத்துப் பொது நோக்கம் கொள்ளல் ஆகாது என்றும் எடுத்துரைப்பார். புலவரின் நலம் பேணுதல் நிலையினைச் சூழலியல் நிலையில் நின்று அரசன் பேணிக் காக்க வேண்டும் என்று அறிவுறுத்துகின்றனர் புலவர்கள்.

"புலமை மிக்கவரைப் புலமை தெரிதல்
புலம் மிக்கவர்க்கே புலனாம்; நலம் மிக்க
பூம் புனல் ஊர! – பொது மக்கட்கு ஆகாதே
பாம்பு அறியும் பாம்பின் கால்"[27]

என்ற பழமொழியும்,

"தேவர் அனையர் புலவரும், தேவர்
தமர் அணையர், ஓர் ஊர் உறைவார் தமருள்ளும்
பெற்றனர் பேணி வழிபடுவார்; கற்றனர்
கற்றாரைக் காதலவர்"[28]

என நான்மணிக்கடிகையும்,

"சலவரைச் சாரா விடுதல் இனிதே
புலவர்தம் வாய்மொழி போற்றல் இனிதே;
மலர்தலை ஞாலத்து மன்னுயிர்க்கு எல்லாம்

தகுதியாய் வாழ்தல் இனிது''[29]

என இனியவை நாற்பதும் உரைப்பது இங்கு கவனிக்கத் தக்கதாகும். சங்கப் புலவர்களுக்கும் அற இலக்கியப் புலவர்களுக்கும் கால இடைவெளி உண்டு. ஆயினும் கருத்து இடைவெளி இல்லை என்பது அறிவதற்கு உரியதாகும். புலவர் பெருமக்கள் அறிவு நலம் சார்ந்தவர்களாகவும், தகுதி நிரம்பியவர்களாகவும், புறம் போக்கல் கூடாது என்பதும் அவர்களது கருத்தியல் ஆனது. கபிலர் மன்னர்கள் தகுதியுடையவர்கள், தகுதியற்றவர்கள் என்ற இரு பிரிவினரையும் ஒரே பார்வையில் நோக்கியுள்ளதைச் சுட்டிக்காட்டுகிறார்.

ஆகவே புலமை நலன் உடையவர்களை மட்டுமே புலவராகக் கருத வேண்டும் என்று உரைக்கின்றார். அறிவுசார் மேம்பாட்டிற்கு வெகுமதியைப் பெறுவதில் காலந்தோறும் போராட்டம் நிகழ்ந்து கொண்டிருக்கிறது என்பது அறியத் தக்கதாகும்.

**மன்னர்களின் கடமை**

மோசிகீரனார் பொதுவியல் திணையில் பொருண்மொழிக்காஞ்சித் துறையில்,

''நெல்லும் உயிர் அன்றே; நீரும் உயிர் அன்றே;
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்;
ஆதனால் யான் உயிர் என்பது அறிகை
வேன்மிகு தானை வேந்தற்குக் கடனே''[30]

எனப் பாடியுள்ளார். ''உயிரும் உடம்பும் கூடி நின்ற வழியும் உயிருக்குயிராய் நின்றியக்கும் திருவள்ளுவர் போல அரசு முறை இன்றியமையாயின் அதனைச் செலுத்துவது தானே உலகிற்கு உயிராதலை அறிந்து; உயிர் தானின்ற உடம்புக்குளதாகும். நோயைத் தான் நுகர்ந்தும் அதனைப் பேணுதல் போல, உலகு புரத்தற்கண் உள்ள துன்பம் அனைத்தையும் தானேற்று அதனைக் காப்பது கடன் என்பார்''[31] என உரை வகுப்பர் ஔவை துரைசாமிப்பிள்ளை.

அரசருக்கு அவர் நன்மையைக் கருதி புத்தி சொல்லி அறவுரைகளைச் சுட்டிக் காட்டி அவனை நல்வழியில் நடத்திச் செல்லும் ஆற்றல் பெற்ற புலவரும் சிலர் பண்டைக் காலத்தில் இருந்தனர். இப்படிக் கூறுவதால் தாம் அரசரின் சீற்றத்துக்குள்ளாகலாம் என்பதனையும் பொருட்படுத்தாமல் அவர்தம் கடமையைத் தைரியத்துடன் செய்தனர். இவ்வாறு புலவர் கூறும் முறை பாடாண் திணையில் ஒரு துறையாகிய வாயுறை வாழ்த்து எனலாயிற்று. அவர் பரிசில் பெறுவதை ஒரு பொருட்டாக நினைக்காமல் தங்கள் உயர்வைத் தாங்களே மதித்துக் கொண்டு வெறும் புகழ்ச்சிகளைக் கூறாமல் அரசனுக்கு நல்லறிவு புகட்டும் முறையில் பாடியிருக்கிறார்.

சோழ அரசனாகிய நலங்கிள்ளி நெடுங்கிள்ளி என்ற இருவர் தமக்குள்ள பகைமையைக் கொண்டு போர்ச் செயல்களில் ஈடுபட்டிருக்கையில் சோழர் குலத்தின் பெருமையை எடுத்துக் கூறிய கோவூர் கிழார், அவர்களிடம் சென்று ஒரே வம்சத்தைச் சேர்ந்தவர்கள் பகைமையால் கட்டுண்டு போர் செய்வது தகுதியன்று என்று உருக்கமாகக் கூறி அவர்களைப் பகைமையிலிருந்தும், போர் செய்வதிலிருந்தும் காத்தனர் என்பதை அறிய முடிகின்றது.

பேகன் ஒரு சமயம் தன் மனைவி கண்ணகியைப் பிரிந்து பரத்தையரை அடைந்து வாழ்ந்த காலத்தில் புலவர்கள் கபிலர், பரணர், அரிசில் கிழார், பெருங்குன்றூர் கிழார் ஆகியோர் பேகனிடம் சென்று மனைவியைத் துறந்து பரத்தையரின் இன்பத்தில் வாழ்வது சரியில்லை என்ற அறிவுரைகளை அரசனது மனத்தில் பதியுமாறு எடுத்துக் கூறி அவனை நல்வழிப்படுத்தியதைப் புறநானூற்றுப் பாடல் வழி அறிய முடிகின்றது.”[32] ஏ.வி.சுப்பிரமணிய ஐயர் கூறி இருக்கும் இவ்வாய்வுரை மன்னர்களின் கடமைகளையும், புலவர்களின் அறநெறி உணர்த்தும் தன்மையினையும் தெள்ளிதின் உணர்த்தி நிற்கின்றது. புலவர்களின் நோக்கம் மன்னர்களை எந்நிலையிலும் தவறு இழைக்காவண்ணம் பாதுகாத்து வந்துள்ளனர் என்பதை உணர முடிகின்றது.

17-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த குமரகுருபரர் தம் நீதிநெறி விளக்கத்தில்,

"இகழின் இகழ்ந்தார்க்கு இறைமகள் ஒன்று
புகழினும், ஒக்கப் புகழ்ப; இகல் மன்னன்
சீர்வழிப்பட்டதே மன்பதை; மற்று என்செய்யும்
நீர்வழிப் பட்ட புனை?"[33]

எனப் பாடியுள்ளார்.

நாட்டு மக்கள் மன்னன் எதைச் சொல்கிறானோ அதனையே திரும்பச் சொல்லுவர். அவன் ஒன்றை இகழ்ந்தால் மக்களும் இகழ்வர். அவன் ஒன்றைப் புகழ்ந்தால் மக்களும் புகழ்வர். இந்நாட்டு மக்கள் முற்றும் அரசனைச் சார்ந்தே இருப்பவர்.

ஆற்று நீரோட்டத்தில் அகப்பட்ட தெப்பம் நீரோட்டத்திற்கு ஏற்பச் செல்லும். அதைப்போல மக்களும் மன்னனின் வழியிலேயே நடப்பவர்கள் என்று கூறுகின்றார்.

சங்க காலம் முதல் பல நூற்றாண்டுகளுக்கும் மேலாகத் தமிழ் மன்னர்களும் புலவர்களும் ஒரே சீராக வாழ்ந்துள்ளனர் என்பதை இலக்கியங்கள் வழி உணர முடிகின்றது. அரசனே மக்களின் ஆதாரம் என்பதும் புலவர்களே அவர்களின் பாதுகாவலர்கள் என்பதும் இங்கு நோக்கத்தக்கதாகும்.

## அறம் பொருள் இன்பம் அறிய உணர்த்தல்

அறம், பொருள், இன்பம் இம்மூன்றும் நன்னெறியில் அமையாவிடில் சமூகம் சமநிலை எய்த இயலாது. அறத்திற்குள் பொருளும், பொருளுக்குள் இன்பமும் தம்முள் பிரிக்க முடியாத காரணங்கள் ஆகும். இதனை, வள்ளுவர் அறன் வலியுறுத்தல் என்னும் அதிகாரத்தில் படைத்துள்ளார். இந்த அறன்வலியுறுத்தலைப் புறநானூற்றுப் புலவர்கள் புறம் - 28, 29, 40, 55, 157, 192, 195, 357, 363, 364 என்னும் பத்துப் பாடல்களில் அறத்தின் பன்முகத் தன்மையை உணர்த்தியுள்ளனர். பொருள் நிலைப்பாட்டில் அறத்தின் நெறியிலேயே பொருளை உட்படுத்தியுள்ளனர். சேரன் மார்க்கோதை என்னும் புறநானூற்றுப் புலவன்,

“ஒள்ளழற் பன்னிப் பாயல் சேர்த்தி

ஞாங்கூர் மாய்ந்தனன் மடந்தை

இன்னும் வாழ்வில் என்னிதின் பண்பே?”[34]

எனும் பாடலில், இன்பம் என்பதை மனைவி இறந்தவுடன் தானும் இறக்க வேண்டும் எனும் கருத்துடையவர் ஆகிறார். புறப்புலவர்களின் நோக்கம் அவர்கள் கொண்ட பொருள் இல்லறமே இன்பத்தின் வழி என்பதாகும்.

குடபுலவியனார், பாண்டியன் நெடுஞ்செழியனை முதுமொழிக் காஞ்சித் துறையில்,

“உணவெனப் படுவது நிலத்தொடு நீரே

நீரும் நிலனும் புணரியோர்; ஈண்டு

உடம்பும் உயிரும் படைத்திசினோரே;

வித்தி வான் நோக்கும்…”[35]

என்ற இப்பாடலுக்குப் புலியூர்கேசிகன் “நீர்நிலை பெருகத் தக்கவே அதன் முதலான மூன்றும் பயக்கும் என்று கூறியுள்ளார்”[36] என உரை வகுப்பர். அறத்திற்கு மூலமாக நீரும், உணவும் உடலும் உயிரும் உள்ளது என்பது பொருளாகும்.

உறையூர் முதுகண்ணன் சாத்தனார் நலங்கிள்ளியைப் பற்றிப் பொதுவியல் திணையில் கூறும்போது,

“உரையும் பாட்டும் உடையோர் சிலரே

மரை அலை போல மாய்ந்திசினோர் பலரே;

புலவர் பாடும் புகழுடையேன்; விசும்பின்

வலவன் ஏவா வான ஊர்தி

எய்தும்…”[37] எனக் குறிப்பிடுகின்றார்.

“சேற்றின் கண்னே வளரும் தாமரைப் பூத்த ஒள்ளிய நிறத்தை உடைத்தாகிய நூறாகிய இதழையுடைய மலரினது நிலையைக் கண்டாற் போன்ற ஏற்றத் தாழ்வில்லாத சிறந்த குடியின்கண் பிறந்து, வீற்றிருந்த வேந்தனை எண்ணும் காலத்துப் புகழும் பாட்டும் உடையோர் சிலர்.

தாமரையினது இலையை ஒப்பப் பயன்படாது மாய்ந்தோர் பலர்; புலவரால் பாடப்படும் புயழையுடையவர் ஆகாயத்தின் கண் பாகனால் செலுத்தப்படாத விமானத்தைப் பொருந்துவாரென்று சொல்லுவார் அறிவுடையோர்; தாம் செய்யும் நல்வினையை முடிந்ததென்று சொல்லக் கேட்பேன்''[38] என உ.வே.சா கூறும் இக்கருத்தானது அறம் செய்தவர்கள் தேவர்களுக்கு ஒப்பானவர்களாகக் கருதப்படுவர் என்பது பொருள். அறம் என்பது நல்வினை. அந்நல்வினை நலம் பயக்கும்.

''அறனும் பொருளும் இன்பமும் மூன்றும்
ஆற்றும் பெரும! நின் செல்லும்
ஆற்றாமை நின் போற்றாமையே''[39]

என்று பாடுவார் உறையூர் முதுகண்ணன் சாத்தனார்.

சோழன் நலங்கிள்ளியைப் பொதுவியல் திணையில் அறம் செய்ய வேண்டும் என வலியுறுத்துதிக் கூறியதாக இப்பாடலைக் கருதலாம் என்கிறார் புலியூர்கேசிகன். எனவே, அறம் செய்ய வேண்டும் என்பது உறுதிப் பொருளாகும். ''மனை, ஊன், மக்கள் பிறப்பாற் பெறும் பயன் அறம் பொருள் இன்பங்கள் ஆதலால், அப்பிறப்பால் குறைந்தவர் அவற்றை இழத்தலின் அறம் முதலியன ஊதியம் எனப்பட்டன. ஊதியமாவது அறம் என்று கொள்பவரும் உண்டு''[40] என்பார் ஔவை துரைசாமிப்பிள்ளை.

புலியூர்கேசிகன், ஔவை துரைசாமிப்பிள்ளை இருவரும் அறன் என்பதற்கு உறவும் நாடும் நன்னெறியில் அமைய வேண்டும் என்றே பொருள் உரைப்பர்.

அறம் பொருள் இன்பம் இம்மூன்றும் சமநிலை தவறாதவனாக அமைதல் வேண்டும் என்பதே மக்களுக்கு உரைக்கும் அறமாகும்.

**நன்றி மறவாமை**

நன்றி என்பதை ‘உதவி’ என்னும் பொருளில் புலவர்கள் கருத்துரைப்பர். வள்ளுவர் செய்நன்றி அறிதல் என்ற அதிகாரத்தையே படைத்துள்ளார். இவ்வதிகாரத்தில்,

“நன்றி மறப்பது நன்றன்று நன்றல்லது
அன்றே மறப்பது நன்று”[41]

என்றும்,

“எந்நன்றி பொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்நன்றி கொன்ற மகற்கு”[42]

என்று திருவள்ளுவரும்,

“செய்த நன்றியை ஒருநாளும் மறக்க வேண்டாம்”[43]

என உலகநாதப் பண்டிதரும்,

“நன்றி உருவருக்குச் செய்தக் கால் அந்நன்றி
என்று தருங்கொல் என உண்டா – நின்று
தளரா வளர் தெங்குதான் உண்டநீரை
தலையாலே தான் தருதலால்”[44]

என ஔவையாரும் எடுத்துரைப்பர்.

“ஆனினது முலையாற் பெறும் பயனைக் கெடுத்த தீவினையாளருக்கும் மாட்சிமைப்பட்ட ஆபரணத்தையுடைய பெண்டிரது கர்ப்பத்தை அழித்தோர்க்கும் பார்ப்பவரைப் பிழைத்த கொடுந் தொழிலையுடையோர்க்கும் அவர் செய்த பாதகத்தை ஆராயுமிடத்து அவற்றைப் போக்கும் வழியும் உள்ளன எனவும் நிலம் கீழ் மேலாய் காலமாயினும் ஒருவன் செய்த நன்றியைச் சிதைத்தோர்க்கு நரகம் நீங்குதல் இல்லை எனவும் அறநூல் கூறிற்று”[46] என உ.வே.சா வின் உரை ஒருவன் செய்த உதவியை மறப்பவருக்குத் துன்பம் வரும். ஆலந்தூர் கிழார் சில தவறுகளைச் சுட்டிக் காட்டுகின்றார்.

ஆவின் மடியை அறுத்து மகளிர் கருவைச் சிதைத்தல், ஆசிரியனைப் பழித்தல் ஆயின் பாவச் செயல்களாக இருப்பினும் ஒருவாறாக இவற்றிலிருந்து பிழைத்துக் கொள்ள வழியுண்டாம். இந்த எரு கோள்களைப் புலவன் உரைத்தலின் நோக்கம் ஒருவர் செய்யா உதவியும் மாண்பை உணர்த்துதலே ஆகும்.

“உதவி வரைத்து அன்று. உதவி உதவி

செயப்பட்டார் சால்பின் வரைத்து”[47]

என்பார் வள்ளுவர். இதனைப் பரிமேலழகர்,

“சால்பு எவ்வளவு பெரிதாயிற்று; உதவியும் அவ்வளவு பெரிதாம் என்பார். ‘சால்பின் உரைத்து’[48] என்கிறார். (சால்பு – பண்பு) என உரை வகுப்பர். உதவியின் ஆழத்தை அற அறிஞர்கள் உணர்த்திய பாங்கு நினைக்கும் தோறும் பொருள் பல உடையதாகும்.

**நாணத்தின் உயர்ச்சி**

“அச்சமும் நாணும் மடனும் முந்துறத்த

நிச்சமும் பெண்பாற்கு உரிய என்ப”[49]

என்பர் தொல்காப்பியர். களவியலில் தொல்காப்பியர் இச்சூத்திரத்தைப் படைத்துள்ளார். இதனின் நோக்கம் பெண் இயல்பை உணர்த்துதலாகும். இதைக் களவியலில் உரைத்திருப்பது மேலும் பொருளுடையதாகும் ‘நாணம்’ ஒரு வெட்கம் தன்மையானது இது குணத்தின் அடிப்படையில் வெளிப்படுவதாகும். இதனைப் புறப்புலவர்கள் மன்னனுக்கு பொருத்திக் காட்டியுள்ளார்.

கோவூர் கிழார் சோழன் நெடுங்கிள்ளியை வாகைத் திணையில்,

“அறவையாயின் ‘நினது’ எனத் திறத்தல்

மடிவை யாயின் போரொடு நிறுத்தல்

அறவையும் மறவையும் அல்லல் யாகத்

திறவாது அடைத்த திண்ணிலைக் கதவின்

நீள்மதில் ஒருசிறை ஒருங்குதல்

நாணுத் தகவுடைத்திது காணுங் காலே''[50]

எனப் பாடுவர். இதில் பொருளாவது நீ அறன் உடையவனாயின், அரசனைத் திறத்தால் செய்வாயாக. மறம் உடையதாயின் எதிர்த்துப் போர் செய்க. அவ்வாறு இன்றித் திறவாது அடைக்கப்பட்ட திண்ணிய நிலையுடைய கதவுகள் அமைந்த நெடுமதலின் ஒரு பக்கத்தே நீ பதுங்கியிருத்தல் எண்ணிப் பார்க்கும் போது நாணும் தன்மையது. அம்மன்னன் போரிடவில்லையெனில் வீரத்தில் மேன்மைத் தன்மையதாகத் திகழ்வான் என்பது பொருள் ஆகும்.

பெண்மையின் நாணத்திற்கும் ஆண்மையின் நாணத்திற்கும் பொருள்நிலை வேறுபாடு உண்டு என்பதை,

''பெருமையும் உரணும் ஆடூஉ மேன''[51]

எனத் தொல்காப்பியர் எடுத்துரைப்பது ஒப்புதற்குரியதாகும். புலவர்கள் மன்னனுக்கு உரிய வெட்கம் இல்லாத வீரம் வேண்டும் என உரைப்பார்.

''தம்புகழ் கேட்டான் போல் தலைசாய்ந்து மரம் துஞ்ச''[52]

என நல்லந்துவனார் கலித்தொகையில் உரைப்பர். நாணத்தைக் குறித்துத் திறனாய்வு அறிஞர்கள் ஆணுக்கும் பெண்ணுக்குமான கோட்பாடாக முன் நிறுத்துகின்றனர்.

''குணங்களை இரண்டு கூறாகப் பிரிக்கலாம் ஒன்று பெண்மைக் குணத்தொகுதி மற்றொன்று ஆண்மைக் குணத்தொகுதி. பெண்மைக் குணங்களாவன. அழகு, அடக்கம், பொறுமை, தியாகம், பாநலம், இரக்கம், வீரம் முதலியன. ஆண்மைக் குணங்களாவன, கரடு, முரடு அவா, பொறாமை, தன்னலம், சீற்றம் முதலியன. ஆண்மகன் கரடும், முரடும், சுருளும், திரிவும், பிளவும் நிரம்பிய பட்டைகள் போர்த்த வலிய மரம் போன்றவன். பெண் மகள் 'அக்கரடு, முரடு முதலிய கொடுமைகளை ஒடுக்க, அம்மரத்தைச் சுற்றி, மனத்துக்கினிய பசுமை வழங்கும் மெல்லிய பூங்கொடி போன்றவள். இக்குணமில்லாதவள் பெண் ஆக மாட்டாள்.

இக்குணமுள்ள ஆண்மகனும் பெண்மை பெற்றவன் ஆவான்''[53] என்பார் திரு.வி.க. இதனைப் பாரதியார்,''பெண்களை மிருகங்களாக வைத்து ஆண்கள் மட்டும் மகரிஷிகளாக மாற முயலும் மூடத்தனம் பெண்மை உயராமல் ஆண்மை உயராது''[54] இது தமிழருவி மணியனின் கூற்றாகும். திரு.வி.க வும், தமிழருவி மணியனும் நாணம் எத்தகையது என்பதைச் சுட்டிக்காட்டுகிறார்கள்.

''உயிரினும் சிறந்த நாணும் நனிமறந்து

உரைத்தல் உய்ந்தனனே தோழி''[55]

என்பார். இதன் பொருளாவது உயிரைக் காட்டிலும் சிறந்த நாணத்தை மிக மறந்து, தலைவி தலைவன் மார்பு, அணங்கு எனக் கூறியதற்கு வருந்துகிறாள். நற்றிணைத் தலைவி, தலைவனின் பார்வையை 'அணங்கு' என்கிறாள். அணங்கு என்பதற்கு பெண் என்பது ஒரு பொருளாகும். கோவூர் கிழார் சோழன் நெடுங்கிள்ளியை மதிலுக்குப் பின்புறம் மறைந்திருப்பது நாணத்தின் பாற்பட்டது என்பார்.

## புகழ்ச்சி புகழ்ச்சி

புகழ்ச்சி உயிருக்கு மேன்மையைத் தருவது. இகழ்ச்சி உயிருக்குக் கீழ்மையைத் தருவது. இரண்டும் நேர் எதிர் காரணிகள்; வாழ்வில் நிகழக் கூடியனவாகும். உழைப்பு, ஒழுக்கம், பண்பு, கடமைத் தவறாமை ஆகியவைகள் புகழ்ச்சிக்கு வலு சேர்ப்பதாகும். காலம் தவறுதல், சொல்லுக்கும் செயலுக்கு எதிர் நிலையில் நிற்றல், கடமையைக் காற்றில் விட்டல் ஆகியவைகள் இகழ்ச்சியை உண்டாக்குபவைகள் ஆகும். புகழ், இகழ் இரண்டிற்கும் வள்ளுவர் தனித்தனி அதிகாரங்களைப் படைத்து உள்ளார். புகழை அறத்துப்பாலில் இல்லற இயலின் இறுதி அதிகாரமாகப் படைத்துள்ளார். இதனை பொருட்பாலில் அங்கவியலில் வைத்து மூன்றாவது அதிகாரமாகப் படைத்துள்ளார். ''இல்லறத்தின் வீவாதார்க்கு இம்மைப் பயனாகி இவ்வுலகின்கண் நிகழ்ந்து இறவாது நிற்கும் கீர்த்தி இது''[56] எனப் பரிமேலழகர் அதிகார வைப்பு முறைக்கு விளக்கம் அளிப்பார்.

“வெகுளி காமங்களுள் அரசருக்கு வெகுளி பெரும்பான்மைத்தாகலின் அதனான் வருவன கூறுவான் தொடங்கி முதற்கண் இதன் கூறுகின்றார். அஃதாவது இருவர் தம்முள் பொருது வலி தொலைதற்கு ஏதுவாய் மாறுபாடு”[57] எனப் பரிமேலழகர் மகிழ்ச்சி அதிகாரத்திற்கு வைப்பு முறை விளக்கம் அளிப்பார்.

திருக்குறள் எண்கள் 231 முதல் 240 வரை உள்ள பத்துக் குறள்களும் புகழின் சிறப்புகளை எடுத்து உரைக்கின்றன. திருக்குறள் எண்கள் 851-முதல் 860 வரை உள்ள பத்து குறள்கள் இகழ்ச்சியின் இயல்பினைச் சுட்டுகின்றன. புகழும், இகழும் புலவர்களின் முதன்மையான பாடுபொருள் என்று புலனாகிறது.

மாங்குடி கிழவர் என்றும் புலவர் இவருக்கு மாங்குடி மருதனார் என்ற பெயரும் உண்டு. இவர், பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனை வாகைத்திணையில்,

“அடுகளம் வேட்ட அடுபோர்ச் செழிய!
ஆன்ற வேள்வி, அடங்கிய கொள்கை,
நான்மறை முதல்வர் சுற்றமாக
மன்னர் ஏவல் செய்ய, மன்னிய
வேள்வி மற்றிய வாய்வாள் வேந்தே”[58]

எனப் பாடுவார். இப்பாடலுக்கு,

“நான்மறை முதல்வர் வேந்தரைச் சுற்றியிருத்தல் வேள்வி செய்தற்பொருட்டு இராயசூய முதலிய கேள்விக்கண், நான்மறை முதல்வர் வேந்தர்க்கு மறைவழி காட்டும் சுற்றமாக, ஏனை வேந்தர் வேள்வி வினைக்குத் துணையாக ஏவல் செய்வார். இப்பாண்டியன் வீரரைக் கொண்டு கள வேள்வியும் நான்மறை முதல்வரைக் கொண்டு ஏனைத் தீ வேள்வியும் செய்தான் என்பதாம். போரிற் பட்டு வீழ்ந்தோர் துறக்கம் புகுதலின் தோற்றவராயினர் என்றார்”[59] என உரை வகுப்பர்.

“நின் பகைவரும் ஒருவாற்றால் நோன்பு இயற்றிச் சிறந்தவரேயாவார். நின்னுடைய ‘மாற்றர்’ என்ற பெயர் பெற்று, நினக்கு ஆற்றாராய் அவர் மடிந்தாலும், வீர மரணம் எய்திப் புகழ் பெறுகின்றார்கள்”[60] எனப் புலியூர்கேசிகன் உரை பகர்வார்.

வெற்றி பெறுதல் புகழ்ச்சிக்கு உரியது. தோற்றல் என்பது இகழ்ச்சிக்கு உரியது. ஆயினும், மாங்குடி மருதன் பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் புகழ்ச்சிக்கு உரியவளே எனக் கூறி, இவனின் புகழ்ச்சி, தோற்றவனின் இகழ்ச்சிக்கும் புகழை உண்டாக்கி இருக்கிறது எனப் பாடுவது எண்ணத்தகுந்ததாகும்.

“நிறை உடைமை, நீர்மை, உடைமை, கொடையே
பொறை உடைமை, பொய்ம்மை,
புலாற்கண் மறை உடைமை
வேய் அன்ன தோளாய்! –
இவை உடையான் பல்உயிர்க்கும்
தாய் அன்னன் என்னைத்திகும்”[61]

என்று ஏலாதி,

“உடம்பு ஒழிய வேண்டின், உயர்தலம் மற்று ஈண்டு

இடம் பொழிய வேண்டுமேல்,ஈகை, மடம் பொழிய வேண்டின், அறிமடம் வேண்டேல், பிறர்மனை ஈண்டின் இயையும் திரு”[62] என்பது சிறுபஞ்சமூலம்.

கணிமேதாவியார் உரைக்கும் இகழ்ச்சியின் தன்மையும் காரியாசான் பகரும் புகழ்ச்சியின் தன்மையும் ஈண்டு ஒப்பு நோக்குதற்குரியதாகும்.

## வெற்றியும் தோல்வியும்

கோவூர் கிழார் சோழன் நலங்கிள்ளியையும், நெடுங்கிள்ளியையும், வஞ்சித்திணையில்,

“இரும்பிணை வெண்தோடு மலைந்தோன் அல்லன்;
கருஞ்சினை வேம்பின் தெரியலோள் அல்லன்;

நின்ன கண்ணியும் ஆர்மிடைந் தன்றே

ஒருவீர் தோற்பினும், தோற்பதும் குடியே''[63]

எனப் பாடுவார். சோழன் நெடுங்கிள்ளி உறையூரில் இருக்கையில் அதனை அறிந்த நலங்கிள்ளி உறையூரை முற்றுகையிட்டார். இருவரும் சோழர்குடி மன்னர்கள் ஆவர். இந்நிகழ்வைக் கோவூர்கிழார் அறிகிறார். இவர்கள் பேரிடுவது தவறு என்று உரைப்பது கிழாரின் துணிவு. இப்போரினைத் தவிர்க்க வேண்டும் என நினைக்கிறார். அதன் பொருட்டே இப்பாடலைப் பாடியுள்ளார். இந்தப் பாடலில் சேர சோழ பாண்டியர் மூவரும் தம்முள் போரிட்ட வண்ணம் இருந்துள்ளனர் என்பதை உணர முடிகிறது. கோவூர்கிழார் சேரன் பனம்பூ சூடியவன் என்றும், பாண்டியன் வேப்பம்பூ சூடியவன் என்றும் குறிக்கிறார். நின்னோடு போரிடுபவன் கண்ணிப்பூவைச் சூடியவன். நீங்கள் இருவரும் போரிடுவது முறையன்று என்னும் கருத்தினை முன்வைக்கின்றார்.

வெற்றி ஒருவனுக்கும், தோல்வி ஒருவனுக்கும் என்பதே உலக நியதி. நீங்கள் போரிடுவது சேரனுக்கும் பாண்டியனுக்கும் உவகையை உண்டாக்கும். ஆகவே, போரைத் தவிர்க்க வேண்டும் என அறிவுரை கூறுகிறார்.

''ஏ.வி.சுப்பிரமணிய அய்யர் கோவூர்கிழார் சங்க காலத்துப் புலவரில் ஒருவர். அவர் பாடல்கள் பதினைந்தும் புறநானூற்றிலும் ஒவ்வொன்றும் நற்றிணையிலும், குறுந்தொகையிலும் தொகுக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால் மெய்க்கீர்த்தி வரைதல் என்பது ஒரு பழைய முறை என்றே கருதலாம். இது பரிசிலுக்காகப் புலவர் பாடுவதினின்றும் வேறுபட்ட ஒருமுறை என்பது வெளிப்படை. ஏனென்றால் வேந்தர் மெய்ப்புகழ் எல்லாம் சொல்வது மெய்க்கீர்த்தி என்கிறார். இதனால் உண்மை இல்லாத வெறும் புகழ்ச்சிகளும் புனைந்துரைகளும் மெய்க்கீர்த்தி ஆகாது என்பது தெளிவாகிறது.

நவநீதப் பாட்டியலின் உரையிலும் அரசருடைய உண்மைப் புகழைக் கூறுவது மெய்க்கீர்த்தி என்றிருக்கிறது.

இதில் வரும் ‘அரசன்’ செயல் என்பதிலிருந்தும் வச்சணந்தி மாலையிலிருக்கும் ‘செய்தி இசைப்பர்’ என்ற தொடரிலிருந்தும் இந்தக் கருத்துத் தெளிவாக்கப்பட்டிருக்கிறது. மெய்க்கீர்த்திகள் அரசருடைய போர்ச் செயல்களையும், கொடைகளையும், பிற செய்திகளையும் உள்ளதை உள்ளவாறே கூறும் பாடல்களாகும்’’[64] எனத் தெளிவான ஆய்வுரையை வழங்கியுள்ளார்.

மன்னனின் உண்மையான வேலையை உரைத்தலே மெய்க்கீர்த்தியாகும். சோழனுக்குக் கோவூர்கிழாரின் பாடல் போர் நெறிக்குரிய அறச் சட்டமாகும்.

## யாருடன் போர்

வீரம் என்பது தகுதியானவரை எதிர்ப்பதே ஆகும். வீரத்தின் அழகு வீரத்தின் செயல்பாட்டில் உள்ளது. வீரம், விவேகம் என்னும் சொற்கள் ஆழ்ந்த பொருளுடையதாகும். சங்க காலத்தில் ஆடவருக்கு வீரம் என்பது போர் புரிதலைக் குறிக்கும். பெண்டிருக்கு வீரம் என்பது அந்த ஆடவனின் வீரத்தைப் போற்றுதல் ஆகும். கலிங்கத்துப்பரணி செயங்கொண்டார் ‘நலம்பாதி’ என்ற பகுதியில் ஆணின் வீரத்தையும் பெண்ணின் வீரத்தையும் பாடுகின்றார். ஒருவர் விழுப்புண் பட்டுமாண்டு போகிறார். ஆவரின் உடலை நிலமகள் தாங்குவதற்கு முன்பாகவே தன் மடியில் தாங்கினாளாம். இந்த பொருண்மையில் வீரத்தின் அழகைக் காணலாம். சோழன் குளமுற்றத்துக் கிள்ளிவளவனை ஆலத்தூர் கிழார் வஞ்சித்திணையில் உள்ளிருந்து முடிக்கும் என்பது வஞ்சித்திணை துணை வஞ்சியாகும்.

> ‘‘ஆங்கு இனி திருந்த வேந்தனோடு,ஈங்கு நின்
> நிலைத்தார் முரசம் கறங்க
> மலைத்தனை என்பது நாணுத் தகவு உடைத்தே’’[65]

எனப் பாடுவார்.

ஆலத்தூர் கிழாரின் உட்கிடக்கை யாதெனில் கிள்ளிவளவன் நல்ல வீரனோடு போர் புரிய வேண்டும் என்பதே. ஆனால், கிள்ளிவளவனின் வீரர்கள் காவல்காடுகளில் மரங்களை வெட்டுகின்றனர்.

மணம் வீசும் அம்மரங்கள் வீழ்ந்து கிடக்கின்றன. இவ்வீரர்களையெல்லாம் சேரன் காதுகளில் ஒலிக்கிறது. அதைக் கேட்டுச் சேரன் போருக்கு வர வேண்டும். ஆயினும் போருக்கு வரவில்லை சேரன். இது எத்தகையது ஆயின் மன்னனுக்கு வெட்கம் தரும் செயல் ஆகும். ஆகவே அவனிடம் போரிடுவதும் பேரிடாமல் இருப்பதும் உன் மனம் சார்ந்தது என்கிறார். இப்பாடலின் கருத்து என்னவெனின், வீரம் இல்லாதவன் மன்னன் இல்லையென்பதும், அவனிடத்துப் போரிடுபவன் சிறந்த வீரனுமில்லை என்பதைத் தெள்ளிதின் உணரலாம். இப்பாங்கு புறப் புலவர்களுக்கே உரியதாகும்.

''தமிழ் வீரப் பாடல்களிலும் கரிகாலன், நெடுஞ்செழியன், நெடுஞ்சேரலாதன் முதலிய சிலரே முழுமையான பாத்திரங்களாக வார்க்கப்பட்டுள்ளமை நோக்கத்தக்கது. உதாரணமாகத் தமிழ் வீரயுகப் பாடல்களில் இடம்பெறும் தலைமக்கள், பெரியோர் ஒழுக்கத்து மாறானவற்றிற்கு நாணுபவராய், பழியஞ்சுபவராய்த் தமக்கென ஓர் அறக்கோட்பாடுடையவராய்க் காணப்படுகின்றனர். தாண், பழி, அறன் ஆகிய சொற்கள் இங்கு கவனிக்கத்தக்கன''[66] என்பர் க.கைலாசபதி.

வீரம் இல்லாதவனுக்கும் போர்புரிதல் வழியையும், நாணத்தையும் உண்டாக்கி விடும் என்பது புலவரின் துணிந்த கருத்தாகும்.

வீர யுகத்தில் தமிழ்ப் பெண்கள் எவ்வாறு இருந்தனர் என்பதைக் கலித்தொகையில் நல்லுருத்திரனார்,

''கொல்லேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும்
புல்லாளே ஆய மகள்''[67]

எனப்படுவது இங்கு நோக்கத்தக்கது ஆகும்.

## வஞ்சினம்

வஞ்சினம் கூறுதல் என்பது மன்னனின் மொழியாகும். வஞ்சினத்தின் மொழியியலாளர்கள் வாழ்வியல் ஒழுகலாளர் குறித்தே அமைந்துள்ளன. வஞ்சினத்தைப் புலவர்கள் பாடுபொருளாகக் கொள்வதன் நோக்கம் மன்னனின் செம்மார்ந்த ஆட்சிமுறையை விளக்குவதே ஆகும். புறநானூற்றில் வஞ்சினக் காஞ்சித்துறையில் புறம் - 71, 72, 73 ஆகிய மூன்று பாடல்கள் காணப்படுகின்றன.

ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியனின் பாடல் வஞ்சினத்திற்கு உரிய சிறப்புப் பாடலாக இருக்கிறது. பாண்டியன் தலையாலங்கானத்து நெடுஞ்செழியன், சோழன் நலங்கிள்ளி இவ்விருவரும் மன்னர்களே ஆவர். மேலும் இல்லறச் சிறப்பும், செங்கோல் ஆட்சியும், நட்பின் சிறப்பும், நாட்டுப்பற்றும் உரைக்கப்படுகிறது.

புறம் 72-ல் புலவர் சிறப்பு வஞ்சினமாக உரைக்கப்படுகிறது. புறம் 73-ல் ஆடவரின் கற்புநெறி வஞ்சினமாக உரைக்கப்படுகிறது.

> ‘‘ஆரமர் இல்லறத் தாக்கி தேரொடு
> அவர்ப் புறம் காணேன் ஆயின் - சிறந்த
> பேரமர் உண்கண் இவளினும் பிரிக’’[68]

இதன் பொருளாவது பகைவரைப் போரின்கண் அலறுமாறு தாக்கி அவர் தேரொடு புறங்காட்டி ஓடக் காண்பேன். அவ்வாறு காணேன் ஆயின் பெரியதும் மையுண்டதும் ஆகிய சிறந்த கண்ணையுடைய என்பது வஞ்சினமாகும். இல்லாளோடு இனிதே இருத்தல் சங்க கால வாழ்வியல் மரபாக இருப்பதை அறிய முடிகிறது. இல்லாளைப் பிரிதல் என்பதே சமூக அறமற்ற செயலாகும் என்பதை இவ்வஞ்சினக் கூற்று உணர்த்தி நிற்கிறது.

> ‘‘அறன்நிலை திரியா அன்பின் அவையத்துத்
> திறன் இல் ஒருவனைத் தாட்டி, முறை திரிந்து
> மெலிகோல் செய்தேர் ஆகுக’’[69]

இதன் பொருளானது, அறநெறி மாறாத அன்புடையோருக்குரிய அவையில் தகுதி இல்லாத ஒருவனை அமர்த்தி முறை கெட்டுக் கொடுங்கோல் செய்தேன் ஆகுக என்பதாகும்.

அற இலக்கியத்தில் தலைமை நூலான திருக்குறளில் செங்கோன்மை (அதிகாரம் - 55) கொடுங்கோன்மை (அதிகாரம் - 56) என்னும் இரண்டு அதிகாரங்கள் உள்ளன. இவைகள் மன்னனின் ஆட்சிமுறையைப் பற்றியதாகும். இவற்றைத் திருவள்ளுவர் அரசியலிலேயே அமைத்துள்ளார். அரசர்கள் நல்லாட்சி புரிதல் வேண்டும் என்பது பொருளாகும்.

"வான்நோக்கி வாழும் உலகுஎல்லாம் மன்னவன்
கோல் நோக்கி வாழும் குடி"[70]

இக்குறள் செங்கோன்மை ஆட்சிக்கு எடுத்துக் காட்டாகும். ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் செங்கோல் ஆட்சிக்கு வழங்கிய முதன்மைத் தன்மையை வள்ளுவரின் குறள்வழி அறிந்து கொள்ளல் நலம் பயக்கும்.

"வையை சூழ்ந்த வளங்கெழு வைப்பின்
பொய்யா பாணன் மையற் கோமான்
மாவனும் மன்எயில் ஆந்தையும் உரைசால்
அந்துவந் சாத்தனும், ஆதன் அழிசியும்
வெஞ்சின இயக்கனும் உளப்படல் பிறகும்
கண்போல் நன்பற் கேளிரொடு கலந்த
இன்களி மகிழ்நகை இழுக்கி, யான் ஒன்றே"[71]

இதன் பொருளாவது, கையவளம் அமைந்த ஊர்களில் தப்பாக வருவாம் உடைய மையல் என்னும் ஊரின் தலைவன் மாவன் என்பானும், வலிய மதில் (மன் எயில்) பெயருடைய எயில் என்னும் ஊரின் ஆந்தை என்பானும் அந்து வஞ்சாத்தன், ஆதன் அழிசி, பெருஞ்சினமுடைய இயக்கன் என்பாரும் உட்பட்ட மற்றவரும் ஆகிய கண்ணைப் போன்ற நண்பருடன் கலந்துறையும் மகிழ்வு நலம் இழந்தவன் ஆகுக என்பதாகும்.

"ஒருவர் பொறை, இருவர் நட்பு"[72]

நட்பின் இயல்பை பழமொழி உணர்த்தும்.

இதே அடியை நாலடியார் ‘ஒருவர் பொறை இருவர் நட்பு’ எனக் குறிக்கிறது. இவ்விரண்டு அற நூல்களும் நட்பில் பிழை பொறுத்தல் என்னும் நோக்கத்திலேயே இதனை உணர்த்துகின்றன. நண்பர்கள் பிழையைப் பொறுக்க வேண்டும் என்பதே இயல்பு. அதனால்தான் பூத பாண்டியன் தன் நண்பர்களின் பெயர்களையெல்லாம் கூறி வஞ்சினம் உரைக்கிறான். இது நட்பின் ஆழத்தையும் வஞ்சினத்தின் ஆற்றலையும் உணர்த்துகின்றது.

“மன்பதை காக்கும் நீள்குடிச் சிறந்த
தென்புலம் காவலன் ஒரீஇப், பிறர்
வன்பு லங் காவலின் மாறியான் பிறக்கே”[73]

இதன் பொருளாவது, காவற் கடமை பூண்ட அரசர் குடியில் சிறந்த பாண்டிய நாட்டை ஆளும் நிலை மாறிப் பிறர்க்குரிய வளமற்ற நிலம் காக்கும் குடியில் பிறப்பேனாக என்பதாகும்.

சிலப்பதிகாரத்தில் பாண்டியன் நெடுஞ்செழியன் மண்பதைக் காக்கும் புலவர் தென்புலம் காவல் என்தேர் பிழைதல் என்பார். குடில்கள் மீது மன்னன் கொண்டிருந்த ஆழமான நம்பிக்கையை உணர்த்துவதாகும்.

“ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் தலைவன் ஆக,
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்
புலவர் பாடாது வரைக, என் நிலவரை”[74]

இதன் பொருளாக உயர்ந்த சிறப்பும் மேலான கேள்வி அறிவும் உடைய மாங்குடி மருதன் தலைமையன் ஆக உலகம் உள்ள வரை புகழ் அமைந்த புலவர் பலரும் என் நாட்டைப் பாடாது நீங்குவாராக.

மன்னர்கள் புலவர்களின் பாடுரையை உயிராக ஓம்பியதை இதன் மூலம் அறியலாம்.

கற்பு என்பதை பெண்ணுக்கு மட்டுமே உணர்த்துவது தமிழ்ச் சமூகத்தின் மரபாகும். இதைப் பாரதியார் ஆணுக்கும் பெண்ணுக்கும் பொதுவில் வைப்போம் என்கிறார். கம்பனும்,'சிந்தையாளும் தொடேல்' என ஆணக்குக் கற்பை எடுத்துரைத்தார்.

சிலப்பதிகாரத்தில் பாண்டிய மன்னன் உயிர் துறக்க மனைவி தானும் துறந்தாள். இப்படி கற்பின் அழகைக் களவியல் பொருளில் உணர்த்துவார்.

"தீது இல் நெஞ்சத்துக் காதல் கொள்ளப்
பல்லிருங் கூந்தல் மகளிர்
ஒல்லா முயக் கிடைக் குழைக என்தாரே"[75]

என சோழன் நலங்கிள்ளி ஆடவர் கற்பின் உயரிய கோட்பாட்டை முன் வைப்பார். மன்னன் மனம் இல்லாத பெண்ணை கலப்பதாக உரைக்கிறார். பரத்தையர் ஒழுக்கம் தவறு என்பதும் இல்லற ஒழுக்கம் உயர்ந்தது என்பதும் இதன்வழி அறியலாகிறது.

**ஆடவர் ஒழுக்கம்**

ஔவையார் பொதுவியல் திணையில்,

"நாடா கொன்றோ; காடா கொன்றோ
அவளா கொன்றோ; மிசையா கொன்றோ
எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை; வாழிய நிலனே"[76]

எனப் பாடுவார். நற்பண்பும் நற்செயலுமுடையாரை 'நல்லர்' என்கிறார். "ஆடவன் இளமைச் செவ்வி நிரம்பினானை ஆடவனென்றல் இயல்பு வாழ்விற் பெறற்குரிய நலமுற்றும் பெறுதற்குரிய செவ்வி இளமை, அதனால் இன்மையாற் சிறந்த வளமையுமில்லை என்பர் சான்றோர்.

அவ்வளமை நற்பண்பும் நற்செயலும் உடைமையாதலின், அதனை உடையோரே நாட்டின் நலத்துக்கும் இசைக்கும் காரணமாய் அமைந்தவர்கள் தாங்கும் தூண்கள்”[77] போன்றவர்கள் என்பதை ஔவை துரைசாமிப்பிள்ளையின் விளக்கமாகும். இதனையே சிலம்பில்,

கோவலன்,

“மாநகர் மருங்கீண்டு

எழுகென எழுந்தாய் என்செய் தனையென”[78]

என்கிறார்.

அனைத்தையும் இழந்து விட்டான் கோவலன். அந்நிலையிலும் கண்ணகி எந்த மறுப்புரையும் கூறாமல் மதுரைக்குப் புறப்பட்டாள். இதனை இளங்கோவடிகள் “எழுகவென எழுந்தாய்” எனக் கோவலனின் கூற்றாக வைத்தது கண்ணகியின் உயர்ந்த பண்பை உணர்த்துவதே ஆகும். இதே குறிப்பினைக் கம்பனும் சுட்டுவான். இராமனை வஞ்சித்தும் பிரிய மனமில்லாமல்,‘நிம்பிரிவினும் சுடுமோ பெருங்காடு’ என சீதையின் கூற்றாக முன்வைக்கிறார். காந்தாரி கணவனுக்காக கண்ணையே மறைத்துக் கொண்டாள். இந்தக் காப்பிய நிகழ்வுகள் எல்லாம் ஆடவரின் செம்மாந்த கற்புநெறியை விளக்கி ஆடவரின் ஒழுக்கப் பேணல் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

## செவியறிவுறூஉ

புறநானூற்றில் ‘செவியறிவுறூஉ’ என்பது துறையாகும். பகைமையும் கெடுதலும் அற்ற பெரிய எண்ணங்களை அரசனுக்கு உரைத்தல் என்பது பொருளாகும். “புறம் - 2, 3, 5, 6, 35, 40, 55, 184”[79] ஆகிய எட்டுப் பாடல்களில் புலவர்கள் மன்னர்களுக்குப் பல்வேறு நல்லுரைகளை எடுத்து இயம்பி உள்ளனர்.

"காய்நெல் அறுத்துக் கவளங் கொளினே
மாநிறைவு இல்லதும், பன்னாட்டு ஆகுக
நூறு செறு ஆயினும், தமித்துப்புக்கு உணினே
வாய்புகு வதனினும் கால்பெரிது கெடுக்கும்
அறிவுடை வேந்தன் நெறியறிந்து கொளினே"[80]

என்று பாடுவார் பிசிராந்தையார். இதன் பொருளாவது ஒரு **மாவுக்கும்** குறைவான நிலையினும் அதன்கண் விளைந்த நெல்லை அறுத்து கவளம் கவளமாக யானைக்குக் கொடுத்தால் பல நாட்களுக்கு உணவாகும். இவ்வாறின்றி யானையை நிலத்தில் புகச் செய்தால் யானை உட்கொண்டதை விட அதன் காலில் மிதிபட்டு சிதைந்தது அதிகமாக இருக்கும்.

"நத்தம் போல் கேடும் உளதாகும் சாக்காடும்
வித்தகர்க் கெல்லால் அரிது"[81]

இது 'புகழ்' அதிகாரத்தில் வள்ளுவர் படைத்த குறளாகும். துயர் உற்றாலும் ஈந்து புகழை வளர்த்தலும் உலகில் புகழை நிலைநாட்டி இகழ்தலும் ஆற்றல் மிக்கோர் மட்டுமே செய்யக் கூடிய செயலாகும். அவை பிறரால் ஆக என்பது பொருளாகும்.

"பொது நோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்
அது நோக்கி வாழ்வான் பலர்"[82]

இது சுற்றம் தழால் என்னும் அதிகாரத்தில் உள்ள குறள். அவரவர் தகுதிக்கு ஏற்ப நடந்து கொள்பவனைச் சுற்றத்தார்கள் சூழ்ந்து வாழ்வார்கள் என்பது இதன் பொருளாகும்.

நவீன காலத்தில் மேலாண்மை என்னும் துறையை உலகம் முழுவதும் பேசுகிறது. ஆங்கிலத்தில் 'சிஸ்டம்' (System) இதனைக் குறிப்பர். திறன் மேம்பாடு என்பதற்கு ஒரு பட்டத்தை வழங்குவதற்கு பல்கலைக் கழக மானியக்குழு ஆய்வு செய்து கொண்டுள்ளது. ஆயினும் சங்கப் புறப்புலவர் பிசிராந்தையபர் யானையின் உவமையைக் கொண்டு நிர்வாக மேலாண்மைக்கு உதாரணம் காட்டியுள்ளார்.

இதனைப் புறநானூறு செவியறிவுறூஉ என்கிறது. புறப்புலவர்களின் கோட்பாடுகள் பல்வேறு நவீனத் துறைகளை உருவாக்கும் என்பது உண்மையாகும்.

## இரவலருக்கு உதவுதல்

ஊன்பொதி பசுங்குடையார் சேரமான் பாமூரெறிந்த நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னியைப் பாடாண் திணையில்,

"கழிந்தது பொழிந்தென வான்கண் மாறினும்
தொல்லது விளைந்தென நிலம்வளம் சுரப்பானும்
எல்லா உயிர்க்கும் இல்லால் வாழ்க்கை
இன்னும் தம்மென எம்மனோர் இரப்பின்
முன்னும் கொண்டிர்என நும்மனோர் மறுத்தல்"[83]

எனப் பாடுவார்.

மலை மாறலாம்; நிலம் மாறலாம்; உயிர் காக்கும் மன்னன் என்றென்றும் மாறல் ஆகாது என்கிறார். பரிசில் பெறுவது என்பது புலவர்களின் இயல்பு என்பதனை மறுக்கக் கூடாது. அவரைக் காக்க வேண்டியது உன்னுடைய கடப்பாடாகும்.

"பண்டைக் காலத்தில் பெரும்பாலான தமிழ்ப் புலவருக்குப் பரிசிலுக்காகப் பாட வேண்டிய வாழ்க்கையே கிட்டியிருந்தது என்பது உண்மை. இருந்த போதும் இதற்கு விலக்காகவும் சில புலவர்கள் இருந்திருக்கிறார். தங்கள் கலையில் மேன்மையையும், அறிவான் திறத்தையும், கவிதையின் சிறப்பையும் உணர்ந்து வள்ளல்களை அண்டிப் பிழைக்கும் வாழ்வை உதறித் தள்ளித் தன் மதிப்புடன் வாழ்ந்தனர். வேறு சிலர் கொடுக்கும் வள்ளல்களைப் போற்றுவதுடன் நின்று விடவில்லை. கொடுக்காதவரைப் பழிக்கும் துணிவும் கொண்டிருந்தார்"[84]

என்னும் சுப்பிரமணிய ஐயரின் மன்னன் - புலவர் – பரிசில் எவ்வாறு இருந்தன என்பதை உணர்ந்து கொள்ள ஏதுவாகும். புறநானூற்றுப் புலவர்கள் இரத்தல் இழிவு என்றே கூறுவர்.

இருப்பினும் இரத்தல் இல்லாமல் வாழ முடியாத சூழல் சங்கப் புலவர்கள் வாழ்க்கையில் பரவலாகக் காண முடிகிறது. ‘‘ஈயென இரத்தலோ அரிதே’’[88] என மோசிகீரனார் பாடுவது எத்தகைய பொருள் உடையதாகும். கழைதின் யானையார்,

‘‘ஈயென இரத்தல் இழிந்தன்னு; அதன்எதிர்
ஈயென் என்றல் அதனினும் இழிந்தன்று
கொள் எனக் கொடுத்தல் உணர்ந்தன்று; அதன்எதிர்
கொள்ளேன் என்றல் அதனினும் உயர்ந்தன்று’’[85]

எனப் பாடுவார்.

‘‘இரத்தல் முதல் நான்கிற்கும் ஈயென இரத்தலால் இழிவு என்று கொள்ளேன் என்னும் உயர்வு யான் பெற்றிலேன் என்பதூஉம், அவ்வாறு இரப்பவும்,ஈயென்’’[86] என்றாற் போலப் பரிசில் நீட்டித்தலால் உள்ள இழிவு பெற்றுக் கொள்ளெனக் கொடுக்கும் உயர்ச்சி நீ பெற்றிலையென்பதூஉம் கருத்தாகக் கொள்க. இதனால் ஈயேனென்னும் இழியினும் கொள்ளெனக் கொடுக்கும் உயர்ப்பினும் நினக்கும் தக்கறிந்து செய்யென்பது கூறினாராம்.’’[87] என ஔவை துரைசாமிபிள்ளை உரை பகிர்வார். இரத்தலும் கொடுத்தலும் தகுதியானும் சூழ்நிலையானும் உணர்ந்து கொள்க என்பதே பொருளாகும்.

பரணர் பதிற்றுப்பத்தில்,

‘‘கலஞ்செலச் சுரத்தல் அல்லது கனவினும்
களைக என அறியாக் கசடுஇல் நெஞ்சத்து
ஆடுநடை அண்ணல்’’[88]

எனப் பாடுவார்.

கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் கனவிடத்தும் என் துன்பத்தை நீங்குக என பிறரிடம் கேட்டு அறியாத மாசற்றவன் என அவன் இரங்காத மனதை எடுத்து உரைக்கிறார். புலவர்கள் இரத்தலையும், கொடுத்தலையும் சமநிலையில் பாடியுள்ளனர் என்பதை அறிய முடிகிறது.

**போர்நெறி ஆற்றுப்படுத்துதல்**

புறத்திணையியலில் ஏழு இயல்களும் போர் முறையும் சட்டங்களாகும். தொல்காப்பியர் இம்மறை வகுப்பதின் நோக்கம் அவருக்கு முன்பாக இருந்த தமிழ்ச் சமுதாயம் போரை ஒரு தொழிலாகவே கருதினர். பன்மொழிப் புலவர் அப்பாதுரையார் தென்னாட்டுப் போர்களன்கள் என்ற முறையைச் சங்க காலத்தில் ஐயாயிரத்திற்கும் மேற்பட்ட போர்கள் நிகழ்ந்ததாக கருத்துரைக்கிறார். இக்கூற்றுப் பொருள் இருக்குமோ எனில் பொருள் இருக்கும் என்றே தொல்காப்பியமும் புறநூல்களும் சான்றாக உ ள்ளன.

தொல்காப்பியர் பல்வேறு போர் முறைகளைக் குறிப்பிடினும் ‘‘சங்க காலத்தில் அரசனுடன் சார்த்திக் காவல்மரம் பரக்கப் பேசப்பெறும். ‘‘அரசனின் உடைமைகளை வருணிக்கும் தொல்காப்பியம் காவல் மரம் பற்றிக் குறிக்காமை அதன் பழமையைக் காட்டுவதாகும்’’[89] என க.ப.அறவாணன் போர் நெறியியல் குறித்த ஆய்வியலாக முன்வைக்கிறார். காவிரிப் பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார் பாண்டியன் இளவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனை வஞ்சித் திணையில்,

‘‘நின்னொன்று கூறுவது உடையேன் என்னெனின்,
நீயே! பிறர்நாடு கொள்ளும் காலை அவர்நாட்டு
இறங்குகதிர்க் கழனிநின் இளையரும் கவர்க!
நனந்தலைப் பேரூர் எரியும் நைக்க;
முன்னு நிமிர்ந் தன்ன நின் ஒன்று இலங்கு நெடுவேல்
ஒன்னார்ச் செருப்பினும் செருக்க; என்னதூஉம்
குடிமரம் தடிதல் ஓம்பு; நின்
நெடுநல் யானைக்குக் கலந்தாற்றூவே’’[90]

எனப் பாடுவார்.

நன்மாறனை பகைநாட்டில் விளை நிலங்களை கொள்ளையிடலாம்; போர் ஊர்களை எரிக்கலாம்; பகைவரை அழித்துக் கொள்ளலாம்.

ஆனால் ஒன்றை மட்டும் அழிக்காமல் இருத்தல் வேண்டும். அது யாதெனின் மன்னனது காவல் மரங்களாக இருத்தல் வேண்டும் என்பார்.

போர்நெறி புறப்பாடலில் சிலப்பதிகாரம் உரைத்தலில் ''பசுவும் பார்ப்பனரும் காக்கப் பட வேண்டும் என்ற வேட்கை வெளிப்படையாகப் பேசப்பட்டிருக்கிறது. இதனால் பார்ப்பனர், அரசர், வணிகர், வேளாளர் என்ற நால்வருள் போரினின்று பார்ப்பனர் மட்டும் ஊனப்படாமல் பசுக்களுடன் காக்கப்பட்டனர் என்பது தெளிவாகிறது''[91] என்னும் க.ப.அறவாணனின் கூற்று சங்ககாலப் போர் நெறிகளை அறிந்து கொள்வதற்கு ஏதுவாக அமைகின்றது.

## மன்னரும் தேவரும்

சங்க இலக்கிய வரலாற்றில் சங்க காலத்திய இலக்கிய முயற்சியைச் சமயச் சார்பற்ற ஒரு இலக்கிய முயற்சியாகக் கொள்ளலாம். திருமுருகாற்றுப்படை, பரிபாடல் போன்றவற்றை அறிஞர்கள் சிலர் கருதுவது போலச் சங்க காலத்திற்குப் பின்னர் தோன்றின எனக் கொண்டால், ஒரு சில பாடல்களே சமயச் சிந்தனையை அனுபவத்தை வெளிப்படுத்தும் நிலையில் புறநானூறு போன்ற தொகை நூல்களில் காண்பதாகக் கூற வேண்டும். இதனால் சமயச் சிந்தனையே பிற்காலத்தது என்பதன்று. மக்கள் வாழ்க்கையோடு சமயம் பிணைந்து நின்ற பிணைப்பைச் சங்க இலக்கியம் நமக்குத் தெளிவாகவே அறிவிக்கின்றது''[92] என்றும்,''புறநானூற்றில் வரும் சில பாடல்கள் கடவுளைப் பாடியன என்றே கூற வேண்டும்''[93] என ப.அருணாச்சலம் உரைப்பார். புறப்பாடல்கள் பற்றிய சமய உணர்வினை அறிவதற்கு ஏதுவாக வள்ளல் பெருமான் பொங்கு பல சமய நதிகள் எல்லாம் புகுந்து உலகிற்கு தங்கு தடை காணாத கடல் என ஒழுகுவர். இவற்றை அறிவது சிந்தையின் நோக்கமாகும் என்பது திருமூலரின் கோட்பாடாகும்.

பன்னிரு ஆழ்வார்களும் திருமாலையே புகழ்ந்து பாடி வைணவமாய் வாழ்கின்றனர். இதே நெறி சைவப் பெரியார்களுக்கும், இயேசு உயிர்த்து எழுந்தார் என்பது கடவுள் நம்பிக்கை மண்ணில் தழைத்து நின்றதற்கு மாபெரும் சான்றாகும். நபிகள் நாயகம் படிக்காதவர். பரமனை இவர் எனச் சொன்னார்.

உலகம் முழுமைக்கும் இறைக் கோட்பாட்டில் முரண்கள் இருக்கும். இறைவன் உண்டு என்பதை அறிவியல் அறிஞர்களும் மாறுபடவில்லை. இந்த உயரிய நோக்கத்தைப் புறப்புலவர்கள் மன்னனைத் தேவனாகவே கருதினர். அதோடு மட்டுமல்லாது உருக்காட்சியாகத் தம் பாடல்களில் பாடுவார்.

"அகல் இரு விசும்பி னானும்
பகல் விளங் குதியால் பல்கதிர் விரித்தே?"[94]

எனக் கபிலரும்,

"குடதிசைத்
தண் கதிர் மதியம் போலவும்
நின்று நிலை இயன் உலகமொடு, உடனே"[95]

என மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனாரும்,

"ஞாயிறு அனையை, நின் பகைவர் இருத்
திங்கள் அனையை, எம்ம னோர்க்கே"[96]

என மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனாரும்,

"உணத்தின
ஆனாப் பெருவளம் செய்தோன் வானத்து
வயங்குபன் மீனினும் வாழியர் பல"[97]

எனக் கல்லாடனாரும் பகர்வர்.

கபிலர் சேரமானை ஒரு நிலையில் இல்லாத தன்மையுடையவன். சேரனைக் கதிரவனோடு உவமித்துக் கூறுகிறார். இதைப் புறநானூறு பூவைநிலை எனும் துறையைப் பேசுகிறது. நக்கீரனார் நன்மாறனை வானத்து இருண்மை வெண்கதிர் ஞாயிறு போலவும், மேல் திசையில் விளங்கும் பிறை போலவும் உலகம் உள்ளளவும் சிறந்து விளங்குவனவாய் என்கிறார் சாத்தனார்.

நன்மாறனை பகைவருக்கு ஞாயிறாகவும், புலவர்களுக்குத் திங்களாகவும் குளிர்ச்சி தருகிறாய் என்கிறார். கல்லாடனார் நெடுஞ்செழியனை வானத்து மீனினும் பல்லாண்டு வாழ்க நீ என வாழ்த்துகிறார்.

நபிநாயக அடிகள் இயற்கை யாது எனின் என்னும் வினாவை எழுப்பி உலகம் தோன்றிய நிலையில் எது மாறாமல் உள்ளதோ அதுவே இயற்கை என்பார். பஞ்ச பூதங்கள் என்றென்றும் மாறாதவை.

“இறைவன் நீதியின் நிலைக்களன்; நீதி நெறியெல்லாம் நடத்திச் செல்பவன். அவனுடைய ஐந்தொழில்களில் படைப்பு, காப்பு, அழிப்பு என்பவை இருக்கின்றன. படைக்கப்பட்ட பொருள்கள் எல்லாம் இறுதியில் முற்றிலும் அழியும். கடவுளிமிருந்து கிளர்ந்து வந்தவை யாவும் அவனிடமே சென்று ஒடுங்கும். இதற்கிடையில் காத்தர் என்னும் தொழிலுக்கு என்ன தேவை என்ற கேள்வி எழலாம். ஆனால் சில உயிர்கள் உலகில் சில நாட்களே வாழ்கின்றன. ஏன் இந்த வேறுபாடு. அந்தந்த உயிர்களின் கர்மமே அந்த வேறுபாட்டிற்குக் காரணம் எனலாம்”[98] என்பார் பி.சோமசுந்தரம்.

நீதியாய் நின்ற நிலை இறைவன் என்றே பகுத்து ஆய்கிறார். புறப்புலவர்கள் மன்னர்களை இயற்கையான ஞாயிறு, திங்கள், கடல், விண்மீன் இவற்றுடன் ஒப்பிட்டு உரைப்பது நோக்குதற்குரியதாகும். இயற்கை உலகைக் காத்தலைப் போல மன்னனும் மக்களைக் காத்து நிற்க வேண்டும் எனில் மன்னன் என்பான் மக்களுக்குக் கடவுளைக் போன்று திகழ்பவன் எனச் சுட்டுவார்.

## போற்றுரைகள்

புறப்புலவர்கள் மன்னர்களின் செயல்பாட்டினைப் பன்னிலையில் போற்றி உரைக்கிறார். நெட்டிமையார், பாண்டியன் பல்யாகசாலை முது குடுமிப் பெருவழுதியை,

“நன்னீர்ப் பஃறுளி மணலானும் பலவே”[99]

எனப் போற்றுவார்.

இதே போன்று குறுங்கோழியூர் கிழார் சேரமான் யானைக்கண் மாந்தரஞ்சேரல் இரும்பொறையை,

"உடலுநா உட்க வீங்கிக் கடலென
வான்நீர்க்கு ஊக்கும் தானை, ஆனாது
நடு ஒருங்கு எயிற்ற அரவுத்தலை பனிப்ப
இடியென முழங்கு முரசின்
வரையா ஈகைக் குடவர் கோவே"[100]

எனப் போற்றுவார். மேலும்,

"விழவின் அற்று அவன் வியன்கண் வெறியே
கண்ண தண்ணணெனக் கண்டும் கேட்டும்
உண்டற்கு இனிய பல பாராட்டியும்
இன்னும் வருவதாக நமக்கு எனத்
தொன்முறை மரபினர் ஆகி"[101]

எனப் பெருங்குன்றூர் கௌசிகனார் பேய் நன்னனை மலைபடுகடாத்தில் போற்றி உரைப்பார்.

இத்தன்மையால் பெருவழுதியைப் ப.்.றுளி ஆற்றின் மணலை விட நீண்ட நாட்களாக நீ வாழ வேண்டும் என்கிறார். இம்மன்னன் போர் நெறியிலும் வாழ்வியல் நெறியிலும் மக்கள் போற்றும் வண்ணம் வாழ்ந்து காட்டியிருக்கிறார். நல்லவர் வாழ வேண்டும் என்பது புலவர் துணிவு.

குறுங்கோழியூர் கிழார் மன்னன் இரும்பொறையைப் போற்றும் நிலையில் கார்மேகப் போல பரிசையுடையவன் என்றும் மலையென யானைப்படை உடையவன் என்றும் கடல் என காலாட்படை உடையவன் என்றும் இடிபோல முழங்கும் முரசினை உடையவன் என்றும் எல்லோருக்கும் எப்பொருளும் வரையாது வழங்கும் தன்மை உடையவன் எனப் போற்றியுரைக்கிறார்.

புலவர்கள் போற்றி உரைத்தலில் ஒரு நியதியைக் கடைப் பிடித்திருக்கின்றனர். தகுதியானவர்களை மட்டுமே தகுதிப்படுத்தி உள்ளனர் என்பது புலப்படுகிறது.

மலைபடுகடாம் இரணிய முற்றத்து பெருங்குன்றூர் பெருங்கௌசிகனார், பல்குன்றக் கோட்டத்து தென்கண் மாத்துவேல் நன்னன் செய் நன்னனைப் போற்றும் நிலையில் அவனுடைய ஊர்களில் விருந்தோம்பல் சிறந்து விளங்குகின்றது. வழி செல்வோர் கூட கண்டும், கேட்டும், உண்டும் உறவினர் போல் தங்கிச் செல்லலாம். இக்குணம் மரபு குணமாகும் எனவும் உரைப்பார். மேலும் மறம் வீங்கு பல்புகழ் உடையவர் எனப் போற்றுவார்.

## வள்ளல்கள்

புறப் புலவர்கள் வள்ளல்களைப் பாடி உள்ளனர். வள்ளல் தன்மை என்பது இரப்பவருக்கு எதையும் எதிர் நோக்காமல் வழங்குதலாகும். பாரி, ஓரி, காரி, தீபி. பண்ணன் இவர்களைப் புலவர்கள் பாடியுள்ளனர். பெருஞ்சித்திரனார் என்னும் புலவன் பாரி, ஓரி, காரி, அதியன், பேகன், ஆய், நள்ளி ஆகிய வள்ளல்களைப் பாடியுள்ளார்.

இடைகழிய நல்லூர் நத்தத்தனார் பாரி, ஓரி, காரி, அதியன், பேகன், ஆய், நள்ளி ஆகிய வள்ளல்களின் புகழைப் பாடியுள்ளார்.

வள்ளல்கள் மூவேந்தர்களுக்கு இணையாக ஆட்சி புரிந்துள்ளனர். இந்த வள்ளல்களை முடியரசர்கள் விரும்பியதாகக் கருத்துக்கள் இல்லை. பறம்பு மலைப் பணியை முடிவேந்தர்கள் மூவரும் முற்றுகையிட்டனர். இருப்பினும், வள்ளல் தன்மையில் பாரி மாறுபாடு கொள்ளவில்லை. பாரியின் வள்ளல் தன்மையைக் குமணன் பாடும் நிலையில்,

> ‘‘முரசுகடிப்பு இருப்பவும் வால்வினை துவைப்பவும்
> அரசுடன் பொருத அண்ணல் நெடுவரைக்
> கறங்குவெள் அருவி கல் அலைத்து ஒழுகும்
> பறம்பிற் கோமான் பாரி’’[102]

எனப் புறநானூற்றுப் பெருஞ்சித்திரனார் பாடுவார்.

“சிறுவீ முல்லைக்கு பெருந்தேர் நல்கிள

பறங்க வெள்ளருவி வீழுஞ் சாரல்

பறம்பிற் கோமான் பாரி”[103]

என சிறுபாணாற்றுப்படையில் கூத்தனாரும் பாடுவார்.

பெருஞ்சித்திரனார் குமணனை வாழ்த்தி உரைக்கும்போது பாரி, ஓரி, மலையன், எழினி, பேகன், ஆய், நள்ளி ஆகிய எழுவரும் இறந்து விட்டனராம். அவர்களின் வள்ளல் தன்மைக்குப் பிறகு நீ இருக்கிறாய் குமணனே என்பர்.

பெருஞ்சித்திரனார் உள்ளுறையாகப் பாரியின் வள்ளல் தன்மையைச் சுட்டவே குமணனைப் பாடும் போது வள்ளல்கள் எழுவரையும் குறிக்கிறார் நத்தத்தனார் பாரி முல்லைக்குத் தேர் கொடுத்ததைத் ‘திரவிய முல்லை’ எனச் சுட்டுவார். வள்ளல்கள் என்பவர் அ.்.றிணைக்கும் உதவியதாலேயே வள்ளல்கள் என்ற பெயரினைப் பெற்றனர் என்பதை அறியலாம்.

“ஈர்த்தண் சிலம்பின் இருள்தூங்கு நளிமுழை

அருந்திறல் கடவுள் காக்கும் உயர்சிமைப்

பெருங்கல் நாடன் பேகன்”[104]

எனப் பெருஞ்சித்திரனார் குமணனிடத்தில் பேகன் என்பவன் அரிய வலிமை உடையவன் என்றும், தெய்வம் காக்கும் மலையுத்தி உடையவன் என்றும், மிக குளிர்ந்த மலையில் இருள் மிக்க குகையையும் உடையவன் என்றும் பாடுவார். புற ஆய்வாளர்கள் ஒரே அவையில் பல புலவர்கள் இருந்தனர் எனக் குறிக்கின்றனர். குமணனைப் பல புலவர்கள் பாடியிருக்கின்றனர். அவர்களுள் குறிப்பிடத்தக்கவர் பெருந்தலைச் சாத்தனார் ஆவார்.

பாரியைக் குறித்தது போலவே பேகனையும் குறிப்பது குமணனுக்கு வள்ளல்களின் பெருந்தன்மையைக் குறிப்பவையாகும்.

“கான மஞ்ஞைக்குக் கலிங்கம் நல்கிய

அருந்திறல் அணங்கின் ஆயவியர் பெருமகன்

பெருங்கல் நாடன் பேகன்”[105]

மயில் குளிரால் வருந்தி அகவுகிறது. ஆதனைக் கண்ட பேகன் தன் போர்வையை அதனுக்கு வழங்கியவன் பேகன். இங்குக் குறிப்பாவது மயில் இவனிடம் கேட்கவில்லை. அதனைக் கண்டு ‘கண் உருகுகிறார்’ பேகனின் இந்தச் செயல்பாடு நினைக்குந்தோறும் உள்ளம் நெகிழ்வதாககக உள்ளது.

**முடிவுகள்**

மன்னர்களும் புலவர்களும் தாய்மை, தோழமை, தொண்டு, அறிவுநிலை இந்நான்கு நிலைகளில் ஒருவருக்கு ஒருவர் நலம் பாராட்டி வந்துள்ளனர். மன்னர்கள் அருளாளர்கள் என்பது புலவர்களின் துணிபு. அறநெறியை உயிரினும் மேலாக மன்னர்களும் புலவர்களும் பின்பற்றி உள்ளனர். சொல்லும் செயலும் நேர்திணையில் காணப்படுகின்றன. புலவர்களுக்கு உதவுபவதை அரசியல் நெறியாக மன்னர்கள் கையாண்டுள்ளார்கள் கடமையைக் கண்ணெனப் போற்றி உள்ளனர். நன்றியை நயமிக்க நிலையில் காத்து உள்ளனர். அஞ்ச வேண்டியவற்றிற்கு அஞ்சி நாணமிக்கவர்களாகத் திகழ்கின்றனர்.

புகழ்ச்சியால் உச்சநிலையை எட்டி உள்ளனர். இகழ்ச்சியால் தலை குனிந்து நிற்கின்றனர். புலவர்கள் மன்னனுக்கு உரிய வெற்றி தோல்விகளை இன்னதெனச் சுட்டிக் காட்டியுள்ளனர். வீரனிடத்து மட்டுமே போர் செய்ய வேண்டும். வஞ்சினம் உரைப்பது அரசர்களின் செங்கோல் ஆட்சிக்குச் சான்றாகும்.

பெண்களுக்கு உரிய கற்பு ஆணுக்கும் உண்டு. கெடுதலற்ற எண்ணங்களைப் புலவர்கள் மறைக்காமல் உரைக்கின்றனர். தகுதியான செயல்பாடுகளை மட்டுமே போற்றியுள்ளனர். வள்ளல்கள் அனைவரையும் மகிழந்து பாடியுள்ளனர்.

**சான்றெண் விளக்கம்**

1. கதிர் மகாதேவன், ஒப்பிலக்கிய நோக்கில் சங்ககாலம், ப.148.
2. மேலது, ப.152.
3. புறம்.பா.அடி. 4; 18-19.
4. புதிற்றுப்பத்து, ஆறாம் பத்து, 11.
5. மேலது.
6. தமிழருவி மணியன், ஒருக்கு நல்லது சொல்வேன், பக்.17-18.
7. புறம்,பா.அடி.4: 5-8
8. மேலது,பா.அடி.27: 16-19.
9. பு.அருணாச்சலம், திருமந்திரக் கோட்பாடு, ப.48.
10. சுவாமி சரவணானந்தா, வள்ளலார் வாழ்க்கையும் தத்துவமும், ப.182.
11. புறம்,பாஅடி..55, 12.
12. மணிமேகலை, உலக அறவி புக்க காதை, 1-3.
13. குறள்: 13.
14. பரிமேலழகர், திருக்குறள் உரை, ப.30.
15. புறம், பா.அடி.12.
16. சு.துரைசாமிப்பிள்ளை, புறநானூறு மூலமும் உரையும், ப.35.
17. குறள்: 664
18. பரிமேலழகர், திருக்குறள் உரை, ப.284.
19. மேலது, ப.284.
20. க.ப.அறவாணன், அற இலக்கியக் களஞ்சியம், 296.
21. புறம்,பா:அடி.3, 14.
22. சு.துரைசாமிப்பிள்ளை, புறநானூறு மூலமும் உரையும்,பக். 10-11.
23. ந.மு.வேங்கடசாமி நாட்டார், சிலப்பதிகாரம் மூலமும் உரையும்,ப.375.
24. மேலது,ப. 431.
25. க.பஞ்சாங்கம், இலக்கியமும் திறனாய்வுக் கோட்பாடுகளும்,ப.17
26. புறம்,பா.அடி.121.
27. புழமொழி,பா.அடி.5.

28. நான்மணிக்கடிகை, பா.அடி.73.

29. இனியவை நாற்பது, பா.அடி.20.

30. புறம்,பா.அடி.186.

31. சு.துரைசாமிப்பிள்ளை, புறநானூறு மூலமும் உரையும், ப.406.

32. ஏ.வி.சுப்பிரமணிய அய்யர், தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி, பக்.70-71.

33. நீதிநெறி விளக்கம்,பா.அடி.43.

34. புறம்.பா:அடி. 245: 5-7.

35. மேலது,.பா.அடி.18: 21-24.

36. புலியூர்க்கேசிகன், புறநானூறு தெளிவுரை, ப.45.

37. புறம்,பா.அடி. 27: 5-9.

38. உ.வே.சா.புறநானூறு மூலமும் உரையும், ப.73.

39. புறம்.பா.அடி. 28: 15-17.

40. சு.துரைசாமிப்பிள்ளை, புறநானூறு மூலமும் உரையும், ப.82.

41. குறள்: 108.

42. மேலது, 110.

43. உலகநாத பண்டிதர், உலகநீதி, ப.8,2.

44. ஔவையார், வாக்குண்டாம், ப.1.

45. புறம்.பா.அடி. 34: 1-6.

46. உ.வே.சா.புறநானூறு மூலமும் உரையும், ப.88.

47. குறள்: 105.

48. பரிமேலழகர், திருக்குறள் உரை, ப.51.

49. ச.வே.சுப்பிரமணியன், தொல்காப்பியம் உரை, ப.404.

50. புறம்.பா.அடி. 44: 11-16.

51. ச.வே.சுப்பிரமணியன், தொல்காப்பியம் உரை, ப.404.

52. கலித்தொகை, பா.அடி.119, 6.

53. திரு.வி.க., பெண்ணின் பெருமை, பக்.31-32.

54. தமிழருவிமணியன், ஊருக்கு நல்லது சொல்வேன், ப.17.

55. நற்றிணை.பா.அடி. 17: 8,9.

56. பரிமேலழகர், திருக்குறள் உரை, ப.96.

57. மேலது, ப.361.

58. புறம்.பா.அடி. 26.

59. சு.துரைசாமிப்பிள்ளை, புறநானூறு மூலமும் உரையும், ப.77.
60. புலியூர்கேசிகன் உரை, புறநானூறு மூலமும் உரையும், ப.63.
61. கணிமேதாவியார், ஏலாதி, பா.6.
62. காரியாசான், சிறுபஞ்சமூலம், பா.4.
63. புறம்.பா:அடி. 45:1-5.
64. ஏ.வி.சுப்பிரமணியஅய்யர், தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி, பக்.62, 63.
65. புறம்.பா.அடி. 36:11-13.
66. க.கைலாசபதி, ஒப்பியல் இலக்கியம், ப.81.
67. கலித்தொகை, பா.அடி.106: 40-42.
68. புறம்.பா.அடி. 71: 4-6.
69. மேலது, பா:அடி. 71: 7-9.
70. குறள்: 542.
71. புறம்.பா.அடி. 71: 10-16.
72. முன்றுரையறையனார், பழமொழி, பா.247,4 நாலடியார், பா.23, 4.
73. புறம்.பா.அடி. 71: 16-19.
74. மேலது,பா.அடி. 72: 13-16.
75. மேலது,பா.அடி. 73: 12-14.
76. மேலது,பா.அடி. 187.
77. சு.துரைசாமிப்பிள்ளை, புறநானூறு மூலமும் உரையும், பக்.95.
78. ந.மு.வேங்கடசாமி நாட்டார், சிலப்பதிகாரம் மூலமும் உரையும்,ப.106.
79. புறம்.பாடல். 2,3,5,6,35,40,55,184.
80. மேலது,பா.அடி. 184.
81. குறள்: 235.
82. மேலது,பா.அடி. 528.
83. புறம்.பா.அடி. 205: 1-6.
84. ஏ.வி.சுப்பிரமணிய அய்யர், தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி, ப.69.
85. புறம்.பா.அடி. 154: 8.
86. மேலது, பா.அடி. 204: 1-4.
87. சு.துரைசாமிப்பிள்ளை, புறநானூறு மூலமும் உரையும், ப.
88. பதிற்றுப்பத்து.பா.அடி. 44: 5-7.
89. க.ப.அறவாணன், அற்றைநாட் காதலும் வீரமும், ப.353.

90. புறம்.பா.அடி. 57: 4-8.

91. க.ப.அறவாணன், அற்றைநாட் காதலும் வீரமும், ப.234.

92. ப.அருணாச்சலம், பக்தி இலக்கியம், ப.7.

93. மேலது,பா.8.

94. புறம்.பா.அடி. 8: 9-10.

95. மேலது, பா.56: 23-25.

96. மேலது,பா.அடி. 59: 6-7.

97. மேலது,பா.அடி. 371: 23-25.

98. பி.எஸ்.சோமசுந்தரம், சம்பந்தர் திருநெறி, ப.136.

99. புறம்.பா.அடி. 9, 11.

100. மேலது, பா.அடி. 17: 36-40.

101. மலைபடுகடாம், பா.அடி. 351-355.

102. புறம்.பா.அடி. 158: 1-4.

103. சிறுபாணாற்றுப்படை, 89-90.

104. புறம்.பா.158: 10-12.

105. சிறுபாணாற்றுப்படை, 85-87.

# இயல்: ஐந்து

# சங்கப் புலவர்களின் பதிவுகளில் அறிஞர்களின் பார்வை நலம்

சங்க இலக்கிய ஆராய்ச்சி, உரையாசிரியர்கள் காலத்திலேயே தொடங்கியுள்ளது. உரையாசிரியர்கள் சங்க இலக்கியத்தின் கலங்கரை விளக்கம். இலக்கியங்கள் வாய்மொழிப் பாடல்களாகவே முதலில் எழுந்துள்ளன. காலம் செல்லச் செல்ல பனையோலை எழுத்தாணி இவற்றைக் கொண்டு இலக்கியங்கள் எழுத்து வடிவம் பெற்றன.

இங்ஙனம் வளர்ச்சி பெற்ற இலக்கியங்கள் உரையாசிரியர்களின் உரை வளத்தால் காலத்தை வென்று நின்றன எனக் கூறலாம். பல உரையாசிரியர்கள் இலக்கியங்களுக்கு உரை கண்டனர் எனினும் எல்லோரையும் அறுதியிட்டுக் கூற இயலாத நிலையில் ஆய்வுக் களத்தின் எல்லை கருதி ஐந்து அறிஞர்களின் பதிவுகள் மட்டும் நோக்கப்பட்டுள்ளது. அதனடிப்படையில்,

1. ஔவை துரைசாமிப்பிள்ளை.
2. டாக்டர்.ந.சஞ்சீவி
3. பேராசிரியர்.க.வெள்ளைவாரணனார்
4. பேராசிரியர்.மா.இராசமாணிக்கனார்
5. அறிஞர் க.ப.அறவாணன்

ஆகியோரின் கருத்துரைகள் ஒப்பு நோக்கப்பட்டுள்ளது.

**உரைகள்**

அன்று "ஒருவர் படிக்க மற்றவர்கள் காதால் கேட்டு உரைப்பொருள் அறிந்தனர். மிகுதியாக எழுதி விளக்க வேண்டியவற்றை எழுதாமல், வாயால் கூறியே விளக்கி வந்தனர். "விரிப்பின் பெருகும், விரிவஞ்சி விடுத்ததாம். வல்லார் வாய்க் கேட்டுணர்க. வந்தவழிக் காண்க என்று உரையாசிரியர்கள் இடையிடையே எழுதிச் செல்லும் வழக்கம் அவர்கள் காலத்தில் எழுதுவதில் இருந்த இடர்ப்பாடுகளை உணர்த்தும்.

நூல்களுக்கு உரை எழுதாமல் வாயால் விளக்கிச் செவியால் அறிந்து கல்வி கற்றுப் புலமை பெறும் வழக்கம் அக்காலத்தில் நாடெங்கும் பரவியிருந்தது.”[1] என்று அரவிந்தனின் ஆய்வுரை உரையாசிரியர்களின் இயல்பினைச் சுட்டுகிறது.

வாய்மொழிச் செல்வாக்கின் அடுத்த நிலையில் ஓலைச்சுவடிகள் இடம் பெறுகின்றன. கல்வெட்டுகள் மன்னர்களின் ஆட்சிமுறை, நிர்வாகம், மக்கள் வாழும் முறை, கோயில் நிலைகள் இவற்றைச் சுருக்கமாகக் குறித்தது. ஆங்கிலேய வருகைக்குப் பின்பு அச்சு இயந்திரம் அறிமுகமாகி இலக்கிய வளர்ச்சிக்குத் துணையாய் நின்றன.

**டாக்டர்.ந.சஞ்சீவி** சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறையின் தலைவர், பேராசிரியர் பொறுப்பு வகித்தவர். 1973-இல் சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள் என்னும் நூலினை வெளியிட்டு உள்ளார். சங்க இலக்கிய அடிப்படை ஆராய்ச்சிக்கு இந்நூல் ஒரு நுழைவு வாயிலாகும். இந்நூல் 407 பக்கங்களைக் கொண்டதாக உள்ளது.

## நூல் அமைப்பு

டாக்டர் ந.சஞ்சீவி ‘புரவலரும் புலவரும்; சங்க கால அரசர் அகர வரிசை, சங்க அரசர் முதலியோர் பெயர் வேறுபாட்டு விளக்கம், புலவர் புகழ் புலவர்கள், ஆராய்ச்சி நூல் அடைவு ஆகிய வகைகளைப் பிற்சேர்க்கையாக அமைத்துள்ளார்.

பத்துப்பாட்டு எட்டுத்தொகை விளக்கமும், எட்டுத்தொகை பாடல் எண்ணிக்கை, எட்டுத்தொகை அடிவரையறை, எட்டுத்தொகை நூல்களைத் தொகுத்தவரும் தொகுப்பித்தாரும், எட்டுத்தொகை நூல்களில் விளங்கும் பாகுபாடுகளை முதற்பகுதியாக அமைத்துள்ளார்.

சங்கப் புலவர் அகரவரிசை, சங்கப் புலவர் பெயர் வேறுபாட்டு விளக்கம், தொடரால் பெயர் பெற்றவர் தொழில் முனைவால் பெயர் பெற்றவர், தோத்திரத்தால் பெயர் பெற்றவர், நாளால் பெயர் பெற்றவர், பாடல் பொருள் முதலியவற்றால் பெயர் பெற்றவர் பெற்றாரோடு தொடர்ந்த பெயல் கொண்ட புலவர் மரபால் பெயர் பெற்றவர்; பழக்கவழக்கத்தால் பெயர் பெற்றவர் பெண்பாற் புலவர், அரசர்,‘இளம்’ என்னும் அடைவு பெற்ற புலவர்கள்.

‘பெறு’ என்னும் அடைவு பெற்ற புலவர்கள்,‘நெடு’ என்ற அடைவு பெற்ற புலவர்கள் ‘பாரி’ என்ற சிறப்புப் பெற்ற புலவர்கள். என 68 வகைகளாகப் பிரித்துள்ளார். இது இரண்டாம் பகுதி. மூன்றாம் பகுதியாகப் புலவர்களின் ஊர்களைப் பட்டியலிட்டுள்ளார். நான்காம் பகுதியில் பெண்பாற் புலவர்களின் அகப்புறப் பாடல்களைப் பட்டியலிட்டுள்ளார். இவ்வாறான அமைப்பு முறையில் ஆய்வுரையை அமைத்துள்ளனர்.

## ஆராய்ச்சிக் குறிப்புகள்

ஒவ்வொரு பகுப்பிலும் ஆராய்ச்சித் தொகுப்புரைகளை வழங்கியுள்ளார். இந்த ஆராய்ச்சிக் குறிப்புரைகள் அந்தப் பகுப்பின் தன்மையை அறிவதற்குத் துணை புரிகிறது.

குறமகள் குயிவெயினி அகம் பாடி இருத்தலும், குடிமகள் இளவெயினி புறம் பாடி இருத்தலும் அறியத் தக்கது என்றும்”[2] புறப்பொருள் மட்டுமே பாடிய பெண்பாற் புலவர்கள் புறத்தில் மட்டுமே பாடியிருப்பது கருதத் தக்கது”[3] என ஆராய்ச்சிக் குறிப்புகளை வழங்கியுள்ளார். இந்த ஆராய்ச்சிக் குறிப்புரைகள் சங்க இலக்கியப் பன்முகத் தன்மையை அறிவதற்கு ஏதுவாக அமைகிறது.

## பெண்பாற் புலவர்கள் எண்ணிக்கை

பெண்பாற் புலவர்கள் எண்ணிக்கை அறிஞர்களிடையே மாறுபட்ட கருத்து நிகழ்கிறது. “உ.வே.சா. 38 எனவும், எஸ்.வையாபுரிபிள்ளை 30 எனவும், புலவர் த.கோவிந்தன் 27 எனவும், ஔவை நடராசன் 41 எனவும், டாக்டர் ந.சஞ்சீவி 30 எனவும், தாயம்மாள் அறவாணன் 45 எனவும் குறிக்கின்றனர்”[4] என்பார் ந.முருகேச பாண்டியன்.

“டாக்டர் ந. சஞ்சீவி அவர்களின் சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள் என்ற நூலைப் பயன்படுத்தி, அவர் கருத்தின்படி பெண்பாற் புலவர்கள் 30 பேர். அந்த 30 பேர் பெண்பாற் புலவர்களின் பாடல்களைத் தொகுத்து இந்நூலில் தந்துள்ளோம்”[5] என்பார் ச.வே.சுப்பிரமணியன்.

அறிஞர் ச.வே.சுப்பிரமணியன் அவர்கள் தமிழ் இலக்கியத்தில் நுட்பமான அறிவுத்திறன் கொண்டவர். அவர் சஞ்சீவி அவர்களின் கருத்துரையை ஏற்றுக் கொண்டது டாக்டர் சஞ்சீவியின் சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைக்கு மிகப் பெரிய சான்றாகும்.

## சங்க இலக்கிய ஆராய்ச்சி நூலடைவு

டாக்டர்.ந.சஞ்சீவி இந்தப் பகுதியில் அவரது ஆய்வுக் காலம் வரை பெற்ற நூல்களை முழுமையாகப் பட்டியலிட்டுள்ளார். 1946-ல் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தால் இரா.வேங்கடாசலம் பிள்ளை இலக்கிய அகநானூற்றுச் சொற்பொழிவில் தொடங்கி மா.ரா.கோ.குருசாமி ‘வாழ்வும் வழியும்’ வரைப் பட்டியலிட்டுள்ளார். 1904-லிருந்து 1970 வரை வெளிவந்த ஆங்கில நூல்கள் 14-யினைப் பட்டியலிட்டுள்ளார். இந்த 14 நூல்களும் சங்க இலக்கியம் குறித்தவைகள் ஆகும். தமிழ் நூல்கள் என 258 நூல்களைக் குறித்துள்ளார். இவரின் இந்த ஆய்வுப்பணி சங்க இலக்கிய ஆய்வாளர்களுக்குப் பெரிதும் பயனுள்ள வகையில் திகழ்ந்து கொண்டிருக்கிறது.

## சங்க இலக்கியப் பகுப்புகள்

சங்க இலக்கியப் பதிப்புகளுள் முதற் பதிப்புத் தொடக்கமாக இந்நாள் வரை மூலமாகவும், உரையுடனும் வெளிவந்த பதிப்புகளின் விவரம் இந்த இணைப்பில் தொகுத்துத் தரப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு நூல் பதிப்பு விளக்கப் பகுதியிலும் முழுமை நூலாக வந்த பதிப்புகளை முதற்காலம் தந்து, அதன்பின் அந்நூற் பகுதிகளின் தனிப் பதிப்புகளும் கொடுக்கப்பட்டுள்ளன.

”இப்பகுப்பு விளக்கம் நூற்பெயர், பதிப்பாசிரியர், வெளியீட்டகம், பதிப்பு, ஆண்டு என்னும் வரிசைமுறையில் தொகுத்து அமைக்கப்பட்டிருக்கிறது. நூற் பதிப்புப் பற்றிய பகுதியில் பதிப்புகளாகக் குறிக்க மட்டும் ரோமன் எண் பயன்படுத்தப் பட்டிருக்கிறது. இது கொண்டு ஒவ்வொரு நூலும் எத்தனை முறை எந்த ஆண்டு வெளிவந்தது என்பதனை எளிதில் உணரலாம். நூல் மூலமா?

அல்லது உரையா? என்னும் பாகுபாட்டை முதற் பத்திக் குறிப்பிற் கண்டு கொள்ளலாம்''[6] என டாக்டர் ந. சஞ்சீவி பதிப்புகள் பகுதியில் குறிப்புரை வழங்கியுள்ளார். பதிப்புக் கலையில் இது அரிய பணியாகும். சுவடிகளாக இருந்தவற்றை நூல்களாக மாற்றினர். இப்பணியின் மூலவர் என்ற சிறப்பிற்கு உரியவர் உ.வே.சா ஆவார். பல்வேறு பதிப்புகளின் தன்மையினால் உரை வேற்றுமைகள் என்னும் ஆராய்ச்சிப் பகுதி தமிழில் தோன்றி வளர்ந்தன. அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பேராசிரியர் ஏ.பழனியப்பன் அவர்கள் மூதறிஞர் வ.சுப.மாணிக்கனார் அவரின் நெறியாள்கையில் 'சங்க நூற்களில் பாடல் வேறுபாடுகள்' என்னும் ஆய்வினை நிகழ்த்தியுள்ளார். இவ்வாய்வு பல்கலைக் கழக வெளியீடாக வெளியிடப்பட்டுள்ளது என்பது இங்கு ஒப்பு நோக்கத்தக்கதாகும்.

## புலவரும் புரவலரும்

டாக்டர் ந.சஞ்சீவி புலவர் புரவலர் இவ்விருவருக்கும் இரண்டு பிற்சேர்க்கைகளை இணைத்துள்ளார். முதல் பிற்சேர்க்கை 144 பேர் புலவர் புரவலர் எனப் பட்டியலை வழங்கியுள்ளார். இரண்டாவது பிற்சேர்க்கையில் புலவர் புரவலர் 236 பேர் எனப் பட்டியலிட்டுள்ளார். ஆராய்ச்சிக் குறிப்புகளில்,''சங்கப் புலவர் நானூற்று எழுபத்து மூவருள் 473 புரவலரைப் பாடியோர் நூற்றி நாற்பத்து மூவரே (143) அதாவது மொத்தச் சங்கப் புலவருள் ஏறக்குறைய மூன்றில் ஒரு பகுதியாக 'இவ்வுண்மை சங்க காலத்துச் சான்றோர்' வள்ளல்களையேப் பாடி வாழ்ந்தோர் என்ற சிலரின் தவறான கருத்துகளைத் தகர்க்கும்''[7] என்னும் ஆய்வுரை புலவர்களின் தனித்தன்மையைக் காட்டுவதாகும். இவரின் தொகுப்பு சங்க இலக்கியப் புள்ளியல் நிலை ஆய்வாகும். சேர, சோழ, பாண்டியர், கோத்தர் ஆகிய பத்திற்கும் மேற்பட்ட புலவர்கள் பாடியுள்ளதாகக் குறிப்புகளால் கூறுகிறார். நன்னன் என்பவனை மட்டும் 11 புலவர்கள் பாடியுள்ளதாகக் குறிக்கிறார். இவ்வாறான ஆராய்ச்சி உரைகள் அடுத்த தலைமுறையினருக்கு ஒரு படிநிலை வளர்ச்சியினை அடைவதற்கு உகந்ததாக அமைகிறது.

அரசர்கள் நிலையில் சேரர் – 21; சோழர் – 21; பாண்டியர் – 25; வள்ளல்கள் - 9; குறுநில அரசர்கள் - 51; குடிகள் - 7 என வகைப்படுத்தியுள்ளார். இந்தக் குறிப்பு புலவர்கள் அனைவரையும் பாடியுள்ளனர் என்பதற்குச் சான்றாகும்.

## சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணை சிறப்புக் கூறுபாடுகள்

- சங்க இலக்கிய ஆராய்ச்சிக்கு முழுதும் உறுதுணை புரிவது சங்க இலக்கியப் பதிப்புகளின் எண்ணிக்கை என அறிந்து கொள்ளலாம்.
- பெண்பாற் புலவர்கள், ஆண்பாற் புலவர்களின் எண்ணிக்கையை அறிந்து கொள்ளலாம்.
- சங்க இலக்கிய ஆராய்ச்சி நூல்களை எளிதில் அடையாளம் காணலாம்.
- திணைத் துறை வகைகளை அறியலாம்.
- கூற்று மாந்தர்களின் வரிசையினை உணரலாம்.
- ஐந்து நிலப்பாகுபாட்டில் புலவர்கள் மிகுதியாகக் கையாண்ட நிலத்தை அறிந்து கொள்ளலாம்.
- அகப்புறப் புலவர்களின் வேறுபாடு அறியலாம்.
- பாடல் அடியால் பெயர் பெற்ற புலவர்கள் மொத்தம் 27 பேர் ஆவர்.

## ஔவை சு.துரைசாமிப்பிள்ளை

பழம்பெறும் உரையாசிரியர்கள் மரபில் வழி வந்தவர் உரை வேந்தர் ஔவை துரைசாமிப்பிள்ளை. தமிழ்த்தாய் இவரிடத்தில் இயல்பாய் குடிகொண்டாள் என்பர். உ.வே.சாமிநாத ஐயரைப் போன்று தமிழ்ச் சுவடிகளைத் தேடி ஆராய்வதில் முதன்மையானவர் கரந்தைத் தமிழ்ச் சங்கத்தில் தமிழ்த் தொண்டு ஆற்றியவர். திருப்பதி ஸ்ரீ வெங்கடேஸ்வரி ஓரியண்டல் கல்லூரியில் தமிழ் ஆசானாக நிறை மாந்தராய் பணியாற்றிய செம்மல் அங்குப் பணியாற்றும் காலத்து, வடநூல் பேராசிரியர்களால் ஆராய்ச்சியால் நலம் பெறப் பெற்றவர். அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழியல் துறையில் ஆராய்ச்சிப் பேராசிரியராய் தமிழில் பல ஆய்வுகள் பல கண்டவர். வரலாற்றுப் பேராசிரியர்.

சதாசிவப் பண்டாரத்தாரின் நண்பரும் ஆவார். தமிழையும் ஆராய்ச்சியையும் குறிப்பாக சங்க இலக்கியங்களை உயிராக ஓம்பியவர்.

“பாழான இந்தப் பழந்தமிழ் ஏடுகளைத் தேடித் திரிந்து ஆராய்ந்து கழித்த உங்கள் காலத்தை B.O.L. M.O.L என்ற பட்டங்களைப் பெறுவதற்குக் கழிந்திருந்தால் உங்களது வாழ்க்கை பொருள் நிலையில் மிகச் சிறப்புற்றிருக்கும் என்று என் நண்பரொருவர் என் சங்க நூல் வெளியீடுகளை நோக்கி என்பால் கொண்ட உண்மையன்பினால் கூறினார். பொருள்நிலை நோக்கி அவர் கூறிய பொருளுரை உண்மையுரையே. அதனை எண்ணி ஒருகால் உள்ளம் அலையானதும் பிற எக்காலத்தும் இந்த இனிய தமிழில் பணியிலே அதனை உறைப்புற்று நிரூபித்து இதனை இவ்வளவில் முற்றுவித்த தமிழ்த்தாயின் தண்ணிய திருவருளையே வியந்து பரவுகின்றேன்.”[8] என ஔவை துரைசாமிப் பிள்ளையின் இந்தக் கூற்று தமிழ்ப் பணியை தவமாகக் கொண்டவர் என்பதை எளிதில் உணரலாம்.

தமிழ்த்தாத்தா உ.வே.சா வுடன் நெருங்கிய கடிதத் தொடர்பு கொண்டவர். இளம்பூரணர் தொல்காப்பிய எழுத்து அதிகாரத்திற்கு எழுதிய உரையை ஹரித்து வாரணங்களும் மங்களத்தில் வாழ்ந்த தமிழ் செல்வரும் அரிய புலவருமாகிய திரு.வ.கோபாலசாமி ரகுநாத இராசாவிராய் அவர்களையும்; பின்னத்தூர் திரு.நாராயணசாமி ஐயர் சோலைவந்தான் திரு.அரசன் சண்முகனார் இவர்களோடு நட்பு பாராட்டிய காலத்தில் உ.வே.சா வெளியிட்ட புறநானூற்று நூல் இரண்டாம் பதிப்பைக் கண்ணுற்றனர். இராசாளியார் புறநானூற்று ஏடு ஒன்றை வைத்திருந்தார். அச்சாகியிருந்த புறநானூற்றுப் பதிப்பும், அவரது கைப்பிடி பதிப்பில் உள்ள கூற்றிலும் எவ்வித வேறுபாடும் இல்லை. இது குறித்து ஔவை துரைசாமி பிள்ளை “இப்பிறவி திரு.டாக்டர் ஐயர் அவர்களுக்குக் கிடைக்காது போனது பற்றி என் மனதில் ஐயம் ஒன்று ஊசலாடிக் கொண்டிருந்தது”[9] என்கிறார். துரைசாமிப் பிள்ளையின் நாகரீகமும் ஐயன்பால் கொண்ட பேரன்பும் தமிழ் ஆய்வில் கொண்ட அடங்கா காதலையும் அளவிட முடியாது.

**புறநானூற்று உரைநெறி**

ஔவை துரைசாமி பிள்ளை 1947-இல் புறநானூறு முழுமைக்கு உரை இயற்றினார். இதனை சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் வெளியிட்டது. இவ்வுரையில் பாடினோர் பாடப்பட்டோர் வரலாறு, திணை, துறை, விளக்கம், தொடர் உரை விளக்கம், விளக்கம் என்னும் அமைப்பில் உரை எழுதியுள்ளார். இவர் உரையில் ஆய்வுரை சான்றுகளுடன் நிறுவியுள்ளார். புறநானூற்று கடவுள் வாழ்த்து பாடிய பாரதம் பாடிய பெருந்தேவனாரின் கடவுள் கொள்கையை,

“சங்கத்தொகை நூல்களுள் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு, புறநானூறு என்ற இவற்றிற்குக் கடவுள் வாழ்த்துச் செய்யுள்களைப் பாடிச் சேர்த்தவர் இவர். இதனால் இவர் கடவுள் கொள்கை நிறைந்த உள்ளமுடையவர் என்பது புலனாகும். இவர் பெரும்பாலும் சிவனையும் முருகனையும் பாடியிருக்கிறார்”[10] என் நிறைவு செய்கிறார்.

“கடவுள் வாழ்த்தில் “தன்னுளடக்கிச்
சுரங்கினும் சுரக்கும்
பிறைநுதல் வண்ணமாகின் றப்பிறை”[11]

எனப் பெருந்தேவனார் பாடுவார். இக்குறிப்பில் பெருந்தேவனார் சிவனின் அருளைப் போற்றுபவர் என பிள்ளை அவர்கள் விளக்கம் அளிப்பர்.

**மன்னர்களின் வரலாறு**

துரைசாமிப்பிள்ளை அவர்கள் ஒவ்வொரு பாடலின் முற்பகுதியில் மன்னர்களின் வரலாற்றைச் சான்றுகளுடன் நிறுவுகிறார். முகப்புரையில் புலவரின் வரலாற்றினையும் குறிப்பதைக் காண முடிகின்றது.

“பத்துப்பாட்டில் காணப்படும் மதுரைக்காஞ்சி பாடிய மாங்குடி மருதனார் இப்பாட்டினும் அக்காஞ்சியே பொருளாகப் பாண்டியன் நெடுஞ்செழியனைப் பாடுகின்றார்.”[12] இக்குறிப்பில் மாங்குடி மருதனாரின் இலக்கியப் பரப்பை உணர்த்துகிறார்.

வேள்பாரி, கபிலர் நட்பு குறித்து புறம் 105 முதல் 120 வரை ஆகிய 16 பாடல்களில் செய்திகள் காணப்படுகின்றன.

“வேள்பாரி பாண்டிய நாட்டுப் பறம்பு மலையைச் சூழ்ந்த நாட்டையுடையவன். இப்பறம்பு நாடு முந்நூறு ஊர்களையுடையது. பறம்புமலை இப்போது பிரான்மலையென வழங்குகிறது. புக்கோட்டை நாட்டைச் சார்ந்திருக்கிறது. பாரி என்பான் வேளிர் குலத்தவனாதலின், இவனை வேள்பாரி என்பது வழக்கு. இவன் வேளிர் குலத்தில் எவ்வியென்பான் குடியிற் பிறந்தவன் பறம்பு நாட்டைச் சார்ந்து இருந்த பாண்டி நாட்டு திருவாதவூரில் பிறந்து சிறந்து விளங்கிய கபிலரென்னும் நல்லிசைப் புலவருக்கு இவன் இனிய நண்பன். ஔவையாராலும் சிறப்பித்துப் பாடப் பெற்றவன்; வரையாறு வழங்கும் வள்ளல். காற்றில் அலைந்த முல்லைக் கொடியின் பால் அருள் கொண்டு அது கொழுகொம்பாகப் பற்றிப் படரும் பொருட்டுத் தான் ஊர்ந்து சென்ற தேரைத் தந்தவன். முடிவில் தமிழகமெங்கும் இவனது புகழ் பரவக் கண்டு அழுக்காறு கொண்ட தமிழ் வேந்தர் மூவராலும் சூழ்ச்சி வரையாற் கொலையுண்டான். இவனுக்கு இரு மகளிர் உண்டு. இவருக்குப் பின் கபிலர் இம்மகளிரை ஔவையார் துணைகொண்டு தக்கார்க்கு மணம் புரிவித்துத் தாமும் உயிர் நீத்தார். இவர் காலத்துக்குப் பின் வந்த சான்றோர்கள் பலரும், ஆளுடைய நம்பி முதலிய அருட்குரவன்மார்களும் இவனையே கொடைக்கு எல்லையாகக் கொண்டு கூறுவரெனின் மேலும் கூறல் மிகையாகும். தமிழகத்துப் புரவலர் வரலாற்றில் வேள்பாரி சிறப்பிடம் பெறுதற்குரியவன். இவன் நாட்டு மலைவளமும், சுனைநீர் நலமும் புலவர் பாடும் புகழ் படைத்தவை”[13] என்பார்.

ஔவை துரைசாமிப்பிள்ளை வேள்பாரி குறித்து மிக சுருங்கிய நிலையில் தெளிவான வரலாற்றை உணர்த்துவது அவனின் பரந்துபட்ட புலமைக்குச் சான்றாகும். இவ்வாறான ஆய்வுரைகள் பிற உரையாசிரியர்கள் அணுகவில்லை என்பதும் நோக்குதற்குரியது ஆகும்.

வேள்பாரி குறித்து 16 பாடல்களைக் கபிலரே பாடியிருக்கிறார். பாரியின் கொடைநயம் அவனைப் புகழ்வது போலப் பழிப்பது, அவன் நாட்டை மலையைப் புகழ்வது, பாரி மகளிர் கையறுநிலை, பாரி இறப்பிற்குப் பின் நாடும் மலையும் பொலிவு இழந்தது.

நானும் இறந்து படுவேன் என உரைப்பது. இவ்வாறாகப் பாரியின் வரலாற்றைத் தெள்ளிதின் உரைக்கிறார். பிள்ளை அவர்களின் ஆய்வு குறித்து பல்வேறு சங்க இலக்கியச் சான்றுகள் ஒப்பிட்டுக் கூறப்பட்டுள்ளது.

## ஆய்வுரைகள்

பல்வேறு புறநானூற்றுப் பதிப்புகளை ஒப்பு நோக்கியுள்ளதை அறிய முடிகின்றது.

- மன்னர்கள் குறித்துத் தெளிவான வரையறைகளை வழங்கியுள்ளார்.
- தொடர் விளக்கத்தில் எளிமையான தமிழ் நடையைப் பின்பற்றியுள்ளார்.
- தொல்காப்பியப் புறத்திணைக் கோட்பாடுகளை ஆங்காங்கே சுட்டிச் செல்கிறார்.
- முன்னோர் மரபை பொன்போல் போற்றுகிறார். உரையாசிரியர்கள் முரண்படும் இடத்தில் நயத்தக்க நாகரீகராகக் காணப்படுகிறார்.
- டாக்டர் ந. சிதம்பரநாதச் செட்டியார் ஔவை துரைசாமிபிள்ளையின் புறநானூற்று உரையில் தமிழ் ஆர்வத்துடன் தமிழ்த் தொண்டாற்றி உள்ளார் எனக் குறிப்பர். மேலும் இவ்வாசிரியர் பாடல் பொருளைத் துறைக் குறிப்புடன் இயன்று உரைக்கும் முறை பெரிதும் சுவை பயப்பது எனக் குறிப்பிடுவர்.

## பேராசிரியர் க.வெள்ளைவாரணார்

வெள்ளைவாரணர் தமிழ்த்தாயின் நெற்றிச் சுட்டியாவார். தொல்காப்பியம், சங்கம், பக்தி இலக்கியங்கள் குறிப்பாகத் திருமுறைகள், வரலாறு இவற்றில் ஆழங்கால் பட்டவர், எக்கொள்கைக்கும் தன்னை உட்படுத்திக் கொள்ளாது, தமிழ்க் கொள்கையில் வாழ்ந்த பெருமகனார். குடும்ப வளர்ச்சி, குல வளர்ச்சி, பொருள் வளர்ச்சி இவற்றைத் தவிர்க்க தன்னேரில்லா தமிழ் ஆராய்ச்சி தலைவராவார்.

மதி நலமும், குணநலமும் ஒருங்கே பெற்றவர் அண்ணாமலை பல்கலைக் கழகத்தின் ஆராய்ச்சிப் பேரறிஞர் ஆகவும் திகழ்ந்தார். தமிழ்க் கூடல் மதுரையில் தொல்காப்பியம் முழுமைக்கும் உரைவளம் கண்டவர்.

ஔவை சு. துரைசாமிபிள்ளையும், வெள்ளை வாரணனாரும் ஒருங்கே நின்று அண்ணாமலைப் பல்கலைப் கழகத்தில் தமிழ்ப்பணி ஆற்றியவர்கள். மேலும் வ.சுப.மாணிக்கனாரின் நெஞ்சம் கலந்தவர் ஆவார்.

**உரைநெறி**

தொல்காப்பியப் புறத்திணையியலுக்கு உரையெழுதிய காலத்தில்,"தொல்காப்பியத்திற்குக் கிடைக்கும் பழைய உரைகளுள் தொன்மை வாய்ந்த இளம்பூரணருரை முதற்கண்ணும் அதனையடுத்துக் கிடைக்கும் ஏனைய உரைகள் அதன் பின்னும் ஆக காலமுறைப்படி சூத்திரந்தோறும் பகுத்து அமைக்கப் பெற்றுள்ளன"[14] என்பார். தொல்காப்பியத்திற்கு இளம்பூரணர் முழுமையாக உரை கண்டவர். முதல் உரையும் இவர் உரையேயாகும். வெள்ளை வாரணனார் இளம்பூரணரை முதன்மையாகக் கொண்டு பிற உரைகளைக் கால வரிசையில் அமைத்துக் கொள்ளப்பட்டு இவ்வுரைகள் எழுதப்பட்டது எனக் குறிக்கிறார். இக்குறிப்பு உரையாசிரியர்கள் குறித்த இவரின் அறிவுப் புலப்பாட்டிற்குச் சான்றாகும்.

சிவஞான சித்தியார், சுபக்கத்துக்கு மறை ஞானதேசிகர், சிவாச்சிரயோகிகள், நிரம்பவழகிய தேசிகர் ஞானதேசிகர். சிவஞான முனிவர், சுப்ரமணிய தேசிகர் இவர்களின் உரைகள் பாடல்கள் தோறும் பகுக்கப்பட்டு உள்ளது என்றும் குறிக்கிறார்.

"அகத்திணை மருங்கின் அரில்தப உணர்ந்தோர்
புறத்திணை இலக்கணம் திறம்படக் கிளப்பின்
வெட்சி தானே குறிஞ்சியது புறனே
உக்கு வரத் தோன்றும் ஈரேழ் துறைத்தே"[15]

என்பது தொல்காப்பியச் சூத்திரம். இதற்கு இளம்பூரணரின் உரையையும், நச்சினார்க்கினியர் உரையையும் அப்படியே பதிவு செய்துள்ளார் வெள்ளைவாரணனார்.

“புறத்திணையியலின் முதற் சூத்திரமாக மேற்கண்ட சூத்திரம் வழங்கியதற்கு வெட்சித் திணையாவது ஆநிரைகளைக் கவர்தல், குறிஞ்சி நிலமாகிய மலை சார்ந்த நிலப்பகுதியில் இந்நிகழ்வு நிகழ்கிறது என்றும், மறவர்கள் குறிஞ்சிப் பூவைச் சூடிக்கொள்கின்றனர் என்பது இளம்பூரணர் தரும் விளக்கம். இவ்விளக்கத்திற்கு வெள்ளைவாரணனார் ‘வெட்சித் தானே’ எனத் தொல்காப்பியர் உரைத்தவை வெட்சித்திணை என்று இருத்தல் வேண்டும் என்று கூறுகிறார். அகத்திணை முதற் சூத்திரத்திற்கும் புறத்திணை முதற்சூத்திரத்திற்கும் உள்ள தொடர்பினை அகத்திணையியலின் தொடக்கத்தில் கைக்கிளை முதலாய் பெருந்திணையிறுவாய் முற்படக் கிளந்த எழுதிணை என்ப என அமைந்த நூற்பாவில் அகத்திணை ஏழினையும் முற்படக் கிளர்ந்த எழுதிணை என்றதனால் அவ்வெழு திணைகளின் புறத்தன ஏழுள என்பதனைக் குறிப்பினால் தோற்றுவாய் செய்துப் போந்த தொல்காப்பியர், மேலும் குறிப்பிடற் பெறப்பட வைத்த புறத்திணை ஏழினையும் இவ்வியலில் வகைபெற விளக்குகிறார். அதனால் புறத்திணை இயலாகிய இது மேலை அகத்திணையியலுடன் தொடர்புடையதாய் அதனையடுத்து வைக்கப்பெற்றது என்பதாகும்.”[16]

உரையாசிரியர் உணர்த்தாமல் விட்ட ஆய்வுரைகளை க.வெள்ளைவாரணனார் குறிப்பது கருத்தப்பாடு உடையதாகும். அகத்திணைக்கும் புறத்திணைக்கும் தொடர்பு படுத்தி உரைக்கும் பாங்கும் உளம் கொள்ளத்தக்கது ஆகும்.

## ஆய்வு நெறி

உழிஞைத் திணையின் விளக்கத்திற்கு க.வெள்ளைவாரணனார் அத்திணையின் இலக்கணம், வகைக் குறித்து விளக்குவார். இதற்கு உழிஞைத் திணையில் 8 திணைகளை உரைக்கக் கூடிய (தொல்.புறம்.ப.1013) என்னும் சூத்திரத்தை மேற்கோள் கூறுகிறார். இதற்குப் பத்துப்பாட்டில்,

“மலையகழ்க் குவனே கூடலூர் சிவனே
வான்வீழ்க் குவனே வளிமாற்றுவனெனத்
தான் முன்னிய துறையோகலின்”[17]

என்பது பட்டினப்பாலை. மலை அகழ்பவனே என்னும் தொடர் மதிலையும் கடல் தூர்த்துபவனே என்னும் தொடர் அம்மதில் புறத்துச் சுற்றி நிற்பதாகும். இந்த பாடல் உழிஞைத் திணையின் துறையான ‘உள்ளிருந்து உள்ளியது முடிக்கும்’ வேந்தனது சிறப்பிற்கு எடுத்துக்காட்டு ஆகும் என உரைப்பார் க.வெள்ளைவாரணனார். ஆலந்தூர் கிழார் குலமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனை (புறம்.36) ஆவது பாடலின் மதிற் முற்ற போருக்குச் சான்றாகக் காட்டுவார் வெள்ளைவாரணனார். இந்தப் பாடல் உழிஞைத் திணையின் இறுதித் துறையான எதிர்த்தோரின் பகையைப் பேணாத அரிய கோட்டை போல் என்னும் துறைக்குச் சான்று காட்டுவார்.

## ஆய்வுரைகள்

- தொல்காப்பியப் புறத்திணைகள் தமிழரின் வீரத்திற்கு சான்று என்கிறார்.
- தொல்காப்பிய வரையறைகளைப் புறப்புலவர்கள் நன்கு உணர்ந்து உள்ளனர் எனத் துய்ப்பர்.
- திணை, துறை, விளக்கம், இலக்கண நெறி பொருந்தி வருவதைச் சான்றுகளுடன் நிறைவு செய்கிறார்.
- பல்வேறு உரையாசிரியர்களின் நெறியை ஒப்பு நோக்குகிறார்.
- பொருத்தமான உரையையே எடுகோளாக முன் வைக்கிறார்.
- புறத்திற்கும் அகத்திற்கும் உள்ள தொடர்பினை மேற்கோளுடன் கூறுகிறார்.
- புழைய உரையாசிரியர்களை மரபு வழியில் நோக்குகிறார்.

## பேராசிரியர். மா.இராசமாணிக்கனார்

மா.இராசமாணிக்கனார் ஆரம்பப்பள்ளி ஆசிரியராகத் தன் பணியைத் தொடங்கியவர். சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறையில் 1959 முதல் 1967 வரை இணைத் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றிய சான்றோர். தமிழாராய்ச்சியில் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டவர். பேராசிரியர் டாக்டர். ரா.பி சேதுப்பிள்ளை அவர்களின் வேண்டுகோளுக்கு இணங்க பத்துப்பாட்டு குறித்து ஆய்வு மேற்கொண்டார்.

இவர் கல்வெட்டு இயலிலும் வரலாற்று இயலிலும் ஆழ்ந்த புலமையுடையவர். இவரின் ஆராய்ச்சி டாக்டர் மு. வரதராசனார் பெரிதும் துணை ஆற்றியிருக்கிறார். தமிழ் ஆய்வு உலகில் கால ஆராய்ச்சி என்பது சிக்கலான அமைப்பை உடையதாகும். தமிழ் ஆராய்ச்சி அறிஞர்கள் கால ஆராய்ச்சியிலேயே மிகப் பலர் இருந்தனர். இப்போக்கினால் அறிஞர்களின் ஆய்வுரைகள் முரண்பாடான கருத்துக்கள் தோன்றலாயின. கம்பனின் காலம், வள்ளுவனின் காலம் இவைகள் எல்லாம் சான்றுகளாகும். மா.இராசமாணிக்கனாருக்கு ஆராய்ச்சிப் பேரறிஞரான நாவலர் டாக்டர். சோமசுந்தர பாரதியார், பொருநராற்றுப்படைக்கு உரிய கரிகாலன் வேறு. பட்டினப்பாலைக்குரிய திருமாவளவன் வேறு என்று ஓர் ஆய்வுரையை வழங்கியுள்ளார். இதுவே இவரது பத்துப்பாட்டு ஆராய்ச்சிக்கு மூலமாக அமைந்துள்ளது. ‘ஆராய்ச்சிகள் என்றும் முடிவானவை இல்லை’ அது தொடர்பு பண்பினை உடைய கூறுபாடாகும்.

## பத்துப்பாட்டு ஆராய்ச்சி அமைப்பும் சிறப்பும்

உரையாசிரியர்கள் மரபுவழி சங்க இலக்கிய ஆய்வாளர்கள் அடுத்தநிலையின் திறனாய்வுக் கலையின் இரண்டாம் கட்ட நிலையில் இவ்வாய்வு நூல் காணப்படுகிறது. பத்துப்பாட்டு என்னும் தலைப்பில் தொடங்கி நச்சினார்க்கினியர் ஈறாக 35 தலைப்புகளில் 654 பக்கங்களை உடையதாக இந்நூல் அமைந்துள்ளது. தமிழ் நூல்கள் குறிப்பாக இலக்கணம், பக்தி இலக்கியம், சங்க இலக்கியம், சிற்றிலக்கியம் இந்த வகையில் 25 மூல நூல்களையும், பிற நூல்களாகக் குறிப்பாக 25 வரலாற்று நூல்களையும், ஆங்கில நூல்களான 17 நூல்களையும் ஆய்விற்குச் சான்றாகக் கொண்டுள்ளார். பத்துப்பாட்டின் வடிவம், காலம், ஆற்றுப்படைகள் சேர்த்தும், ஐவகை நிலங்கள், ஊர்கள், மன்னர்கள், வள்ளல்கள், தொழில், உணவு, உடை, இல்வாழ்க்கை, சமயம், விலங்கு, பறவை என பத்துப்பாட்டில் காணலாகும் உறுப்புகளையெல்லாம் சான்றுகளுடன் நிறைவு செய்துள்ளார்.

இவர் இடத்தையும், எல்லையையும் அகச் சான்றுகள் கொண்டே நிறைவு செய்கிறார்.

“வளம் மிகுந்த அகன்ற ஆழமான அகழிக்கு அப்பால் நன்செய் நிலங்கள் இருந்தன என்று புறநானூற்றுப் பாடல்கள் புகழ்கின்றன.

இம்மாவிலக்கை நல்லியக் கோடனுக்கு முன்னர் வாழ்ந்த ஓய்மாநாட்டு மன்னன் காலத்திலும் இருந்து சிறப்புற்றது என்பதை தென்மாவிலக்கை மன்னருள்ளும் நல்லியக்கோடன் புலி போன்ற வீரமுடையவன் என்று சிறுபாணாற்றுப்படை கூறுவதால் அறியலாம்.”[18]

இவ்வாறு தாம் மேற்கொண்ட கருத்தியலுக்கு சரியான சான்றுகளை முன்வைக்கிறார்.

## ஆராய்ச்சி நெறிமுறைகள்

வஞ்சி நாட்டைக் குறித்து இவரின் ஆய்வு பல்வேறு வரலாற்று ஆய்வாளர்களின் கருத்தை மறுத்து அளிப்பதாக உள்ளது. டாக்டர் கிருஷ்ணசாமி ஐயங்கார், டாக்டர் சோமசுந்தர பாரதியார் இருவரும் மு.இராகவையங்கார் தாம் எழுதிய ‘சேரன் செங்குட்டுவன்’ என்னும் நூலில் சேரன் தலைநகரமான கரூர், திருச்சிராப்பள்ளிக்கு மேற்கில் உள்ள கொங்குநாட்டு கருவூர் ஆகும் என்று முடிவு கூறியுள்ளார். இதனின் கூற்றை இரு பேராசிரியர்களும் மறுத்துள்ளனர். இரா.இராகவையங்கார், மு.இராகவையங்கரின் கருத்தினை ஆதரித்து ‘வஞ்சி மாநகர்’ என்னும் நூலினை வெளியிட்டார். வரலாற்றுப் பேராசிரியர் வி.ஆர்.இராமச்சந்திர தீட்சிதரும், ஐயங்காரும் தாம் எழுதிய சிலப்பதிகார ஆய்வில் ஐயங்காரின் முடிவை ஒப்புகிறார்.

சேர மன்னர்கள் சில காலம் கொங்கு நாட்டை ஆட்சி புரிந்தனர். கொங்கு நாடுக் கருவூரில் தங்கியிருந்திருக்கலாம். அங்ஙனம் தங்கியிருந்தவருள் ஒருவரான முடமோசியார் காலத்து சேரமன்னன் ஆவான் என்னும் குறிப்புப் புறம் 18-ஆம் பாடலில் உள்ளது. இதன் பொருள் யாதெனின் மாணிக்கனார் வழங்கும் ஆய்வுரை கொங்குநாட்டு கருவூர் வேறு, வஞ்சி நாட்டு கருவூர் வேறு என்பதே ஆகும்.

“வடநாட்டுப் பாடலிபுரத்தின் பெயரைச் சமணர் தமிழகத்துத் திருப்பாதிரிப் புலியூர்க்கு இட்டு மகிழ்ந்தனர். தமிழகத்திலிருந்து யாழ்ப்பாணத்திற்குக் குடியேறிய தமிழர், வண்ணார், பண்ணை போன்ற இந்நாட்டு ஊர்ப்பெயர்களைத் தாம் குடியேறிய நாட்டு ஊர்களுக்கு இட்டு மகிழ்ந்தனர்.

அவ்வாறே கருவூர் என்ற சேரநாட்டு வஞ்சியை ஆண்ட சேரர் கொங்கு நாட்டுத் தலைநகருக்கு கருவூர் என்றும் வஞ்சி என்றும் பெயர் சூட்டி மகிழ்ந்திருத்தல் இயல்பேயாகும். இப்பெயர்களைக் கொண்டே தலைநகர்க்கு உரிய அமைப்பைக் கொண்டோ, பிறவற்றைக் கொண்டோ, கொங்கு நாட்டுக் கருவூரே சேரர் தலைநகரம் என்று கூறுதல் உண்மைக்குப் புறம்பாகும். வல்லோன் வாதத்திறமை கொண்டு வாதிப்பினும், பொய் மெய்யாகாதது போலச் சேரர் வஞ்சி, சேர நாட்டகத்தேயன்றிக் கொங்கு நாட்டகத்தாகாது''[19] என ஆய்வுரை வழங்குவார்.

இவரின் ஆராய்ச்சித் திறன், ஆராய்ச்சித் துணிவு பொருத்தப் பாடுடையதாகும். தமிழ்க்கடவுள் முருகன் என்பது அனைவரும் ஒப்பிய கருத்தாகும். தொல்காப்பியர்,'சேய் மேய மைவரை உலகமும்' எனக் குறிப்பர். திருமுருகாற்றுப்படை, பரிபாடல், சிலப்பதிகார இளங்கோ, புறப்புலவர்கள் பலரும், அருணகிரிநாதரும் முருகப் பெருமானைப் பாடி மகிழ்ந்துள்ளனர். தொன்மைத் தொட்டே முருகக் கடவுள் மீதான கோட்பாடு தமிழர்களுக்கு ஒரே சீராகக் காணப்படுகிறது.

''அப்பெருமான் பழமுதிர்ச் சோலைமலைகட்கும் உரிமை பூண்டவன். அவன், திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவிதன்குடி, திருவேரகம் ஆகிய நான்கு இடங்களிலும் கோயில் கொண்டவன். மலைதோறும் ஆடல் கொண்டவன். இவையன்றி அவன் ஊர்தோறும் விழா எடுக்கும் இடங்களிலும், வெறியாட்டுக் களத்திலும், காட்டிலும், பொழிலிலும், ஆற்று இடைக்குறையிலும், ஆறுகளிலும், குளங்களிலும் பல்வேறு ஊர்களிலும், நாற்சந்தியிலும், முச்சந்தியிலும், ஐஞ்சந்தியிலும், கடம்பமரத்திலும், ஊர் நடுமரத்தடியிலும், சூதீண்டு குற்றியை உடைய இடத்திலும், குறமகள் சிறந்த முறையில் வழிபாடு இயற்றும் இடத்திலும் உறைபவன் முருகன் என்று நக்கீரர் கூறியுள்ளார்''[20] எனக் குறிப்பர்.

சங்கப்புலவர்கள் நுண்ணிய ஆராய்ச்சித் திறன் உடையவர் என்பது இவ்வாய்வுரையின் வழி அறியலாகும் செய்தியாகும். சிறுபாணாற்றுப்படை நல்லூர் நத்தத்தனார் நெய்தல் நிலத்தில் உள்ள பூக்களின் இயல்பை,

1. “தாழை அன்னம் போல் பூக்கும்
2. செருந்தி தன்னைக் கண்டோரை பொன்னென மருளப் பண்ணும்
3. முதற் சூலையுடைய கழி முள்ள ஒளியையுடைய நீலமி போல ஒக்கும்.
4. நெடிய தாளினையுடைய புன்னை நித்திலம் போல அரும்பும் (146-149) என்று கூறியுள்ளார்”[21] என ஆய்வுரை வழங்குவர்.

இவரின்குறிப்பு புலவர்கள் இலக்கியத்தில் அத்தனை அழகினையும் குறித்து உள்ளார்கள் என்பதே ஆகும். இந்தப் புலவர்களின் படைப்பாக்கத்தில் இயற்கையோடு இயைந்தே வாழ்ந்தவன் மனிதன் என்பது கருத்தாகும். மா.இராசமாணிக்கனார் குறிஞ்சி, முல்லை, மருதம் அந்நிலங்களில் காணலாகும் பூக்களையும் தம் ஆய்வில் தெளிவுபடுத்தியுள்ளார்.

**ஆய்வுரைகள்**

மா.இராசமாணிக்கனாரின் பத்துப்பாட்டு ஆராய்ச்சி ஆய்வாளர்களுக்குக் கலங்கரை விளக்கமாகும். இவரின் ஆய்வில் அணுகுமுறை, உரையாசிரியர்கள், திறனாய்வாளர்கள், தர்க்கவியலாளர்கள் ஆகியோரின் மரபை ஒட்டி நிற்கிறது.

- ஆய்வாளன் நடுநிலை பார்ப்பவன் என்பதை உறுதி செய்கிறார்.
- பாரியைப் பற்றிய குறிப்புகள் அகநூல்களிலும் உள்ளது என்பதை குறித்துள்ளார்.
- பாரியின் வரலாற்றுக் குறிப்பு பாரிக்குப் புறம் காட்டி ஓடிய மூவேந்தர் யாது செய்தனர் என்று தெரியவில்லை என்று குறிக்கிறார்.
- பாரி மகளிர் பாடல்கள் கபிலரின் கண்ணீர் கொண்டே இறப்புச் செய்தியினை விளக்குகிறார்.

- பாரி மகளிருக்கு மண முடித்தலை கல்வெட்டுச் சான்றுடன் விளக்குகிறார்.
- பத்துப்பாட்டு புறநானூறு போன்றே ஒரு வரலாற்று ஆவணம் என முடிவு கூறுகிறது.
- கடையெழு வள்ளல் குறித்து செய்திகளை வழங்கியுள்ளார். இவர் பல்வேறு வரலாற்றுச் சிக்கலுக்கு விடை கண்டிருக்கிறார்.

**அறிஞர் க.ப.அறவாணன்**

அண்ணாமலைப் பல்கலைக் கழகம் ஈன்றெடுத்த முத்துக்களில் நன் முத்தாவார். தமிழர் எண்ணியது கோடி, பேசியது இலட்சம். எழுதியது ஆயிரம், அச்சிட்டது நூறு பின்பற்றியது பூஜ்ஜியம் எனத் தமிழர் இனத்தின் மீது அடங்கா கோபம் கொண்டவர். கற்பதை கடமையாகக் கொண்டவர். அரிய ஆய்வு நூல்களைப் படித்தே தீருவது என விரதம் பூண்டவர். தொடர்ந்து கற்பவர். பொற்கோ, பேராசிரியர் சிற்பி.பாலசுப்பிரமணியம், பேராசிரியர் படிப்புச் செம்மல் மெய்யப்பன், பேராசிரியர் கல்லடம் மாணிக்கம் முதலானோர் ஒருசார் காலத்தவர் ஆவர்.

இவர் தமிழியல், மானிடவியல், சமூகவியல் ஆகிய துறைகளில் செழுமையான புலமை நலம் பெற்றவர். மனோண்மணிய சுந்தரனார் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தராகத் திகழ்ந்தவர். புதுவைப் பல்கலைக் கழகத்தில் பேராசிரியராக, துறைத்தலைவராகப் பணியாற்றியவர். இன்றைய இளைஞர்களிடத்து இவர் வழங்கும் அறிவுரையானது 'குறைந்த அளவில் ஆவது ஆங்கிலத்தைக் கற்றுத் தமிழுக்குத் தொண்டாற்றுக' என்கிறார்.

**அற்றை நாட் காதலும் வீரமும்**

**அமைப்பும் சிறப்பும்**

அகத்திணை, புறத்திணைக் கோட்பாடுகளை விளக்கி நிற்கின்றன. தொல்காப்பியம், தொல்காப்பிய உரை, உரை வேறுபாடுகள், புறத்திணையின் அமைப்பு, இவ்வியல் வேறுபாடுகள் என்னும் நிலையில் சொற் பொருள் விளக்கங்களுடன் ஒவ்வொரு கூறுபாட்டிற்கும் விரிவான விளக்கம் அளித்துள்ளார்.

இவ்வாய்வு விவாத நடையாக அமைக்கப்பட்டு உள்ளது. புறத்திணையியல் அடிப்படையான மண்ணாசை, பொன்னாசை, பொருளாசை, புகழாசை அறிதின் முயன்று விளக்கங்கள் தன்னுணரப்பட்டுள்ளன..

மேலைநாட்டு சித்தாந்த கோட்பாடுகளுடன் தமிழரின் மரபுகள் ஒட்டியும் வெட்டியும் விவாதிக்கப்பட்டுள்ளன.

“புறநானூறு, பதிற்றுப்பத்துப்பாக்கள் அனைத்தும் அரசனைத் தொடர்புறுத்திப் புகழ்பவை. தன்னிச்சையான வீரத்தை முற்றுமாகக் கொண்டு நிற்பது வெட்சி ஒன்றே. வெட்சி கரந்தை என்பனவற்றுள் இடம் பெற்றுள்ள துறைப் பிரிவுகள் அனைத்தும் தனிமாந்தர் மறத்தைப் போற்றுபவை. ஆநிரை கோடல் என்பது ஏறத்தாழ அயலான் செல்வத்தைக் கொள்ளை கொள்ளுதலே, கொள்ளை இடல் வீர ஊழிக்கால இயல்பு”[22] என வீரயுகத்தின் வரையறையைக் குறிப்பார்.

சங்க காலம் வீரயுகக் காலம் என முன்னோர் மொழிந்ததை வழிமொழிகிறார். அதே நிலையில் சங்க காலம் மட்டுமே வீரம் செறிந்த, வீரயுகக் காலம் என்பதையும் மறுப்பர். இதற்கு கைலாசபதியின் கருத்தையும் டாக்டர்.ந.ஜெயராமன் கருத்தையும் முன் வைப்பார். இவ்வாறான ஆய்வு அணுகுமுறை இவரின் ஆய்வுக்கு தகுதியுடையதாக உள்ளது.

## ஆய்வு நெறி

‘தமிழினத்தின் ஆரியர் தமிழர்’ என்னும் இனக்குழுப் போராட்டம் இன்றளவும்நடைபெற்ற வண்ணம் உள்ளது. ஆரியர்களின் தோற்றம், தொழில், பழக்கவழக்கங்கள், அவர்கள் தமிழ் இலக்கியத்தில் இடம் பெற்றுள்ள நிலை ஆகியவற்றைப் பல சான்றுகளுடன் முன் வைக்கிறார். தொல்காப்பியத்தில் அந்தணர் பற்றிய குறிப்பை,

- நூல், கரகம், முக்கோல், மனை என்பன அந்தணர்க்குரியவை.
- அமாத்திய நிலையும். சேனாபதி நிலையும் பெற்ற அந்தணர்க்கு அரசப் பொறுப்பும் அளிக்கப்படும்.

- அந்தணர்க்குரிய முந்நூல் முதலானவை அரசர்களுக்கும் உரியதாக வரும்.
- பரிசில் கடாநிலையும், பரிசில் விடையும், போல்வன கூறியும் பாடாண் திணைக்குரிய கைக்கிளைப் பொருள் கூறியும், கொடைத் தொழில் கூறியும், அவற்றிற்கேற்ப எடுத்தோதி பெயர் கூறியும் அந்தணரைத் தனிமை வகை செய்வதில்லை''[23] என்பார்.

இவர் வர்ணாசிரமத்தைத் தொல்காப்பியர் குறித்துள்ளதை அப்படியே விளக்குவார். தொல்காப்பியர் காலத்திற்கு அடுத்தும் பிராமணர் செல்வாக்குப் பெருகியிருந்தது என்பதற்குச் சங்க இலக்கிய ஆய்வாளர் கே.கே.பிள்ளையின் கருத்தை மேற்கோள் காட்டுவார். வேதம் ஓதுபவர் அந்தணரே என்பதை வள்ளுவர் குறள் (134) இல் குறித்துள்ளதை எடுத்துக் காட்டுவர். பல்யானை செல்கெழு குட்டுவன் என்ற சேர மன்னனிடம் பாலை கௌதமனார் என்ற பார்ப்பான் தானும் தன் மனைவியும் துறக்கம் எய்துவதற்கு ஒன்பது பெரும் வேள்விகளைச் செய்துவிட்டான் என்றும் அரசனைத் துறவு பூணச் செய்தான் என்றும் சுட்டிக்காட்டுவார். இக்கூற்று பதிற்றுப்பத்து பதிகத்தில் மூன்றாம் பத்தின் கூற்று என்றும் சான்று பகிர்கிறார். புறம் 397-ஆவது தாயக்கண்ணனார் என்னும் புலவர் சோழ மன்னனை 'அந்தணர் அறம் புரிந்து எடுத்த தீயோடு விளங்கும் நாடன்' என்ற குறிப்பை முன் எடுப்பார். பல யாகங்களை எய்ததனால் பல்யாகசாலை குடிப்பெருவழுதி என்னும் சிறப்புப் பெயர் பாண்டிய மன்னனுக்கு அமைவதாகச் சுட்டுகிறார்.

இந்த ஆய்வுரைகள் அனைத்தும் பார்ப்பனர்க்கு உள்ள செல்வாக்கினை உணர்த்தி நிற்கிறது. இவ்வாறான செல்வாக்கு இந்தியா முழுவதுமே இருந்தது என்பதை அறிய முடிகிறது.

குடிநிலை, துடிநிலை, கொடிநிலை இவற்றின் விளக்கங்களுக்குப் பொருத்தமான பாடத்தை,

''மறங் கடைக் கூட்டிய குடிநிலை சிறந்த கொற்றவை நிலையும் அகத்திணைப் புறனே என்பது தொல்காப்பிய நூற்பா இதன்கண் இளம் 'குடிநிலை' என்று பாடம் ஓத, தச்சர், துறநிலை என்று பாடமோதி உரை வகுப்பார். பாரதி, நச்சர் கருத்தை வழி மொழிவார்.

பின்னர் துடிநிலை என்ற பாடத்திலும் கொடிநிலை என்ற பாடம் மிகப் பொருந்துவது என்பார்.”[24]

இங்குப் பாடமாவது குடிநிலை, துடிநிலை, கொடிநிலை இம்மூன்றிற்கும் தனித்தனி விளக்கங்களை எடுத்துரைத்துள்ளார்.

இவற்றில் துடிநிலை என்பதனை. “புறம் (269, 287, 290, 291)”[25] ஆகிய பாடல்களை நோக்க, உறியடித்தல் வெற்றி மறவர்தம் விளையாட்டு என்பது தெரியவரும்; துடியடித்தல் கரந்தை மறவரிடம் இலக்கிய வழக்காறுகளில் நச்சினார்க்கினியர் ‘ஆயின் நிலை’ கொண்டோருக்கும் மீட்போறுக்கும் பொது என உரைப்பர் என்கிறார். இக்கருத்தியலை வேறு கண்டு கூறினாரில்லை என உரைக்கிறார்.

**ஆய்வுரைகள்**

- புறப்புலவர்களின் தனித்திறன்களைத் தெள்ளிதின் எடுத்துரைக்கிறார்.
- ஆய்வுரைகளை தர்க்கவியலாகவே முன் வைக்கிறார்
- மரபை போற்றும் இவர், மரபை மறுப்பதிலும் தக்க சான்றுகளை முன்வைத்துள்ளார்.
- தொல்காப்பியச் சூத்திரங்கள் செழுமையுடையன என்பதே இவரின் துணிபு.
- உரையாசிரியர்கள் தம்முள் கருத்து வேறுபாடு உடையவர். பன்நிலைகளில் நிறுவுகிறார்.
- உரைக்கும் மூலத்திற்கும் இடைவெளியைக் குறைக்கிறார்.
- ஆடவர் மகளிர் உரிமை, மானம் குறித்து இவர் வழங்கும் சான்றுகள் தகுதி நிறைந்ததாக உள்ளன.
- மூடநம்பிக்கையையும், தெய்வ நடையையும் சமபார்வையில் குறிக்கிறார்.

- போர்புரியும் பல்வேறு காரணங்களை நிரல்பட குறிக்கிறார்.
- நடுகல்லின் வரலாற்றை தெள்ளிதின் விளக்கியுள்ளார்.
- வேள்வியின் உயர்ச்சியை நன்றாக பதிவு செய்துள்ளார்.
- மன்னருக்கும் மக்களுக்கும் உள்ள இடைவெளியை சுட்டத் தவறவில்லை.
- வீரத்தின் உண்மைப் பொருளை தெள்ளிய நிலையில் சுட்டிக் காட்டுகிறார்.

## முடிவுகள்

புறப்புலவர்கள் குறித்த ஆய்வு மிகப் பரந்த பரப்பையுடையதாகும். உரையாசிரியர்கள் குறித்து இன்றளவிலும் நாளைய அளவிலும் ஆய்வுரைகள் நடைபெறும் இதற்கு காரணம் அதன் கருத்தியல் அமைப்பே ஆகும்.

தொல்காப்பிய மூலம், உரையாசிரியர்கள் மறங்கள், திறனாய்வாளர் பிழைகள், ஆய்வாளர் விழுதுகள் என்னும் மரபை உடையது புலவர் பதிவுகளில் அறிஞர்களின் பார்வையாக ஔவை துரைசாமிபிள்ளை, டாக்டர்.ந.சஞ்சீவி, பேராசிரியர்.க.வெள்ளைவாரணனார், பேராசிரியர் ம.இராசமாணிக்கனார். டாக்டர் க.ப.அறவாணன் ஆகியோரின் புற ஆய்வுகள் மட்டும் இங்கு முன் வைக்கப்பட்டுள்ளது. புறப்பாடல் ஆய்வாளர்கள் நீண்ட வரிசையை உடையோர் என்பது குறிப்பிடத்தக்கதாகும். ஆகலின், எல்லை கருதி இவர்களின் ஆய்வு மட்டும் நோக்கப்பட்டுள்ளது.

இவர்கள் மன்னர்களின் வரலாற்றைத் தெளிந்து உரைக்கின்றனர். புலவர்களின் பல நிலைகளையும் சுட்டியுள்ளனர். தொல்காப்பியத்தின் புற வேற்றுமைகளைச் சான்றுடன் குறிக்கத் தவறவில்லை. இவ்வறிஞர்கள் பல்வேறு எதிர்கால ஆய்வுக் களங்களைச் சுட்டிக்காட்டியுள்ளனர் என்பது புலனாகிறது.

மா.இராசமாணிக்கனாரின் வரலாற்றியல் பார்வை பல சிக்கல்களுக்குத் தீர்வு கண்டுள்ளது. அறவாணனின் கருத்தியல் வாதம் புறப்பாடல்களில் புதிய தளத்தை உருவாக்கி உள்ளது. துரைசாமி பிள்ளையின் உரை இயல்பு சங்க இலக்கியங்கள் தம்முள் நெருங்கிய தொடர்புடையன என்பதை உணர்த்துகிறது.

வெள்ளை வாரணனாரின் உரை விளக்கம் தொல்காப்பியமும், புறப்புலவர்களும் வேறு அல்ல என உணர்த்தி நிற்கின்றது இது போன்ற கருத்துக்கள் இவர்களது ஆய்வுரைகள் வழியாக அறியலாம்.

## சான்றெண் விளக்கம்


1. மு.வை.அரவிந்தன், உரையாசிரியர்கள், ப.62.
2. ந.சஞ்சீவி, சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள் ப.42.
3. மேலது, ப.43.
4. ந.முருகேசபாண்டியன், அற்றைத் திங்கள் அவ்வெண்ணிலவில், ப.14.
5. ச.வே.சுப்பிரமணியன், சங்ககாலப் பெண்பாற் புலவர்கள், ப.12.
6. ந.சஞ்சீவி, சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள் ப.322.
7. மேலது, ப.393.
8. ஔவை துரைசாமிபிள்ளை, புறநானூறு மூலமும் உரையும், முன்னுரை ப. VIII.
9. மேலது, ப. VI
10. மேலது, ப. I
11. மேலது, ப.
12. மேலது, ப.69.
13. மேலது, பக்.238-239.
14. க.வெள்ளைவாரணன், தொல்காப்பியம் புறத்திணையியல், உரைவளம், ப.9.
15. ச.வே.சுப்பிரமணியன், தொல்காப்பியம் தெளிவுரை, ப.376.
16. க.வெள்ளைவாரணன், தொல்காப்பிய உரைவளம், ப.6.
17. மேலது, ப.127.
18. மா.இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப.10.
19. மேலது, ப.163.
20. மேலது, பக்.213-214.
21. மேலது, ப.651.
22. க.ப.அறவாணன், அற்றைநாட் காதலும் வீரமும், ப.227.
23. மேலது, ப.290
24. மேலது, ப.242
25. புறம்,பா. 269, 287, 290, 291.

# முடிவுரை

சங்கப் புலவர்களின் புறப்பாடல்களில் பதிவும் பார்வையும் என்னும் இவ்வாய்வில் பின்வரும் முடிவுகள் தெரியவருகின்றன.

சங்கப்புலவர்கள் பல்துறை அறிவு படைத்தவர்கள் என்பது புலனாகிறது. புலப்பாட்டு நெறியில் தனித்தன்மை வாய்ந்தவர்களாக திகழ்கின்றனர். கருத்து, வடிவம், கற்பனை, உணர்ச்சி ஆகிய இலக்கிய வடிவங்களை தெள்ளிதின் உணர்ந்தவர்களாகக் காணப்படுகின்றனர். பழமைக்கும் புதுமைக்கும் இணைப்புப் பாலமாக உள்ளனர் புலவர்கள். இயற்கையோடு இயைந்த வாழ்க்கையையே இயல்பு என்கின்றனர் புறப்புலவர்கள்.

புறப்புலவர்களின் பாடல்கள் அனைத்தும் வரலாற்று ஆவணங்கள் என தெள்ளிதின் உணர முடிகின்றது. உலகியல் துறையின் முன்னோடிகளாக உள்ளனர். சமூக மொழியியலை இயைபுப் படுத்தும் பாங்கு போற்றுதற்குரியதாகும். அவர்கள் அனைத்து ஆளுமைப் பண்புகளையும் ஒருங்கே பெற்றுள்ளனர். பண்பை பேணிக் காப்பதை மனிதனின் கடமையென கூறுகின்றனர். புலவர்கள் வறுமையிலும் செம்மையாளர்களாகத் திகழ்ந்துள்ளனர்.

தகுதியற்ற பரிசினைப் பெற மறுத்துள்ளனர். மன்னனுக்கு அஞ்சாமல் அறத்தை உணர்த்தியுள்ளனர். தன்னலமற்ற பொதுநல சிந்தனையுடையோராக காணப்படுகின்றனர். ஒழுக்கத்தை உயிரென ஓம்பியுள்ளனர். கலையும் வாழ்க்கையும், ஒன்றே என்பது புறப்புலவர்களின் கோட்பாடாக வாழ்ந்துள்ளனர்.

சங்ககால மக்கள் பலஇனக்குழுக்கள் சமுதாயமாக வாழ்ந்தகாலம். நில அடிப்படையில் தொழில் நிலைகள் காணப்படுகின்றன. சமூகத்தில் தொழில் சார்ந்த பல்வேறுபட்ட படிநிலைகள் உள்ளதை அறிய முடிகின்றது. பல்வேறு தொழிலாளர்கள் காணப்படுகின்றனர். அணிகலன்கள் ஆடைகள், உணவு முறைகள் இவற்றில் சிறந்தே அக்கால மக்கள் காணப்பட்டனர்.

மன்னர்கள் அருளாளர்களாக உள்ளதைப் புலவர்கள் பரக்கச் சுட்டியுள்ளனர். மன்னர்கள் கடமை நெறி தவறாதவர்களாக, அறநெறியை உயிர் என ஓம்பியுள்ளவர்களாக புகழ்ச்சியில் மிகுந்த விருப்பம் உடையவர்களாக இருந்துள்ளனர்.

இகழச்சியில் தன்னிலை மறந்து நிலை குலைந்தும் நின்றுள்ளனர் என்பதைப் புலவர்கள் வழியாக அறியலாம்.வெற்றி தோல்விகளைப் புலவர்கள் தர்க்கநெறியில் மன்னனுக்கு சுட்டிக் காட்டியுள்ளனர். மன்னர்கள் செங்கோன்மை ஆட்சியே புரிந்துள்ளனர்.

மன்னர்களின் கொடுங்கோன்மையைத் துணிவுடன் எதிர்த்தும் உள்ளனர். தகுதியான போற்றுரைகளைப் புலவர்கள் மன்னர்களுக்கு வழங்கி உள்ளனர்.

போர் நெறியில் தக்கது இது; தகாதது இது; என உரைத்து உள்ளனர். பகையுணர்வை மன்னர்களிடம் வளர்க்காமல் தடுத்து உள்ளனர். கற்பு என்பது ஆணுக்கும் பெண்ணுக்கும் சமமாய் அமைய வேண்டும் என்கின்றனர். வள்ளல்களின் வள்ளல் தன்மையினைப் பெரிதும் பாராட்டி மகிழ்ந்துள்ளனர். கபிலர், பாரியின் எல்லா நிலைகளையும் தெளிவுறுத்திப் பாடியுள்ளார். மன்னனின், மகளுக்காக கபிலர் எடுத்த முயற்சிகள் அரிய வரலாறாகும்.

ஆற்றுப்படைப் புலவர்கள் தமிழகத்தில் வரலாற்றினைப் புறநானூறு போன்றே பறை சாற்றினர். திருமுருகாற்றுப்படைநக்கீரர் இறைவனுக்கும் மனிதனுக்கும் உள்ள தொடர்பினைத் தெளிந்து உரைக்கிறார். புறப்பாடல்கள் பற்றிய ஆராய்ச்சிகள் நீண்ட வரலாறு உடையதாகும். எனினும் புறச்செய்திகள் அதிகம் நிறைந்துள்ள புறநானூற்றுப் பாடல்கள் மட்டும் அதிக எண்ணிக்கையில் நோக்கப்பட்டுள்ளது.

உரையாசிரியர்கள் புறப்பாடல்களின் பொருளினைத் தெரிந்து உரைக்கின்றனர். புற ஆய்வாளர்கள் கருத்துரை கொண்டே மன்னர்களின் வரலாற்றினைத் தெளிவாக உணர முடியும். தொல்காப்பியத்தின் உரை வேற்றுமைகளை ஆய்வாளர்கள் நுணுகி ஆராய்ந்து உள்ளனர். திணைகள், புறப்பாடல்கள் அமைவிற்குச் சான்றுகளாக உள்ள காரணத்தால், இக்குறிப்புகள் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

புறப்பாடல் ஆய்வில் ஔவை துரைசாமிபிள்ளை, டாக்டர்.ந.சஞ்சீவி, பேரா.க.வெள்ளைவாரணனார், பேரா.ம.இராசமாணிக்கனார், அறிஞர் க.ப.அறவாணன் தகுதிசால் அறிஞர்களாகத் திகழ்கின்றனர். அதனால் இவ்வாய்வு அவர்களின் கருத்தியல்புகளை நோக்கியுள்ளது என்பது குறிப்பிடத்தக்கதாகும். எதிர்கால ஆய்வுக்களங்காகப் பின்வருவனவற்றைச் சுட்டலாம். சங்கப்புலவர்களின் புறப்பாடல்களில் பதிவும் பார்வையும் என்னும் இந்த ஆய்வின் மூலம் பின்வரும் ஆய்வுக் களங்கள் பரிந்துரைக்கப்படுகின்றன.

1. புறப்புலவர்களின் ஆளுமைத் திறன்
2. வரலாற்றியல் நோக்கில் புறப்பாடல்கள்
3. இனவரைவியல் கோட்பாட்டில் சங்கப்புலவர்களும் மன்னர்களும்
4. சங்ககால அரசியலும், தற்கால அரசியலும்
5. பொது நோக்கில் வள்ளல்களின் வாழ்வியல்கள்

என்ற தலைப்புகளில் பின்னாளில் ஆய்வுத் தளங்கள் அமைக்கலாம் என அறிய முடிகிறது.

# துணைநூற்பட்டியல்

## முதன்மை ஆதாரங்கள்

1. சுப்பிரமணியன், ச.வே. — எட்டுத்தொகை மூலமும்
தெளிவுரையும்
தொகுதி - 2
மணிவாசகர் பதிப்பகம்
சென்னை – 18.
முதல்பதிப்பு – 2010.

2. நாகராஜன், வீ. — பத்துப்பாட்டுமூலமும் உரையும்
தொகுதி – 2
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை – 98.
முதல் பதிப்பு – 2004.

3. மோகன், இரா. — பத்துப்பாட்டு மூலமும் உரையும்
தொகுதி – 1
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை – 98.
முதல் பதிப்பு – 2004.

## துணைமை ஆதாரங்கள்

1. அகத்தியலிங்கம், ச. தமிழ் மொழி அமைப்பியல், மெய்யப்பன் தமிழாய்வகம் சிதம்பரம் - 001. முதல்பதிப்பு – 2002.

2. அருணாச்சலம், ப. பக்தி இலக்கியம் முல்லை நிலையம் சென்னை – 17. மறுபதிப்பு – 2007.

3. அரவிந்தன், மு.வை. உரையாசிரியர்கள் மணிவாசகர் பதிப்பகம் சென்னை – 108. மூன்றாம் பதிப்பு – 1995.

4. அல்போன்ஸ், அ. உருவாகும் நான் நாஞ்சில் பதிப்பகம் நாகர்கோவில் மறுபதிப்பு – 2005.

5. அறவாணன், க.ப. அற இலக்கியக் களஞ்சியம் தமிழ்க்கோட்டம் சென்னை – 29. முதல்பதிப்பு – 2008.

6. அனுராதா, ஆர். சங்க இலக்கியத்தில் அறக்

கருத்துகள்
தமிழாய்வு மன்றம்,
சென்னை – 96.
முதல்பதிப்பு – 2007.

7. இரவிச்சந்திரன், தி.கு. சிக்மண்ட் ∴பிராய்ட்
உளப்பகுப்பாய்வு அறிவியல்
தெற்கு சிவன்கோயில்தெரு,
சென்னை-24.
முதல்பதிப்பு – 2005.

8. இராசமாணிக்கனார், மா. பத்துப்பாட்டு ஆராய்ச்சி
சாகித்திய அகாதெமி
புதுதில்லி.
முதல் பதிப்பு – 2012.

9. இராமநாதன், லெ.ப.கரு. பத்துப்பாட்டு வளம்
முத்தையா நிலையம்
சென்னை.
முதல்பதிப்பு – 1968.

10. இராமநாதன், லெ.ப.கரு. எட்டுத்தொகைச் செல்வம்
முத்தையா நிலையம்
சென்னை.
முதல்பதிப்பு – 1984.

11. கரிகாலன் (தொகுப்பாசிரியர்) புறநானூற்றுச்
சொற்பொழிவுகள்
குமரன் புத்தக நிலையம்
சென்னை.
முதல்பதிப்பு – 2011.

12. கலியாண சுந்தரனார், வி. பெண்ணின் பெருமை

மணிவாசகர் பதிப்பகம்,
பாரிமுனை, சென்னை-8.
மூன்றாம் பதிப்பு – 2002.

13. கைலாசபதி, க. — தமிழ் வீரநிலைக் கவிதை
குமரன் புத்தக நிலையம்
சென்னை.
முதல்பதிப்பு – 2006.

14. குமரன், இரா. — சங்க இலக்கிய அகப்பாடல்களில் கருத்துப்புலப்பாட்டுஉத்திகள்
அனன்யா பதிப்பகம்
தஞ்சாவூர் – 005.
முதல்பதிப்பு – 2001.

15. சஞ்சீவி, ந. — சங்கஇலக்கியஆராய்ச்சி அட்டவணைகள்
சென்னைப்பல்கலைக் கழகம்
சென்னை – 4.
முதல்பதிப்பு – 1973.

16. சரவணானந்தா, சுவாமி. — வள்ளலார் வாழ்க்கையும் தத்துவமும்
வானதி பதிப்பகம்
சென்னை – 17.
முதல்பதிப்பு – 1995.

17. சாமிநாதையர், உ.வே. புறநானூறு மூலமும் பழைய உரையும், திருவான்மியூர், சென்னை -41. ஏழாம் பதிப்பு – 1971.

18. சாரங்கபாணி, இரா. சாமிநாதன், த. சங்க இலக்கிய மேற்கோள்கள் மெய்யப்பன் பதிப்பகம், மணிவாசகர் நூலகம், சிதம்பரம் - 001 இரண்டாம் பதிப்பு – 2017.

19. சார்லஸ், மில்டன்.ப. மனிதனும் மனமும் ஸ்ரீ மாருதி புக் ஹவுஸ், சென்னை-14. மறுபதிப்பு – 2006.

20. சீனிவாசன், துரை. திணைக்கோட்பாடு நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் சென்னை. முதல்பதிப்பு – 2016.

21. சுப்பிரமணியன், கா. பழந்தமிழர் நாகரிகம் அல்லது தொல்காப்பிய பொருளதிகாரம் கருத்து சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி. முதற்பதிப்பு – 1983.

22. சுப்பிரமணிய அய்யர், ஏ.வி. தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி
அமுத நிலையம்
சென்னை – 18.
முதல் பதிப்பு – 1959.

23. சுப்பிரமணியன், ச.வே. தொல்காப்பியம் தெளிவுரை
மணிவாசகர் பதிப்பகம்,
சிங்கர்தெரு,
பாரிமுனை,சென்னை–108.
பன்னிரெண்டாம் பதிப்பு-2013.

24. சுப்பிரமணியன், ச.வே. சங்ககால பெண்பாற் புலவர்கள்
மெய்யப்பன் பதிப்பகம்,
சிதம்பரம்-001.
முதல்பதிப்பு – 2014.

25. சோமசுந்தரம், டி.எஸ் . சம்பந்தர் திருநெறி
வாணி பதிப்பகம்
சென்னை – 43.
முதல்பதிப்பு – 2003.

26. சோமசுந்தரனார், பொ.வே. பத்துப்பாட்டு, தொகுதி – 1
(உரையாசிரியர்)
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்டி.டி.கே. சாலை,
சென்னை – 18.
முதற்பதிப்பு – 2007.

27. சோமசுந்தரனார், பொ.வே. — பத்துப்பாட்டு, தொகுதி – 2 சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் டி.டி.கே. சாலை, சென்னை – 18. மறுபதிப்பு – 2008.

28. ஞானமூர்த்தி, தா.ஏ. — இலக்கியத் திறனாய்வியல் ஐந்திணைப் பதிப்பகம் திருவல்லிக்கேணி, சென்னை-5 முதல் பதிப்பு – 2006..

29. தமிழருவி மணியன் — ஊருக்கு நல்லது சொல்வேன் ஆனந்தவிகடன், அண்ணாசாலை சென்னை – 2.

30. திருநாவுக்கரசு, க.ந. — திருக்குறளில் கற்பனைத் திறனும் நாடக நலனும் சென்னைப்பல்கலைக் கழகம், இரண்டாம் பதிப்பு – 1982.

31. துரைசாமிப்பிள்ளை, சு. — பதிற்றுப்பத்து மூலமும் உரையும் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், டி.டி.கே. சாலை, சென்னை – 18. மறுஅச்சு – 2007.

32. துரைசாமிப்பிள்ளை, சு. — புறநானூறு பகுதி-1, மூலமும் உரையும்
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை – 18.
மறுஅச்சு – 2007.

33. நடராசன், தி.சு. — திறனாய்வுக்கலை
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை – 98.
முதல்பதிப்பு – 1996.

34. பஞ்சாங்கம், க. — இலக்கியமும் திறனாய்வுக் கோட்பாடுகளும்
அன்னம் பதிப்பகம்,
தஞ்சாவூர் – 007.
முதல்பதிப்பு – 2012.

35. பஞ்சாங்கம், க. — தமிழ் இலக்கியத் திறனாய்வு வரலாறு
அன்னம் பதிப்பகம்,
தஞ்சாவூர் – 007.
முதல்பதிப்பு – 2004.

36. பரிமேலழகர் — திருக்குறள் உரை,
உமா பதிப்பகம்,
சென்னை – 1.
முதல்பதிப்பு: 1997.

37. பட்டாபிராமன், துரை. புறத்திணைஇலக்கியங்களில் திணை, துறை ஈகை அச்சகம், சென்னை முதல்பதிப்பு – 1986.

38. பாண்டுரங்கன், கீ. பண்டைத்தமிழ் போரியல் வாழ்க்கையும் தற்காலப்போர் நடவடிக்கையும் குமரன் பதிப்பகம் சென்னை – 17.

39. மாதையன், பெ. சங்ககாலஇனக்குழச் சமுதாமும், அரசு உருவாக்கமும் பாவை பதிப்பகம், சென்னை. முதல்பதிப்பு – 2012.

40. முருகேச பாண்டியன், ந. அற்றைத் திங்கள் அவ்வெண்ணிலவில் காலச்சுவடு பதிப்பகம் நாகர்கோவில் மூன்றாம் பதிப்பு – 2010.

முதல்பதிப்பு – 1985.

41. வரதராசனார், மு. மொழிவரலாறு பாரிநிலையம், சென்னை. மறுபதிப்பு – 2007.

42. வரதராசனார், மு. இலக்கியத் திறன் பாரிநிலையம், சென்னை. இரண்டாம் பதிப்பு – 1965.

43. வேங்கடசாமி நாட்டார், ந.மு. சிலப்பதிகாரம்
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை – 18.
இரண்டாம் பதிப்பு – 1999.

44. மகாதேவன், கதிர். ஒப்பிலக்கிய நோக்கில் சங்ககாலம்
மேக்மில்லன் இந்தியா லிமிடெட், சென்னை – 41.
முதல்பதிப்பு – 1985.

45. முருகேச பாண்டியன், ந. அற்றைத் திங்கள் அவ்வெண்ணிலவில்
காலச்சுவடு பதிப்பகம் நாகர்கோவில்
மூன்றாம் பதிப்பு – 2010.

46. வெள்ளைவாரணார், க. தொல்காப்பியம், புறத்திணையியல்,உரைவளம்
மதுரைக் காமராசர் பல்கலைக் கழகம்,
முதல்பதிப்பு – 1983.

# சங்கப் புலவர்களின் புறப்பாடல்களில் பதிவும் பார்வையும்

திருவள்ளுவர் பல்கலைக் கழகத்திற்கு முனைவர் பட்டத்திற்காக

(பகுதிநேரம்) அளிக்கப் பெறும் ஆய்வேடு

**ஆய்வாளர்**

**ப.அருளமுதம்**

**பதிவுஎண். No.TU/R/Ph.D/Reg\PT/TAMIL/TKGACV/4008. Dt.09.09.2011.**

**நெறியாளர்**

முனைவர் இரா.சிவகுமார்

உதவிப்பேராசிரியர்

தமிழாய்வுத்துறை

திரு கொளஞ்சியப்பர் அரசு கலைக் கல்லூரி (நிலை–1)

விருத்தாசலம் - 606 001.

சூன் – 2018

# முடிவுரை

சங்கப் புலவர்களின் புறப்பாடல்களில் பதிவும் பார்வையும் என்னும் இவ்வாய்வில் பின்வரும் முடிவுகள் தெரியவருகின்றன.

சங்கப்புலவர்கள் பல்துறை அறிவு படைத்தவர்கள் என்பது புலனாகிறது. புலப்பாட்டு நெறியில் தனித்தன்மை வாய்ந்தவர்களாக திகழ்கின்றனர். கருத்து, வடிவம், கற்பனை, உணர்ச்சி ஆகிய இலக்கிய வடிவங்களை தெள்ளிதின் உணர்ந்தவர்களாகக் காணப்படுகின்றனர். பழமைக்கும் புதுமைக்கும் இணைப்புப் பாலமாக உள்ளனர் புலவர்கள். இயற்கையோடு இயைந்த வாழ்க்கையையே இயல்பு என்கின்றனர் புறப்புலவர்கள்.

புறப்புலவர்களின் பாடல்கள் அனைத்தும் வரலாற்று ஆவணங்கள் என தெள்ளிதின் உணர முடிகின்றது. உலகியல் துறையின் முன்னோடிகளாக உள்ளனர். சமூக மொழியியலை இயைபுப் படுத்தும் பாங்கு போற்றுதற்குரியதாகும். அவர்கள் அனைத்து ஆளுமைப் பண்புகளையும் ஒருங்கே பெற்றுள்ளனர். பண்பை பேணிக் காப்பதை மனிதனின் கடமையென கூறுகின்றனர். புலவர்கள் வறுமையிலும் செம்மையாளர்களாகத் திகழ்ந்துள்ளனர்.

தகுதியற்ற பரிசினைப் பெற மறுத்துள்ளனர். மன்னனுக்கு அஞ்சாமல் அறத்தை உணர்த்தியுள்ளனர். தன்னலமற்ற பொதுநல சிந்தனையுடையோராக காணப்படுகின்றனர். ஒழுக்கத்தை உயிரென ஓம்பியுள்ளனர். கலையும் வாழ்க்கையும், ஒன்றே என்பது புறப்புலவர்களின் கோட்பாடாக வாழ்ந்துள்ளனர்.

சங்ககால மக்கள் பலஇனக்குழுக்கள் சமுதாயமாக வாழ்ந்தகாலம். நில அடிப்படையில் தொழில் நிலைகள் காணப்படுகின்றன. சமூகத்தில் தொழில் சார்ந்த பல்வேறுபட்ட படிநிலைகள் உள்ளதை அறிய முடிகின்றது. பல்வேறு தொழிலாளர்கள் காணப்படுகின்றனர். அணிகலன்கள் ஆடைகள், உணவு முறைகள் இவற்றில் சிறந்தே அக்கால மக்கள் காணப்பட்டனர்.

மன்னர்கள் அருளாளர்களாக உள்ளதைப் புலவர்கள் பரக்கச் சுட்டியுள்ளனர். மன்னர்கள் கடமை நெறி தவறாதவர்களாக, அறநெறியை உயிர் என ஓம்பியுள்ளவர்களாக புகழ்ச்சியில் மிகுந்த விருப்பம் உடையவர்களாக இருந்துள்ளனர்.

இகழச்சியில் தன்னிலை மறந்து நிலை குலைந்தும் நின்றுள்ளனர் என்பதைப் புலவர்கள் வழியாக அறியலாம்.வெற்றி தோல்விகளைப் புலவர்கள் தர்க்கநெறியில் மன்னனுக்கு சுட்டிக் காட்டியுள்ளனர். மன்னர்கள் செங்கோன்மை ஆட்சியே புரிந்துள்ளனர்.

மன்னர்களின் கொடுங்கோன்மையைத் துணிவுடன் எதிர்த்தும் உள்ளனர். தகுதியான போற்றுரைகளைப் புலவர்கள் மன்னர்களுக்கு வழங்கி உள்ளனர்.

போர் நெறியில் தக்கது இது; தகாதது இது; என உரைத்து உள்ளனர். பகையுணர்வை மன்னர்களிடம் வளர்க்காமல் தடுத்து உள்ளனர். கற்பு என்பது ஆணுக்கும் பெண்ணுக்கும் சமமாய் அமைய வேண்டும் என்கின்றனர். வள்ளல்களின் வள்ளல் தன்மையினைப் பெரிதும் பாராட்டி மகிழ்ந்துள்ளனர். கபிலர், பாரியின் எல்லா நிலைகளையும் தெளிவுறுத்திப் பாடியுள்ளார். மன்னனின், மகளுக்காக கபிலர் எடுத்த முயற்சிகள் அரிய வரலாறாகும்.

ஆற்றுப்படைப் புலவர்கள் தமிழகத்தில் வரலாற்றினைப் புறநானூறு போன்றே பறை சாற்றினர். திருமுருகாற்றுப்படைநக்கீரர் இறைவனுக்கும் மனிதனுக்கும் உள்ள தொடர்பினைத் தெளிந்து உரைக்கிறார். புறப்பாடல்கள் பற்றிய ஆராய்ச்சிகள் நீண்ட வரலாறு உடையதாகும். எனினும் புறச்செய்திகள் அதிகம் நிறைந்துள்ள புறநானூற்றுப் பாடல்கள் மட்டும் அதிக எண்ணிக்கையில் நோக்கப்பட்டுள்ளது.

உரையாசிரியர்கள் புறப்பாடல்களின் பொருளினைத் தெரிந்து உரைக்கின்றனர். புற ஆய்வாளர்கள் கருத்துரை கொண்டே மன்னர்களின் வரலாற்றினைத் தெளிவாக உணர முடியும். தொல்காப்பியத்தின் உரை வேற்றுமைகளை ஆய்வாளர்கள் நுணுகி ஆராய்ந்து உள்ளனர். திணைகள், புறப்பாடல்கள் அமைவிற்குச் சான்றுகளாக உள்ள காரணத்தால், இக்குறிப்புகள் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

புறப்பாடல் ஆய்வில் ஔவை துரைசாமிபிள்ளை, டாக்டர்.ந.சஞ்சீவி, பேரா.க.வெள்ளைவாரணனார், பேரா.ம.இராசமாணிக்கனார், அறிஞர் க.ப.அறவாணன் தகுதிசால் அறிஞர்களாகத் திகழ்கின்றனர். அதனால் இவ்வாய்வு அவர்களின் கருத்தியல்புகளை நோக்கியுள்ளது என்பது குறிப்பிடத்தக்கதாகும். எதிர்கால ஆய்வுக்களங்காகப் பின்வருவனவற்றைச் சுட்டலாம். சங்கப்புலவர்களின் புறப்பாடல்களில் பதிவும் பார்வையும் என்னும் இந்த ஆய்வின் மூலம் பின்வரும் ஆய்வுக் களங்கள் பரிந்துரைக்கப்படுகின்றன.

1. புறப்புலவர்களின் ஆளுமைத் திறன்
2. வரலாற்றியல் நோக்கில் புறப்பாடல்கள்
3. இனவரைவியல் கோட்பாட்டில் சங்கப்புலவர்களும் மன்னர்களும்
4. சங்ககால அரசியலும், தற்கால அரசியலும்
5. பொது நோக்கில் வள்ளல்களின் வாழ்வியல்கள்

என்ற தலைப்புகளில் பின்னாளில் ஆய்வுத் தளங்கள் அமைக்கலாம் என அறிய முடிகிறது.